# ஸ்ரீபிரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய
# ப்ரஸன்ன ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ர பாஷ்ய
# கிருதியின் தமிழ் அர்த்த விளக்கங்கள்



தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டவர்:
'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
தொலைபேசி: 8904458276

# ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீநிவாஸ தாஸர்

காலம்: 1905–1995
குரு: ஸ்ரீகோபால தாஸர் (ஸ்வப்ன லப்த)
ஆராதனை: ஆஷாட பௌர்ணமி
சரம ஸ்லோகம்:
விஸேஷ க்ரந்தாதி விரசிதம் அஸங்க்ய சிஷ்ய கோடி உத்தாரகம் |
ப்ரஸன்ன ஸ்ரீநிவாஸ பாதாராதகம் ப்ரஸன்ன ஸ்ரீநிவாஸதாஸ குரும்பஜே ||

தாஸரைப் பற்றிய மேலதிக தகவல்களுக்கு இங்கே சென்று பார்க்கலாம்.
https://madhwayati.blogspot.com/2019/07/prasanna-srinivasa-dasaru-sulapura-1995.html

***

## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| 1 | ஸ்ரீவிஷ்ணு சஹஸ்ர நாம ஸ்தோத்ர பாஷ்யம் – அர்த்தங்களுடன் | 3 |
| 2 | ஸ்ரீவிஷ்ணு சஹஸ்ர நாம ஸ்தோத்ர பாஷ்யம் - மூலம் மட்டும் – பாராயணத்திற்காக | 302 |

## ஸ்ரீபிரஸன்ன ஸ்ரீனிவாஸ தாஸர் இயற்றிய ப்ரஸன்ன ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாம ஸ்தோத்ர பாஷ்ய கிருதியின் தமிழ் அர்த்த விளக்கங்கள்

### அறிமுக ஸந்தி (முன்னுரை)

**கல்யாணதம ரூப அனக4 ஸுகு3ணார்ணவனெ**
**மாலக்ஷ்மிபதி பி3ரம்ம விஸ்வாக்2ய விஷ்ணு வஷட்கார**
**ஶீல ஜீவோத்தம வர வாயு பி3ரம்மதா4மன ஹ்ருத்**
**கீலாலஜாந்தஸ்ய பரமாத்ம கேஶவ நமஸ்தே ||ப**

அனந்த கல்யாண ரூபங்களைக் கொண்டவன்; தோஷங்கள் அற்றவன்; நற்குணங்களைக் கொண்டவன்; லட்சுமிபதி; உலகத்தை காப்பவன்; உலகின் அனைத்து செயல்களையும் செய்பவன்; வாயு பிரம்மர்களின் இதயத்தில் அந்தர்கதனாக இருப்பவன்; பரமாத்மனான கேசவனே, உன்னை வணங்குகிறேன்.

**ஶாஸ்த்ரேஷு பா4ரதம் ஸாரம் தத்ர நாம ஸஹஸ்ரகம்**
**ஸ்ரீஶ விஷ்ணோ நின்னானந்தரூப நாமக3ள தி3வ்ய**
**ஈ ஸஹஸ்ரநாம வர்ணக3ள் ப்ரதி3பாதி3ஸுதிவெ**
**ப்3ருஹதிஸஹஸ்ர போ4த்4யானந்த ரூபனே நமஸ்தே ||1**

சாஸ்திரங்களின் ஸாரமான பாரதம் - அதில் உள்ளதான ஆயிரம் பெயர்கள்; இவை - ஸ்ரீஷனான விஷ்ணுவே, உன்னுடைய அனந்தானந்த திவ்யமான இத்தகைய நாமங்களை, இந்த சஹஸ்ரநாமம் (இதில் உள்ள எழுத்துக்கள்) பிரதிபலிக்கின்றன. ப்ருஹதி சஹஸ்ரத்தினால் போற்றப்படுபவனான ஸ்ரீஹரியே, உன்னை வணங்குகிறேன்.

**அனுஷ்டுப் சந்தஸ்ஸு ஶ்லோக ரூபத3லி ஸங்கலித**
**விஷ்ணுவின ஸஹஸ்ரநாமக3ளு பா4ரததி3**
**ஆம்னாயவு ப்3ருஹதி சந்தஸ்ஸு ரிக்கல்லி ஸஹஸ்ர**
**ஈ நாமக3ள அர்த்த2ரூப ப்ருத2க் ப்ருத2க் விவ்ருத ||2**

அனுஷ்டுப் சந்தஸ் கொண்ட ஸ்லோகத்தினால் உள்ள விஷ்ணுவின் சஹஸ்ரநாமங்கள், பாரதத்தில் சொல்லி புகழப்பட்டுள்ளன; இவற்றை, ப்ருஹதி சந்தஸ் கொண்ட பத்யங்களில், இந்த சஹஸ்ர நாமங்களை அர்த்தத்தினை சொல்வதான தனித்தனியான பத்யங்களில் நான் விளக்குகிறேன்.

**ஸ்ரீ மஹாபா4ரததி3 அனுஷாஸன பர்வத3லி**
**பீ4ஷ்ம யுதி4ஷ்டி2ரகெ3 போ4தி3ஸித்3து3 ஈ நாமக3ளு**
**ஆமய ப4ய ப3ந்த4னாஷகவு ஷுப4ப்ரத3வு**
**ரமேஷ விஷ்ணுவ தி3வ்யோரு ப3ல ஸஹஸ்ரநாம ||3**

இத்தகைய மகாபாரதத்தில், அனுஷாஸன பர்வத்தில், யுதிஷ்டிரனுக்கு பீஷ்மாசார்யர் போதித்த நாமங்கள் இவை. அனைத்து வித பயங்களையும், சம்சார பந்தனங்களையும் அழிக்க வல்லவை இது. நலன்களைக் கொடுக்க வல்லவை. ரமேஷனான ஸ்ரீவிஷ்ணுவின் திவ்யமான, சிறப்பு வாய்ந்த பெயர்கள் இந்த ஸஹஸ்ர நாமங்கள்.

**மஹாவ்ரத இந்த்3ரக்ருத் யக்ஞதி3 விஶ்வாமித்ர ரிஷி**
**மஹிதா3ஸ ஸ்ரீஹரிகெ3 ப்ரியதமவாகி3ருவ**
**ப்3ருஹதீ ஸஹஸ்ரக3ள படி2ஸித3 புன: புன:**
**ஸ்ரீஹரிய தோஷிஸித3 அனுக்3ரஹ ஹொந்தி3த3னு ||4**

இந்திரன் செய்த மிகப்பெரிய யாக சமயத்தில், விஷ்வாமித்ர ரிஷியானவர், அங்கு வந்த மஹிதாஸ ஸ்ரீஹரியை, அவருக்கு மிகவும் பிடித்ததான ப்ருஹதி ஸஹஸ்ரங்களை திரும்பத் திரும்ப சொல்லி, அவரை வணங்கினார். ஸ்ரீஹரியின் அருளைப் பெற்றார்.

**விஶ்வாமித்ர ப்3ருஹதி ஸஹஸ்ர ருக்குக3ளல்லதெ3**
**விஶ்வவிஷ்ணு வஷட்காராதி3 ஸஹஸ்ர நாமக3ள்கு3**
**ஸ்ரீஸத்யஸந்தா3தி3 வைஷ்ணவோத்தமரு ஸூரிவர்யரு**
**விஶத3தி3 ப்ரதியொந்து3 ஶ3ப்3தா3ர்த்த2வ பேளிஹரு ||5**

இத்தகைய விஷ்வாமித்ர ரிஷிகள் கூறிய ப்ருஹதி ஸஹஸ்ர ரிக்குகள் அல்லாமல்; விஷ்வம் விஷ்ணுர் வஷட்கார என்று துவங்கும் ஸஹஸ்ர நாமங்களுக்கும்; ஸ்ரீஸத்ய ஸந்த தீர்த்தர் முதலான வைஷ்ணவோத்தமர்கள் / மிகச்சிறந்த தேவதைகள், அந்த ஒவ்வொரு சொல்லின் அர்த்தங்களையும், மிகவும் அற்புதமாக விளக்கினர்.

**அனக4கு3ணவாரிநிதி4 ஸ்ரீஶ ஸ்ரீவேத3வ்யாஸ**
**ஈ நாம அனுஷ்டுப் ஶ்லோகரூப மந்த்ரக்கெ ரிஷியு**
**கிருஷ்ண பரமாத்மனேவெ ப்ரதிபாத்3ய தே3வதெயு**
**அனிலஸ்த2 நாராயண வாஸுதே3வ மஹிதா3ஸ ||6**

அபாரமான அற்புத குணங்களின் கடலான, ஸ்ரீலட்சுமியின் தலைவனான, ஸ்ரீவேதவ்யாஸரே இந்த ஸஹஸ்ரநாமங்களுக்கு ரிஷி. இது அனுஷ்டுப் சந்தஸ்ஸில் இருக்கிறது. இதில் புகழப்படும் தேவதை யார் என்றால் - அது ஸ்ரீகிருஷ்ண பரமாத்மனே. அவனே முக்யபிராணந்தர்கதனான நாராயணன். வாஸுதேவன். மஹிதாஸன்.

**முந்து3 ப3ருவ பத்3யக3ளொள் ப்3ருஹதி ஸஹஸ்ரத3**
**அதி ஸங்க்ஷேப அபி4ப்ராய ப்ரத2மத: ஆமேலெ**
**ததி3தர அர்த்த2க3ளு ஸஹஸ்ரநாம ஶப்த3க்கு**
**அதி ஸங்க்ஷேப வ்யக்த ஹரிநுடிது3 நுடிஸித்3து3 ||7**

அடுத்து வருவதான பத்யங்களில், ப்ருஹதி ஸஹஸ்ரத்தின் மிகச் சுருக்கமான விஷயங்கள் முதலில் சொல்லப்பட்டுள்ளன. அதனை தொடர்ந்து வேறு சில அர்த்தங்களும் கூறப்பட்டுள்ளன. இவ்வாறாக ஸ்ரீஹரி சொல்லி, சொல்ல வைத்ததைப் போல, ஸஹஸ்ர நாமங்களுக்கும் அர்த்தங்கள் சொல்லப்பட்டுள்ளன.

**பத்[3]யபங்க்திக[3]ளோள் மொத[3]லு நமோ ஶப்[3]த[3] பர்யந்த**
**அதி ஸங்க்ஷேபதி[3] ஸூசிதவு ப்[3]ருஹதி தாத்பர்ய**
**தத[3]னந்தர ப[3]ருவுவு நாம ஶ[3]ப்[3]தா[3]ர்த்த[2]க[3]ளு**
**அதி ஸங்க்ஷேபிததி[3] த[3]ர்ஷிதவு ஸ்தோத்ர ரூபத[3]லி ||8**

இந்த பத்யங்களில் 'நமோ' என்ற சொல் வரும்வரை, அந்த நாமத்தின் பொருள் சுருக்கமாக சொல்லப்பட்டுள்ளது. அதன் பிறகு வருவது, அந்த நாமத்தின் வேறு அர்த்தங்கள். இவை அனைத்தும் ஸ்தோத்திர ரூபத்தில், சுருக்கமாக சொல்லப்பட்டுள்ளன.

**ப்ரணவாஷ்ட த்வாத[3]ஶ அக்ஷரி கா[3]யத்ரி பும்ஸூக்த**
**ஆம்னாய ருகா[3]தி[3]க[3]ள இதிஹாஸக[3]ளெரட[3]**
**க[4]ன பஞ்சராத்ர ஸாது[4] புராணக[3]ள பா[4]க[3]வத**
**கிருஷ்ணப்ரிய இவுக[3]ள ஸார ஈ ஸஹஸ்ர நாம ||9**

இந்த விஷ்ணு ஸஹஸ்ரநாமங்கள் ஆனவை இவை அனைத்தின் ஸாரமே ஆகும். அதாவது : பிரணவ மந்திரம், நாராயண அஷ்டாக்ஷர மந்திரம், வாஸுதேவ த்வாதாக்ஷர மந்திரம், காயத்ரி மந்திரம், புருஷ ஸூக்தம், ரிகாதி வேதங்கள், இதிகாசங்கள், சிறந்ததான பஞ்சராத்ரங்கள், புராணங்கள், பாகவத ஆகிய அனைத்தின் ஸாரமே ஆகும்.

**நூரு ப்ரகாரார்த்த[2] வித்[3]வத்ஸபெ[4]யல்லி தோரிஸித[3]**
**வரவாயு அவதார ஆனந்த[3] தீர்த்த[2]கெ[3] நமோ**
**ஸூரிவர்ய ஸத்யஸந்த[4] தீர்த்தா[2]ர்ய வ்யாக்[2]யாத்ரோ நமோ**
**நாரதா[3]னுக்[3]ரஹி ஸ்ரீனிவாஸாசார்யரிகெ[3] வந்தே[3] ||10**

வரவாயுதேவரின் அவதாரரான, இந்த விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கு (ஒவ்வொரு நாமத்திற்கும்) 100 அர்த்தங்கள் உள்ளன என்பதை சொல்லிக் காட்டிய ஸ்ரீஆனந்த தீர்த்தருக்கு நமோ. இதற்கு வ்யாக்யானம் எழுதிய, யதிகளில் சிறந்தவரான ஸ்ரீஸத்ய ஸந்த தீர்த்தருக்கு நமோ. நாரதரின் அருளைப் பெற்றவரான ஸ்ரீனிவாஸாசார்யருக்கும் என்னுடைய நமஸ்காரங்கள்.

**அஷ்ட த்[3]வாதஷ[3] ஷடக்ஷர கா[3]யத்ரி மந்த்ரக[3]ள**
**கிருஷ்ணமந்த்ர ஸஹ உப க்ரமோபஸம்ஹார ஜப**
**விஷ்ணு ஸஹஸ்ரநாம மத்து ஈ நுடிக[3]ள் பட[2]ண**
**கிருஷ்ணப்ரீத்யர்ப்பிபுது[3] மனோவாக்காய ஶுசியிந்த[3] ||11**

சுத்தமான மனம், வாக்கு, தேகத்துடன், உபகிரம, உபஸம்ஹார (துவக்க, இறுதியான ஸ்லோகங்களுடன்) மந்திரங்களுடன் - நாராயண அஷ்டாக்ஷர மந்திரம், வாஸுதேவ த்வாதச அக்ஷர மந்திரம், காயத்ரி மந்திரம், கிருஷ்ண மந்திரம் ஆகியவற்றை ஜெபம் செய்து, விஷ்ணு ஸஹஸ்ர நாம மற்றும் இந்த நுடிகளை படித்தால், ஸ்ரீகிருஷ்ணன் இவற்றால் மகிழ்கிறான்.

**ஸ்த்ரீயரு கிருஷ்ண மந்த்ரோபதி3ஷ்டர் படி2ஸெ அர்ஹரு**
**காயித்ர்யாத்3யுபதே3ஶ அனதி4காரி ஸர்வரிகு3**
**தி3வ்ய பா4ஷ்யரூப ஈ நுடி3க3ள ஶ்ரவண மாத்ர**
**காய வாங்மன ஶுசி ப4க்தி ஶ்ரத்3தா4 இரலேபே3கு ||12**

பெண்கள், கிருஷ்ண மந்திரத்தை உபதேசம் பெற்றவர்கள், காயத்ரி உபதேசத்திற்கு அதிகாரம் இல்லாதவர்கள் என அனைவரும், அழகான, பாஷ்ய ரூபமான இந்த நுடிகளை கேட்டால் மட்டுமே, அக புற என அனைத்தும் சுத்தம் ஆகிறது. இதற்கு ஸ்ரத்தா பக்தியும் அவசியம் இருக்க வேண்டும்.

**நம: பரஸ்ம்யை புருஷாய பூ4யஸே ஸது3த்3ப4வ**
**ஸ்தா2ன நிரோத4 லீலயா க்3ருஹீத ஶக்தி த்ருதீயா**
**ய தே3ஹினாம் அந்தத்4ருவாயானு பலப்4ய வர்த்மனே**
**ஸவிஷ ஆத்மாத்மவதாம் அதீ4ஶ்வர ஸ்த்ரயீமய: ||13**

நம:பரஸ்மை புருஷாய ... வர்த்மனே - இது பாகவத ஸ்லோகம் (2-4-12). ஸ்ருஷ்டி ஸ்திதி லயத்திற்கு காரணனான, அனைவருக்குள்ளும், அனைத்திலும் வ்யாப்தனான, ஸர்வோத்தமனான ஸ்ரீஹரிக்கு என்னுடைய வணக்கங்கள்.

**த4ர்மமயஸ்தபோமய: க3தவ்யரீகைரஜம் ஶம்**
**கராதி3பி4ர் விதர்க்ய லிங்கோ3 ப4க3வான் ப்ரஸீத3தாம்**
**நமஸ்த்ஸ்மை ப4க3வதே வாஸுதே3வாய வேத4ஸே**
**ஸ்ரீபா4க3வத த்விதீய ஸ்கந்த4 சதுர்த்த2 அத்4யாய ||14**

ஸ ஏஷ... ப்ரஸீததாம் - இது பாகவத ஸ்லோகம் (2-4-19). ஸ்ரீஹரியே ஸர்வோத்தமன். அனைத்து வேதங்களாலும் புகழப்படுபவன் அவனே. பிரம்மா, ருத்ர முதலான அனைத்து தேவதைகளாலும் வணங்கப்படுபவன். அத்தகைய ஸ்ரீஹரி திருப்தி அடையட்டும்.

**கு3ருக3 மத்4வக3 ஸரஸிஜாஸனபித ஸ்ரீஶ**
**விரஜ கல்யாணதம ஸுகு3ணாப்3தி4 ஸர்வகர்த்த**
**‘ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ’ ஸஹஸ்ர நாமனே நமோ**
**நீ ரசிஸி நுடிஸித்3து3 அர்ப்பிதவு ப்ரீதனாகோ3 ||ப**

**பல்லவி**

குருவந்தர்கதனான, மத்வாந்தர்கதனான, பிரம்மனின் தந்தையான, லட்சுமிதேவியின் பதியான, அனைத்து கல்யாண குணங்களின் கடலான, அனைத்தையும் செய்பவனான, ‘ஸ்ரீபிரஸன்ன ஸ்ரீனிவாஸனே’ , ஆயிரம் நாமங்களைக் கொண்டவனே - உனக்கு நமோ. நீயே என்னுள் இருந்து இயற்றச் செய்தது இது. இதனால் நீ திருப்தி அடைவாயாக.

**||முன்னுரையான முதலாம் ஸந்தி முடிந்தது||**
**||ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து||**

***

**இரண்டாம் ஸந்தி**

**கல்யாணதம ரூப அனக4 ஸுகு3ணார்ணவனெ**
**மாலக்ஷ்மிபதி பி3ரம்ம விஸ்வாக்2ய விஷ்ணு வஷட்கார**
**ஶீல ஜீவோத்தம வர வாயு பி3ரம்மதா4மன ஹ்ருத்**
**கீலாலஜாந்தஸ்ய பரமாத்ம கேஶவ நமஸ்தே ||ப**

பல்லவி:
அனந்த கல்யாண ரூபங்களைக் கொண்டவன்; தோஷங்கள் அற்றவன்; நற்குணங்களைக் கொண்டவன்; லட்சுமிபதி; உலகத்தை காப்பவன்; உலகின் அனைத்து செயல்களையும் செய்பவன்; வாயு பிரம்மர்களின் இதயத்தில் அந்தர்கதனாக இருப்பவன்; பரமாத்மனான கேசவனே, உன்னை வணங்குகிறேன்.

**1. ஸ்ரீவிஷ்வாய நம:**
**வர வாய்வந்தர்யாமி ‘விஶ்வ’ நமோ நமோ நினகெ3**
**சராசர ஸர்வ ஔஹொார வ்யாப்த நீ ஸர்வேஶ |**
**ப்ரக்ருதி நியாமக ஜக3ஜ்ஜன்மாதி3க3ள கர்த்த**
**கரு3ட3வாஹன பரமபூர்ண ஸ்வதந்த்ர ஸ்ரீஶ ||**

முக்யபிராணாந்தர்கதனான விஷ்வனே உனக்கு நமஸ்காரங்கள். சராசரங்கள் என அனைவருக்குள்ளும் / அனைத்திற்குள்ளும் நீ வ்யாப்தன். நீயே அனைவருக்கும் ஈசன். ப்ரக்ருதியை கட்டுப்படுத்துபவன் நீயே. ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய காரணன் நீயே. கருட வாகனனே. அனைத்திலும் பூரணனானவன். ஸ்வதந்த்ரன். ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவன்.

**2. ஸ்ரீவிஷ்ணவே நம:**
**விஶேஷதி3 சேஷ்டெக3ள மாடி3ஸுவவனு நீனு**
**அஸம உருப3லாதி3ரூப ‘விஷ்ணு’ நமஸ்துப்4யம்**
**தே3ஶகால வஸ்து ஸர்வ வ்யாபிஸிதெ3 த்ரிவிக்ரம**
**ஸுஶுபரூபதி3 பாத3க்ரமண மாடி3தி3 விஷ்ணோ ||**

அனைத்து செயல்களையும் செய்விப்பவன் நீயே. ஒப்பீடு இல்லாதவன். பலம் முதலான அனைத்தின் ரூபம் நீ. விஷ்ணுவே உன்னை வணங்குகிறேன். தேஷ, கால, வஸ்துகள் என அனைத்திலும் நீ வியாபித்திருக்கிறாய். மங்களகரமான, த்ரிவிக்ரம ரூபத்தில், மூன்றடி நிலம் அளந்தாய். விஷ்ணுவே.

**3. ஸ்ரீ வஷட்காராய நம:**
**ஜீவ ஸ்வரூப கு$^3$ண த்$^3$யுசித் ஸுகோ$^2$ஜஸ் ஸஹ ப$^3$ல**
**தி$^3$வ்யாபரோக்ஷ ப்ரதா$^3$த 'வஷட்கார' நமோ எம்பெ$^3$ ।**
**ஸர்வஸ்யவஶி மஹா ஐஷ்வர்ய ஞான யஷஸ் வீர்ய**
**ஸ்ரீவைராக்$^3$ய கு$^3$ணக்ரியா பூர்ணனாகி$^3$ உள்ளவனே ।।**

ஜீவர்களின் ஸ்வரூப, குணங்களுக்கு ஏற்ப, அவர்களுக்கு, சுகம், சக்தி, வலிமை, அபரோக்ஷம் என கொடுக்கும் 'வஷட்கார' உனக்கு நமோ என்கிறேன். அனைத்து இடங்களிலும் வ்யாப்தன். மிகப்பெரிய செல்வம், ஞானம், புகழ், வீரம், வைராக்கியம், குணம், செயல்கள் என அனைத்தும் பூரணமாக உள்ளவனே.

**4. ஸ்ரீபூதபவ்ய பவத்ப்ரபவே நம:**
**பூ$^4$தப$^4$வ்ய ப$^4$வத்கால ஜனக்கெ ஒள்ளெ ஐஶ்வர்ய**
**ப்ரத$^3$ 'பூ$^4$தப$^4$வ்ய ப$^4$வத்ப்ரப$^4$வே' நமோ நமஸ்தே ।**
**ஹிந்தி$^3$ன முந்தி$^3$ன ஈகி$^3$ன ஈ மூரு காலத$^3$ல்லு**
**எந்தி$^3$கு$^3$ பிரபு$^4$ நீனு மங்க$^3$ளப்ரத$^3$னு ஸ்ரீபதியு ।।**

இறந்த, நிகழ், எதிர்கால ஜீவர்களுக்கு நற்செல்வங்களை கொடுப்பவனான 'பூதபவ்ய பவத்பிரபுவே' உனக்கு நமஸ்காரங்கள். இந்த அனைத்து காலங்களிலும் நீயே அனைவரின் பிரபு (தலைவன்). நீயே மங்களப்ரதன். ஸ்ரீபதி.

**5. ஸ்ரீபூதக்ருதே நம:**
**ருத்$^3$ரன்ன ஸ்ருஷ்டிஸிதி$^3$ 'பூ$^4$தக்ருத்' நமோ நமோ எம்பெ$^3$**
**க்ஷுத்$^3$ர பூ$^4$தாதி$^3$க$^3$ளுபத்ரவ களெது$^3$ பொரெவி**
**மோத$^3$மய நீ ஸ்வதந்த்ர ஸர்வப்ராணிக$^3$ள ஸ்ரஷ்டா**
**'யதோவா இமானி' இந்தா ஶ்ருதி ஹொக$^3$ளுதிவெயு ।।**

ருத்ரரை படைத்தவனான 'பூதக்ருத்' உனக்கு நமஸ்காரங்கள். கெட்ட பூதங்களின் தொந்தரவுகளை களைந்து காக்கிறாய். ஆனந்தமயன். ஸ்வதந்த்ரன். அனைத்து ப்ராணிகளையும் காப்பவன். உன்னை ஸ்ருதியானது 'யதோவா இமானி' (ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயத்திற்கு நீயே காரணம் என்று தைத்திரிய உபநிஷத் வசனம்) என்று புகழ்கிறது.

**6. ஸ்ரீபூதப்ருதே நம:**
**ப்ராணி எல்லர போஷக 'பூ$^4$தப$^4$ருத்' நமோ நினகெ$^3$**

**நின்னாதீ4னவு ஸர்வ சராசர ஜக3த்து ஸ்வாமி**
**நீனேவெ ஸர்வ ஆதா4ரனாகி3ருதிஹி ஸ்ரீபதே**
**ஆம்னாய ஸ்ம்ருதி ஸித்3த4வு பி3ப4ர்த்யவ்யய ஈஶ்வர**

ப்ராணிகள் அனைவரின் போஷகனான (காப்பவன்) 'பூதப்ருத்' உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்து சராசர ஜகத்தும் உன் அதீனத்திலேயே இருக்கிறது. ஸ்வாமி, நீயே, அனைத்திற்கும் ஆதாரனாக இருக்கிறாய். ஸ்ரீபதி. ஸ்ருதிகள் உன்னையே புகழ்கின்றன. அனைத்தையும் தரித்திருப்பவன். ஈஸ்வரன்.

**7. ஸ்ரீபாவாய நம:**
**ஆனந்த3 நின்ன ப4ருத்யரிகீ3வி 'பா4வ' நமோ எம்பெ3**
**ஞான ரக்ஷண காந்திதா3த ஸர்வக3னாகி3ருவி**
**இன ஸோம தாரெ மொத3லாஹவரொளு ப்ரவேஶிஸி**
**நீனு அவர்க3ள பா4ஸகனாகி3ஹியோ ஸ்வதந்த்ர ||**

உன் பக்தர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறாய். 'பாவ' னே உனக்கு நமஸ்காரங்கள். ஞானத்தைக் கொடுப்பவனே. ஒளியை (புகழை) கொடுப்பவனே. அனைத்து இடங்களிலும் வ்யாப்தனானவன். சூரிய, சந்திர, நட்சத்திரங்கள் என இத்தகையவர்களில் நுழைந்து, நீயே அவர்களுக்கு ஒளி கொடுப்பவனாக இருக்கிறாய். ஸ்வதந்த்ரனே.

**8. ஸ்ரீபூதாத்மனே நம:**
**ஜக3ன்னாத2 ஸர்வ ஜக3த்வாஸ 'பூ4தாத்ம' நமஸ்தே**
**வாகீஶ ஶிவ விப ஶக்ராதி3 ப்ராணி ஸர்வ ஜக3த்**
**திகெ3 நியாமக ஶாஸகனு ஸ்வாமியு நீனேவெ**
**அக4தூ3ர கு3ணபூர்ண ஆனந்த3 ப்ரசுர ||**

ஜகன்னாதனே. அனைத்து ஜகங்களிலும் வசிப்பவனே. பூதாத்மனே – உனக்கு நமஸ்காரங்கள். பிரம்மா, சிவ, கருட, இந்திர முதலான அனைவருக்கும், மற்றும் அனைத்து உலகிற்கும் நியாமகன். அனைவரையும் ஆள்பவன். ஸ்வாமி நீயே. அனைவரின் கஷ்டங்களையும் போக்குபவன். குணங்கள் நிறைந்தவன். ஆனந்தமயன்.

**9. ஸ்ரீ பூதபாவனாய நம:**
**ஸர்வ ப்ராணிக3ள உத்பாத3கனு 'பூ4தபா4வன'**
**ஸர்வதா3 நமோ நினகெ3 ப்ராணி மனோ ஸஞ்சரனே**
**ஸர்வ ப்ராணி மனோவ்ருத்தி மாடி3ஸுவி காரயித**
**ஸர்வபூ4தக3ள ஸத்தா ப்ரவ்ருத்தாதி3க3ள தா3தா ||**

அனைத்து பிராணிகளையும் படைப்பவன். பூதபாவனனே உனக்கு நமஸ்காரங்கள். பிராணிகளின் மனங்களில் சஞ்சரிப்பவனே. அனைவரின் மனதின் செயல்களை செய்விப்பவன் நீயே. அனைவருக்கும் சுக துக்கங்களைக் கொடுப்பவன் நீயே.

**10. ஸ்ரீ பூதாத்மனே நம:**
**நிர்தோ$^3$ஷ ஸுபவித்ர ரூப ‘பூதாத்ம’ நமோ எம்பெ$^3$**
**ஶஶ்வத் ஸுபவித்ர மூல அவதார ஸர்வத$^3$லு**
**ஸதா$^3$ அபஹத பாப்மா நிர்லிப்த நீனு ஸம்போ$^4$க$^3$**
**‘ப்ராப்திசேன்ன வைஷேஷ்யாத்’ எந்து நிர்ணய ஸூத்ரத$^3$ல்லி ||**

தோஷங்கள் அற்றவனே, பவித்ரமான ரூபத்தைக் கொண்ட ‘பூதாத்மா’ உனக்கு நமஸ்காரங்கள். மூல ரூபம், அவதார ரூபங்கள் என அனைத்திலும், எவ்வித குறைகளும் இல்லாதவன். நிர்லிப்தனாக இருப்பவன் (எதிலும் சம்பந்தப்படாமல் இருப்பவன்). ஸம்போக ப்ராப்திசேன்ன வைஷேஷ்யாத் - என்று ஸூத்ர பாஷ்யத்தில் இதுவே சொல்லபட்டிருக்கிறது.

**11. ஸ்ரீ பரமாத்மனே நம:**
**ப$^4$க்தருக$^3$ளல்லி ப்ரீத அனுக்$^3$ரஹ மாடு$^3$வவ**
**ப$^4$க்தேஷ்டப்ரிய விஷய ‘பரமாத்மனே’ நமஸ்தே**
**‘நத்$^3$யைவா கேஶவாத் பரமம்’ ஸ்ரீஶனெ ஸர்வோத்தமனு**
**கீ$^3$தோக்தியு ‘மத்த: பரதர நான்யத் கிஞ்சித$^3$ஸ்தி’ ||**

பக்தர்களிடம் அன்பாக இருப்பவன். அவர்களுக்கு அருள்பவன். பக்தர்களால் விரும்பப்படும் விஷயம் நீயே - பரமாத்மனே, உனக்கு நமஸ்காரங்கள். கேசவனைவிட உயர்ந்தவன் வேறு யாரும் இல்லை (மகாபாரத வசனம்). கீதை வசனம் -> என்னை விட உயர்ந்தவர் வேறு யாரும் இல்லை (7-7).

**12. ஸ்ரீமுக்தானாம் பரமாயை கதயே நம:**
**முக்தருக$^3$ள பரம ப்ராப்யனாகி$^3$ இருவி நீ**
**முக்தானாம் பரமாக$^3$தயே நமஸ்தே வ்யாஸ உக்தி**
**‘முக்தோபஸ்ருஷ்ட$^2$ வ்யபதே$^3$ஶாச்ச’ ஸூத்ர நிர்ணயவு**
**மத்து ‘பரஞ்யோதி ரூபஸம்ப$^3$த்ய’ இத்யாதி$^3$க$^3$ளு**

முக்தர்கள் அடையும் பொருளாக நீயே இருக்கிறாய். முக்தர்களுக்கான பரம கதியே, உனக்கு நமஸ்காரங்கள். ‘முக்தோபஸ்ருபவ்யபதேஷாத்’ மற்றும் ‘பரஞ்சோதி ரூபஸம்பத்ய’ என்னும் பிரம்ம ஸூத்ர பாஷ்யங்களும் இதையே சொல்கிறது.

**13. ஸ்ரீ அவ்யயாய நம:**
**அஹல்ய அவினாஶ கு$^3$ணரூப ‘அவ்யய’ நமோ**
**கல்யாண கு$^3$ணகு$^3$ணார்ணவனு எந்தி$^3$கு$^3$ நீனு**

**மாலின்ய விகாராதி[3] நால்குவித[4] நாஶவில்லவு**
**எல்ல கு[3]ணரூபக[3]ளு ஸம்பூர்ணவு ஶாஶ்வதவு**

அழகான, அழிவில்லாத, குண ரூபங்களைக் கொண்ட 'அவ்யய' னே உனக்கு நமஸ்காரங்கள். கல்யாண குணங்களை, எப்போதும் கொண்டவன் நீ. விகாரம் முதலான நான்கு வித அழிவுகள் (தோற்றம், அழிவு, வளர்ச்சி, குறைவு) இல்லாதவன் நீ. உன்னிடம் இருக்கும் அனைத்து குண ரூபங்களும் முழுமையானவை மற்றும் அவை நிரந்தரமானவை.

**14. ஸ்ரீபுருஷாய நம:**
**ப[3]ஹுவாத[3] ஈப்ஸிதார்த்த[2] ஈவி 'புருஷனே' நமோ**
**பஹள ஸாத[4]ன கெ[3]ய்ஸி அரிஸமூஹவ கேளி**
**ஸ்ரீஹரே நீ பூர்ணமோக்ஷாக்ய ப[2]லகொடு[3]வவனு**
**மஹார்ஹபூர்ணைஶ்வர்ய ரூப ஹ்ருஷிகேஶ ஸர்வக்ஞ**

அனைத்து விதமான விருப்பங்களையும் (புருஷார்த்தங்களையும்) நிறைவேற்றும், புருஷனே உனக்கு நமஸ்காரங்கள். அதிகமான ஸாதனைகளை புரிந்த உன் பக்தர்களுக்கு நீ மோட்சம் முதலான பலன்களைக் கொடுக்கிறாய். அபரிமிதமான, முழுமையான ஐஸ்வர்யங்களைக் கொண்ட ரூபத்தைக் கொண்டவன். ஹ்ருஷிகேஷன். ஸர்வக்ஞன்.

**15. ஸ்ரீ ஸாக்ஷிணே நம:**
**ஸாக்ஷாத்[3]த[3]ர்ஶியு 'ஸாக்ஷி' நினகெ[3] நமோ எம்பே[3]னு**
**ஸர்வாத்[4]யக்ஷனு ஸர்வதோமுக[2]னு ஸ்ரீ மஹாவிஷ்ணோ**
**பூ[4]தாந்தராத்மா நீனு ப்ராக்ருத கு[3]ண ரஹிதனு**
**ஸ்ருதி ஸ்ம்ருதிக[3]ளு நீ ஸாக்ஷி என்னுதிவெயோ ஸ்ரீஶ**

சாட்சாத்தாக தரிசனம் கொடுப்பவன் 'ஸாக்ஷியே' உனக்கு நமஸ்காரங்கள். ஸர்வோத்தமன். அனைத்து இடங்களிலும் வ்யாபித்து இருப்பவன். ஸ்ரீமகாவிஷ்ணு. அனைத்து சேதனர்களிலும் ஆத்மனாக உள்ளே இருப்பவன் நீ. ப்ராக்ருத குணங்களான ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் இல்லாதவன். ஸ்ருதி, ஸ்ம்ருதிகள் உன்னை ஸாக் ஷி என்று அழைக்கின்றன. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே.

**16. ஸ்ரீ க்ஷேத்ரக்ஞாய நம:**
**ஜீவ ஶரீரவ திளித[3] 'க்ஷேத்ரக்ஞ' நமோ நமோ**
**ஜீவ ஶரீராதி[3] ஸர்வக்ஷேத்ர வ்யாப்தியாகி[3]ருவி**
**ஸர்வக்ஞ ஸர்வ நியாமகனு நீனேவெ அன்யரல்ல**
**ஜீவனிகெ[3] க்ஷேத்ரக்ஞத்வ அனுபபன்ன அபூர்ண**

ஜீவ சரீரங்களில் இருந்து, அவற்றை அறிந்தவனே 'க்ஷேத்ரக்ஞனே' உனக்கு நமஸ்காரங்கள். ஜீவ சரீரங்கள் மற்றும் அனைத்து க்ஷேத்திரங்களில் வ்யாப்தனாக இருக்கிறாய். ஸர்வக்ஞன். அனைத்தையும் நடத்துபவன் நீயேதான், வேறு யாரும் அல்ல. ஜீவனுக்கு க்ஷேத்ரக்ஞத்வத்தை அருள்பவன், யோக்யதைக்கேற்ற பலன்களைக் கொடுப்பவன். முழுமையற்ற நிலையைக் கொடுப்பவன்.

**17. ஸ்ரீ அக்ஷராய நம:**
**நாஶரஹிதனு நீனு 'அக்ஷரனு' நமோ நமோ**
**ஶாஶ்வத வைகுண்டாதி3யலி ரமிபி ஸ்வரமண**
**ஈஶ ஸர்வாதா4ர நின்னதீ4னே அவியோகி3 ரம்மே**
**ஸ்ரீஶ நின்னலி ஓத ப்ரோதவாகி3ஹுது3 ஸ்ரீதத்வ ||**

அழிவில்லாத நீயே 'அக்ஷரன்' உனக்கு நமஸ்காரங்கள். நிரந்தரமாக (நிரந்தரமான) வைகுண்ட முதலான தாமங்களில் நிலைத்திருக்கிறாய். எதற்கும் யாரையும் எதிர்பார்க்காத ஸ்வரமணன். அனைவருக்கும் தலைவன். அனைவருக்கும் ஆதாரமானவன். உன் நியத பத்னியான லட்சுமிதேவி, உன் அதீனமாகவே இருக்கிறாள். லட்சுமிதேவியின் தலைவன். ஸ்ரீதத்வமானது, உன்னில் (குறுக்கும் நெடுக்குமாக) எங்கும் நிறைந்திருக்கிறது.

**18. ஸ்ரீ யோகா3ய நம:**
**யக்ஞாதி3 கர்மயோஜனெமாள்ப 'யோக3' நமோ எம்பெ3**
**ஸுத்4யான மொத3லாத3 கர்மக3ள ப்ரேரிஸுவி நீ**
**காயமனஸிஜ தோ3ஷ மத்து ஸம்ஸார நிவ்ருத்தி**
**நித்ய ஸுக2 மோக்ஷக்கெ உபாயனாகி3ருவி நீனே**

யக்ஞம் முதலான கர்மங்களுக்கான செயல்களை செய்விப்பவனான 'யோக'னே உனக்கு நமஸ்காரங்கள். தியானம் முதலான கர்மங்களை செய்யும்படி செய்க்கிறாய். உடல், மனம் ஆகியவற்றிற்கு வரும் நோய்களின் பரிகாரகன் நீயே. சம்சார சாகரத்தை தாண்டச் செய்கிறாய். நித்ய ஸுகமான மோட்சத்தை அருள்பவன் நீயே.

**19. ஸ்ரீ யோக3விதா3ம் நேத்ரே நம:**
**வேத3 ஸர்வவு யோக3 வ்ருத்தியலி மாத4வன்னேவெ**
**ப்ரதிபாதி3ஸுதிவெ எந்து3 அரித ப4க்தரிகெ3**
**மோத3வீவியோ யோக3விதா3ம் நேதா நமோ நினகெ3**
**ப4க்தரிகெ3 மோக்ஷாக்2ய ஸுப2ல ப்ராபகனு நீனே**

வேதங்கள் அனைத்தும் மாதவனையே புகழ்கின்றன என்று அறிந்த பக்தர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும் 'யோகவிதாம் நேதனே' உனக்கு நமஸ்காரங்கள். பக்தர்களுக்கு மோட்சமே முதலான பலன்களைக் கொடுப்பவன் நீயே.

**20. ஸ்ரீ ப்ரதா4ன புருஷேஷ்வராய நம:**

**ப்ரக்ருதிகு3 புருஷனிகு3 ஈஶனாகி3ருவந்தா2**
**'ப்ரதா4ன புருஷேஶ்வர' நமோ நமோ எம்பெ3 ஸ்ரீஶ**
**ப3ந்த4 ஹேது ப்ரக்ருதிகு3 ப3த்3த4மான ஜீவனிகு3**
**ஸத்தாதிதா3தனு ப்ரவர்த்தக ஸ்வாமி நமோ ஆத்மா**

ப்ரக்ருதிக்கும், புருஷர்களுக்கும் தலைவனாக இருப்பவனே 'ப்ரதான புருஷே ்வரனே' உனக்கு நமஸ்காரங்கள். ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. சம்சார பந்தனங்கள் இல்லாத ப்ரக்ருதிக்கும், சம்சார பந்தனங்கள் உள்ள ஜீவனுக்கும் ஸத்தா (இருப்பு) முதலான அனைத்தையும் கொடுத்து, அவர்களை வழிநடத்துபவன். ஸ்வாமியே உனக்கு நமஸ்காரங்கள். ஆத்மனே.

**21. ஸ்ரீ நாரஸிம்ஹ வபுஷே நம:**

**'நாரஸிம்ஹவபு' நமோ த்4யாயேன் ந்ருஸிம்ஹ முரு வ்ரு**
**த்த ரவி த்ரினேத்ரம் ஜானுப்ரஸக்த கரயுக3 ம**
**தாபராப்4யாம் சக்ரம்த4ரஞ்ச த3த4தம் ப்ரியயா ஸ**
**மேதம் திக்3மாம்ஶு கோட்யதி4க தேஜஸ் ஸமக்3ர்ய ஶக்திம்**

'நாரஸிம்ஹவபு' வே உனக்கு நமஸ்காரங்கள். சூரியனைப் போல சிவந்த 3 கண்கள், அகன்ற தோள்கள்; அதற்கு அருகில் இரு நீளமாக கைகள்; அதில் சக்ராதி ஆயுதங்கள்; லட்சுமிதேவியுடன் அமர்ந்திருக்கும்; மிக அதிகமான தேஜஸ்ஸினைக் கொண்டவனான நரசிம்ம ஸ்வாமியை நாம் தியானம் செய்வோம்.

**22. ஸ்ரீ ஸ்ரீமதே நம:**

**ஸம்பத்துவந்தனே ஸ்ரீமான் நமோ நமோ நமோ எம்பே3**
**ஶோபனைஶ்வர்ய ஸுந்த3ர அமித உஜ்வலரூப**
**'ஸ்ரீபதே' ப்4ருகு3ராம வாமன வேத3வ்யாஸ ஹரி**
**அபரிமித ஸுகக்ஞான ப3லாதி கு3ணபூர்ண**

செல்வந்தனே. ஸ்ரீமந்தனே. உனக்கு நமஸ்காரங்கள். ஒளிர்வதான செல்வங்களைக் கொண்டவனே. அழகானவனே. எல்லைகள் அற்றவனே. ஒளிர்பவனே. ஸ்ரீபதியே. ப்ருகுராமனே. வாமனனே. வேதவ்யாஸனே. ஹரியே. அபாரமான ஸுக, ஞான, வலிமை முதலான குணங்களை முழுமையாகக் கொண்டவனே.

**23. ஸ்ரீ கேஶவாய நம:**

**பி3ரம்மனிகு3 லக்ஷ்மிகு3 கீர்த்தி கொடு3வ ஸ்வாமி நீனு**
**அஹர்னிஷி ஸ்மர்தவ்ய 'கேஶவ' நமஸ்தே நமஸ்தே**
**மஹாது3ஷ்ட கேஶியன்ன கொந்தி3யோ ஜனார்த்த4னனே**
**பி3ரம்ம ஈஶான நியாமக மஹார்ஹ ப3லஶாலி**

பிரம்மனுக்கும், லட்சுமிதேவிக்கும் புகழினைக் கொடுக்கும் ஸ்வாமி நீயே. எப்போதும் நினைக்கத் தக்க (நினைக்க வேண்டியவனே) கேஶவனே. உனக்கு நமஸ்காரங்கள். அசுரனான கேஶியை கொன்றவனே. ஜனார்த்தனனே. பிரம்ம, ஈஷான ஆகியோரின் நியாமகனே (அவர்களை வழி நடத்துபவனே). பலசாலியே.

**24. ஸ்ரீ புருஷோத்தமாய நம:**
**ப$^3$ஹுப்ரத$^3$னெ உத்க்ருஷ்ட ‘புருஷோத்தமனே’ நமோ**
**பி$^3$ரம்ம ஈஶானாதி$^3$க$^3$ளிகு$^3$ முக்த அமுக்தரிகு**
**மஹாலட்சுமிகு$^3$ உத்தமனு பூ$^4$தி$^1$த$^3$ உதா$^3$ரனு**
**மஹைஶ்வர்ய பூர்ண கல்யாணதம தூ$^3$ப ஸர்வேஶ**

அனைத்தையும் கொடுப்பவனே. சிறந்தவனே. புருஷோத்தமனே உனக்கு நமஸ்காரங்கள். பிரம்ம ஈஷான ஆகியோருக்கும், முக்த அமுக்த ஜீவர்களுக்கும், ஸ்ரீலட்சுமிதேவிக்கும் என அனைவரை விடவும் உத்தமனே. கருணை கொண்டவனே. மிகச்சிறந்த செல்வங்களை கொண்டவனே. மங்கள கல்யாண ஸ்வரூபனே. அனைவருக்கும் தலைவனே.

**25. ஸ்ரீ ஸர்வாய நம:**
**ஸர்வப்ராணிக$^3$ள ஸ்வாமி ‘ஸர்வனே’ நமோ நினகே$^3$**
**ஸர்வஸ்ருஷ்டாபாதா அத்தா நியாமகனாகி$^3$ருவி**
**ஸர்வனெந்தெ$^3$னிஸுவியோ ஸர்வத$^3$லி வ்யாப்த நீனு**
**ஸர்வஶப்த$^3$க$^3$ளிந்த$^3$ முக்$^2$ய வ்ருத்தியலி வாச்யனு**

அனைத்து பிராணிகளின் தலைவனே. ஸர்வனே. உனக்கு நமஸ்காரங்கள். அனைவரின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயங்களுக்கு நீயே காரணம். ஸர்வ என்று அழைக்கப்படுகிறாய். அனைத்திலும் வ்யாப்தனாக இருக்கிறாய். ஸர்வ ஷப்த வாச்யன் (அனைத்து எழுத்துக்களாலும் நீயே அழைக்கப்படுகிறாய்).

**26. ஸ்ரீ ஶர்வாய நம:**
**ஜக$^3$த்தின ஸுக$^2$ க்ரீடா$^3$ நடெ$^3$ஸுவ ‘ஶர்வ’ நமோ**
**ஸுக$^2$ ஸ்வரூப நீ ப்ரவ்ருத்தி மாள்பெ காணிஸத$^3$லெ**
**ப$^4$க்தாரி ஸூரத்$^3$விட் அக$^4$சாரிது$^3$ஷ்ட ப$^3$லக்ரூர**
**அத$^4$மரன்னு ஸம்ஹார மாடு$^3$வியோ ஶர்வ ஸ்வாமி**

உலகின் சுக செயல்களை செய்விக்கும் ‘ஶர்வனே’ உனக்கு நமஸ்காரங்கள். நீ சுக ஸ்வரூபமாக இருக்கிறாய். அனைத்தையும் நடத்துகிறாய். காட்டிக் கொள்ளாமல், பக்தர்களின் கஷ்டங்களை பரிகரிக்கிறாய். அதமர்களை சம்ஹாரம் செய்கிறாய். ஸ்வாமியே.

**27. ஸ்ரீ ஶிவாய நம:**

**அதிஶயானந்தா[3]னுப[4]வி 'ஶிவனே' நமோ எம்பே[3]**
**ஜக[3]த்விலக்ஷண பூர்ணஸுக மங்க[3]ல ஸ்வரூப**
**ப[4]க்தரிகெ[3] மங்க[3]லத[3] முக்தரிகெ[3] நித்ய ஸுக[2]**
**வர்த்திஸுவி ஶிவரூபி ஶிவத ஸ்ரீபூ[4]ரமண**

அதிசயமான (அபாரமான) ஆனந்தத்தை அனுபவிப்பவனே - ஶிவனே - உனக்கு நமஸ்காரங்கள். உலகிலிருந்து வேறுபட்டவனே. முழுமையான சுகத்தை கொண்டவனே. மங்கல ஸ்வரூபனே. பக்தர்களுக்கு மங்கல சுகத்தையும்; முக்தர்களுக்கு நித்ய சுகத்தையும் கொடுப்பவனே. ஶிவ ரூபியே. ஸ்ரீ-பூ- ஆகியோரின் தலைவனே.

**28. ஸ்ரீ ஸ்தா[2]ணவே நம:**
**ஸ்தா[2]யி ஸர்வத்ர நீ விகாரவில்லதெ[3] இருதியோ**
**மத்து அணுரூபனு 'ஸ்தா[2]ணு' நமோ எம்பெ[3] நினகெ[3]**
**ஸ்தி[2]ரத்வதி[3]ந்த[3]லி நீனு 'ஸ்தா[2]ணு' எந்தெ[3]னிஸுவியோ**
**ஸர்வத்ர திஷ்ட ப[3]லாதி[3]க[3]ளல்லி ந்யூனதெ இல்ல**

நிரந்தரமானவனே. அனைத்து இடங்களிலும் நீ எவ்வித மாற்றங்களும் இல்லாமல் நிறைந்திருக்கிறாய். அணு ரூபனாக இருக்கிறாய். ஸ்தாணுவே உனக்கு நமஸ்காரங்கள். நிரந்தரமாக இருப்பதால், நீ ஸ்தாணு என்று அழைக்கப்படுகிறாய். அனைத்து இடங்களிலும் நீ வ்யாபித்திருக்கிறாய். வலிமை முதலான உன் குணங்களில் எவ்வித குறைகளும் இல்லை.

**29. ஸ்ரீபூ[4]தாத[3]யே நம:**
**ப்ராணிக[3]ள காரணனே 'பூ[4]தாதி[3]' நமோ நினகெ[3]**
**நீனேவெ ஸர்வப்ராணிக[3]ள ஜன்மாதி[3] காரணனு**
**நீனே ஸர்வ ப்ராணிக[3]ள ப[4]க்ஷகனு எந்தி[3]ஹுது**
**நிர்ணய ஸூத்ர அத்தா சராசர க்[3]ரஹணாத் எந்து[3]**

ப்ராணிகளுக்கு காரணமானவனே. பூதாதி-யே உனக்கு நமஸ்காரங்கள். அனைத்து ப்ராணிகளின் ஜென்மாதி அனைத்திற்கும் காரணன் நீயே. அத்தா சராசர க்ரஹணாத் - என்று, பிரம்ம ஸூத்ர பாஷ்யமானது - நீயே அனைத்து பிராணிகளையும் உண்பவன் என்று சொல்கிறது.

**30. ஸ்ரீ நித[4]யே நம:**
**ப்ராணிக[3]ள ஸ்தா[2]னரூப 'நிதி[4]' நீனு நமோ எம்பெ[3]**
**'நிதீ[4]யதே ஹ்ருதி[3] ஸஜ்ஜனைரிதி நிதி[4]:' ஹீகெ[3]ந்து[3]**
**இஹுது[3] ஸ்ரீ ஸத்யஸந்தா[4]ர்யர வ்யாக்[2]யானவு**
**ப்ராணிக[3]ள நின்னல்லி இட்டுகொம்பி[3] ப[4]க்த நிதி[4]யே**

ப்ராணிகளின் இருப்பிடம் 'நிதி' நீயே உனக்கு நமஸ்காரங்கள். ஸ்ரீ ஸத்ய ஸந்தரின் வ்யாக்யானத்தில் – 'நிதீயதே ஹ்ருதி ஸஜ்ஜனைரிதி நிதி:' என்று இருக்கிறது. பிராணிகளை உன்னிடம் வைத்துக் கொள்கிறாய். பக்தர்களின் நிதியே.

**31. ஸ்ரீ அவ்யயாய நம:**

**நாஶவில்லத3 நீனு 'அவ்யய' நமோ நமோ எம்பெ3**
**நீனு ஸவித்ரு மண்ட3ல மத்4யவர்த்தி நாராயண**
**ஶஶ்வதே3க ப்ரகார நின்ன ப3லாதி3 கு3ணக3ளு**
**அக்ஷேண அவிகார நித்யவு பூர்ண ஸர்வோத்க்ருஷ்ட**

அழிவில்லாத நீ 'அவ்யய' என்று அழைக்கப்படுகிறாய். உனக்கு நமஸ்காரங்கள். 'ஸவித்ரு மண்டல மத்யவர்த்தி நாராயண' நீயே. உன்னுடைய பல முதலான குணங்கள் என்றும் குறைவதில்லை, மாற்றம் கொள்வதில்லை, நித்யமானவை. முழுமையானவை மற்றும் மிகச் சிறந்தவை.

**32. ஸ்ரீ ஸம்ப4வாய நம:**

**இச்சோத்பத்திகா3ஶ்ரயனே 'ஸம்ப4வ' நமோ நினகெ3**
**மச்ச கச்சப வராஹ ந்ருஸிம்ஹாதி3 ரூபக3ளு**
**ஸ்வேச்சா அவதாரக3ள ஆவிர்ப4விஸி ஆகா3க3**
**ப்ரோச்ச ஸுக2 தேஜஸ் ப3ல ஸ்வரூப நமஸ்தே ஹரே**

விருப்பங்களை உருவாக்க காரணமாக இருப்பவனே. ஸம்பவனே உனக்கு நமஸ்காரங்கள். மச்ச, கூர்ம, வராக, நரசிம்மாதி ரூபங்கள் நீயே. தன் இஷ்டத்திற்கேற்ப அவதாரங்கள் மூலமாக தோன்றிகிறாய். ஸுகமயமானவன். தேஜஸ் கொண்டவன். பல ஸ்வரூபன். ஸ்ரீஹரியே உனக்கு நமஸ்காரங்கள்.

**33. ஸ்ரீ பா4வனாய நம:**

**ஞான நியமன மாள்ப 'பா4வன' நமோ விஷய**
**ஸன்னிகர்ஷதி3 மனவ பரிணமிஸி நீ அல்லி**
**ஞான புட்டிஸி ஒத3கு3வி அபி4ப்ராயக3ளன்னு**
**நினகெ3 நமோ ஸங்கர்ஷண வாஸுதே3வ ப்ரத்3யும்ன**

ஞானத்தைக் கொடுப்பவனே 'பாவன' னே உனக்கு நமஸ்காரங்கள். விஷயத்தை சுருக்கி, மனதை உன் வசம் இழுத்து, அதில் ஞானத்தை உருவாக்கி, அங்கு அபிப்பிராயங்களை கொடுப்பாய். உனக்கு நமஸ்காரங்கள். ஸங்கர்ஷணனே. வாஸுதேவனே. பிரத்யும்னனே.

**34. ஸ்ரீ ப4த்ரே நம:**

**ப4க்த க்ருத ஸ்துதிக3ள ஸ்வீகரிஸி இட்டுகொம்ப3**
**ப4ர்த்தா நமோ த3யதி3 நீ ஒப்பி இட்டுகோ ஈ ஸ்தோத்ர**

**ப$^4$க்தவத்ஸல ஞான ஸுக$^2$ புஷ்டி ப்ரதா$^3$தனு ஸ்ரீ**
**ஸீதாரமண ஸ்ரீகிருஷ்ண வேத$^3$வ்யாஸ ஸ்ரீநிவாஸ**

பக்தர்கள் செய்யும் ஸ்துதிகளை ஏற்று வைத்துக் கொள்ளும் 'பர்த்தா' உனக்கு நமஸ்காரங்கள். இந்த ஸ்தோத்திரங்களை நீ கருணையுடன் ஒப்புக் கொண்டு ஏற்றுக் கொள். பக்தவத்ஸலனே. ஞான, சுகங்களைக் கொடுப்பவனே. ஸ்ரீஸீதா ரமணனே. ஸ்ரீகிருஷ்ணனே. வேதவ்யாஸனே. ஸ்ரீனிவாஸனே.

**35. ஸ்ரீப்ரப$^4$வாய நம:**
**ஸர்வ விஷயதி$^3$ ப்ரக்ருஷ்ட ஞானவந்த 'ப்ரப$^4$வ'**
**ஸர்வதா$^3$ நமோ வ்ருஷப$^4$ ஸனத் குமார ஆத்ரேய**
**ஸவித்ரு ஶஶியலி ஜ்வலிப ஹம்ஸ ஹயமுக$^2$**
**கவிகே$^3$ய ஸ்ரீவ்யாஸ ரக்ஷமாம் தே$^3$ஹிமே ஸுபு$^3$த்$^3$தி$^4$ம்**

அனைத்து விஷயங்களாலும் சிறந்த ஞானம் கொண்டவனே. 'ப்ரபவ' உனக்கு நமஸ்காரங்கள். வ்ருஷபனே. ஸனத் குமாரனே. ஆத்ரேயனே. ஸவித்ரு என்னும் சூரியனில் ஜொலிப்பவனே. ஹம்ஸனே. ஹயக்ரீவனே. கவிஞர்களால் போற்றப்படுபவனே. ஸ்ரீவ்யாஸனே. என்னை காப்பாயாக. எனக்கு நல்புத்தியைக் கொடுப்பாயாக.

**36. ஸ்ரீ ப்ரப$^4$வே நம:**
**பூ$^4$மி ஸ்வர்க்கா$^3$தி$^3$க$^3$ளல்லி நீ ப்ரக்ருஷ்ட 'ப்ரபு$^4$' ஸ்வாமி**
**நமோ பாரதந்த்ராதி$^3$ தோ$^3$ஷதூ$^3$ர ஸ்ரீ பூ$^4$ரமண**
**பூ$^4$மாதி$^3$கு$^3$ண மஹைஶ்வர்ய ஸம்பூர்ண நீ ஸர்வதா$^3$**
**ஸமாதி$^4$க ரஹிதோத்தம அவதாரத$^3$ல்லியு**

பூமி, ஸ்வர்க்காதிகளில் நீ சிறந்தவன். 'பிரபு' . ஸ்வாமியே உனக்கு நமஸ்காரங்கள். பாரதந்த்ர முதலான தோஷங்கள் எதுவும் அற்றவன். ஸ்ரீ-பூ-ரமணனே. அனைத்து நற்குணங்களையும் கொண்டவன். மிகச் சிறந்த செல்வங்களைக் கொண்டவன். ஸம்பூர்ணனே. நீ எப்போதும் சம-அதிக இல்லாத ஸர்வோத்தமன். அவதாரங்களிலும்கூட இதுவே.

**37. ஸ்ரீ ஈஶ்வராய நம:**
**ஸர்வ நியாமகனு 'ஈஶ்வர' நமோ நமோ எம்பெ$^3$**
**பார்வதீஶாதி$^3$க$^3$ளிகு$^3$ உத்தமனு அஜபிதா**
**தே$^3$வனீ மஹைஶ்வர்ய அனிர்விண்ண ஆனந்த$^3$ ரூப**
**தே$^3$வி லக்ஷ்மீரமண தோ$^3$ஷ தூ$^3$ர புருஷோத்தம**

அனைத்தையும் வழி நடத்துபவன். 'ஈஶ்வர' உனக்கு நமஸ்காரங்கள். பார்வதியின் தலைவனான ஈசன் முதலான அனைவரை விட உத்தமன் நீயே. பிரம்மனின் தந்தையே. தேவனே. மிகச் சிறந்த செல்வங்களைக் கொண்டவனே. சோர்வு அற்றவன். ஆனந்த ரூபன். தேவியான லட்சுமியின் தலைவன். தோஷங்கள் அற்றவன். புருஷோத்தமனே.

**38. ஸ்ரீ ஸ்வயம்பு4வே நம:**
**ஸ்வதந்த்ரனாகி3யே ஆவிர்ப4விஸுவி நீ ஸ்வயம்பு4'**
**ஆத3ரதி3 நமோ எம்பெ3 தீ3பாத் தீ3பாந்தர வோலு**
**மோத3 சின்மய அவதாரக3ள ப்ரகடிஸுவி**
**மத்ஸ்யாதி3 அவதாரக3ளு கர்ம நிமித்தவல்ல**

ஸ்வதந்த்ரமாகவே (யாருடைய தயவும் / உதவியும் இன்றி) தோன்றுவாய். நீ ஸ்வயம்பு. உனக்கு மரியாதையுடனான நமஸ்காரங்கள். ஒரு தீபத்திலிருந்து இன்னொரு தீபத்தை ஏற்றுவதைப் போல, உன்னுடைய சின்மய அவதாரங்களை நீ வெளிப்படுத்துகிறாய். அத்தகைய அவதாரங்கள், ஏதோவொரு கர்மங்களை செய்வதற்காக வந்தவை அல்ல (உன் இஷ்டப்படியே வந்தவை).

**39. ஸ்ரீ ஶம்பு4வே நம:**
**ஆனந்த3 உத்பாத3க ஸ்தா2னவாகி3ருவந்த2 'ஶம்பு4'**
**நினகெ3 நமோ ஸுக2நிதே4 ஆனந்தோ3த்3ரேகதி3ந்த3**
**ஆனந்த3 லீலாவதார ஜக3த்ஸ்ருஷ்ட்யாதி3க3ளன்னு**
**நீனே மாடி3 ஸாத4னெகெ3ய்ஸி ஸுக2 ஒத3கி3ஸுவி**

மகிழ்ச்சியை உருவாக்கும் இடமாக இருக்கும் 'ஶம்பு' வே உனக்கு நமஸ்காரங்கள். ஸுக நிதியே. மிக்க மகிழ்ச்சியுடன், உன் லீலைகளால், உலகின் ஸ்ருஷ்ட்யாதி அனைத்தையும் நீயே செய்து, அனைவர் மூலமாக ஸாதனைகளை செய்ய வைத்து, சுகங்களை கொடுக்கச் செய்கிறாய்.

**40. ஸ்ரீ ஆதி3த்யாய நம:**
**உதா3ர விஸ்தார மொத3லு மரியாதெ3 உள்ளவ**
**'ஆதி3த்ய' நமோ ப4க்தி ஸுபூஜெக3ள கொள்ளோ ஸ்ரீஶ**
**ஆதி3த்யாந்தஸ்த2னாகி3ருவுத3ரிம் ஆதி3த்ய நீனு**
**அதி3திஸுத வாமன உபேந்த்3ர நமோ நமஸ்தே**

கருணை கொண்டவனே. (அனைவரிடமிருந்தும்) முதல் மரியாதையைக் கொண்டவன். ஆதித்யனே உனக்கு நமஸ்காரங்கள். (என்னிடமிருந்து) பக்தி, பூஜைகளை பெற்றுக் கொள்வாயாக. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. ஆதித்யனில் இருப்பதால் நீ அதித்யா. அதிதி ஸுதனே. வாமனனே. உபேந்திரனே. உனக்கு நமஸ்காரங்கள்.

**41. ஸ்ரீ புஷ்கராக்ஷாய நம:**
**நினக$^{3}$ன்ய புஷ்டிகரர்யாரிஹரோ அவரன்ன**
**நீ நிராஸமாடி$^{3}$ புஷ்டிகரரின்யாரு இல்லதெ$^{3}$**
**நீனாகி$^{3}$யே இருவி 'புஷ்கராக்ஷனே' நமோ எம்பெ$^{3}$**
**வனஜாக்ஷ அஸம உதா$^{3}$ர போஷண ஸமர்த்த$^{2}$**

உனக்கு ஆதாரமாக யார் இருக்கிறார்கள் என்று நினைக்கிறாரோ, அவர்களை வென்று, உனக்கு ஆதாரம் என்று யாரும் இல்லாமல் நீயாகவே இருப்பாய். புஷ்கராக் ஷனே. உனக்கு நமஸ்காரங்கள். தாமரைக் கண்ணனே. சமம் இல்லாதவனே. கருணாளுவே. அனைவரையும் காப்பவனே.

**42. ஸ்ரீ மஹாஸ்வனாய நம:**
**ஞானவாகி$^{3}$ஹ மஹத$^{4}$னப்ரத$^{3}$ 'மஹாஸ்வனனெ'**
**நினகெ$^{3}$ நமோ நமோ பரமபூஜ்ய நீ ஸர்வக்$^{3}$ஞ**
**ஆம்னாய ருகாதி$^{3}$ ஸதா$^{3}$க$^{3}$மக$^{3}$ளிந்த$^{3}$ ஞேய நீ**
**விக்ஞான அபரோக்ஷ வீவி ப$^{4}$க்தர்கெ$^{3}$ ஹயஶீர்ஷ**

ஞானம் என்னும் மிகப்பெரிய செல்வத்தைக் கொடுப்பவனே. மஹாஸ்வனனே. உனக்கு நமஸ்காரங்கள். பரமபூஜ்யனே. ஸர்வக்ஞனே. ரிகாதி அனைத்து ஆகமங்களாலும் நீ போற்றப்படுகிறாய். பக்தர்களுக்கு விசேஷமான ஞானத்தை / அபரோக்ஷத்தைக் கொடுப்பவனே. குதிரை முகம் கொண்டவனே.

**43. ஸ்ரீ அனாதி$^{3}$ நித$^{4}$னாய நம:**
**ஜனன ம்ருதி இல்லத$^{3}$ 'அனாதி$^{3}$நித$^{4}$ன' நமோ**
**நீ நித்ய அப்ராக்ருத விக்$^{3}$ரஹானந்த$^{3}$ ஞானருபமய**
**ஜனி ஜராத்$^{3}$யகி$^{2}$ள தோ$^{3}$ஷதூ$^{3}$ரனு அவிகார**
**நீனு காலாதீத அக்ஷரனு ஸ்வதந்த்ரனு ஆத்ம**

பிறப்பு, இறப்பு இல்லாதவனே 'அனாதிநிதனனே' உனக்கு நமஸ்காரங்கள். நீ நித்யமான, அப்ராக்ருதமான, ஆனந்தமயமான ரூபம் கொண்டவன். உலகத்தின் எவ்வித தோஷங்களும் அற்றவன். விகாரம் இல்லாதவன். காலத்தை மீறியவன். அக் ஷரன். ஸ்வதந்த்ரன். ஆத்மனே.

**44. ஸ்ரீ தா$^{4}$த்ரே நம:**
**ஸ்வீகரிஸி த$^{4}$ரிஸி நீ ரக்ஷிஸிபோஷிப 'தா$^{3}$த'**
**பா$^{3}$கி$^{3}$ ஶிர நமோ எம்பெ$^{3}$ ஸ்ரீஶ வேதே$^{3}$ஶ ஸர்வேஶ**
**ஏகாத்மா ஸ்ரீகரனே பிரம்மன்னத$^{4}$ரிஸி நாபி$^{4}$ய**
**ஸுகமலதி$^{3}$ ஜன்மவித்து பொரெவி நாராயண**

(ஜீவர்களை) ஏற்றுக் கொண்டு, தரித்துக் கொண்டு, காப்பவனான 'தாத' நீயே. உனக்கு நமஸ்காரங்கள். ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. வேதங்களின் தலைவனே. ஸர்வேஷனே. ஏகாத்மனே. ஸ்ரீகரனே. நாபியில், தாமரையில், பிரம்மனை தரித்து, அவரை படைத்து காக்கிறாய். நாராயணனே.

**45. ஸ்ரீ விதா4த்ரே நம:**
**உத்தம ஸ்தோத்ரக3ள ஸ்வீகரிஸி த4ரிஸுவி நீ**
**'விதா4தா' நமோ சந்தோக3ம்ய க3ருட3வாஹனனே**
**ஶ்ருதி ஸ்ம்ருதிக3ளிந்த3 ஸம்ஸ்துத்ய ஆஶ்ரயனு நீனு**
**முக்தருக3ளிகு3 ஆஶ்ரயனு ஸுக2தா3த நீனே**

உத்தமமான ஸ்தோத்திரங்களை நீ ஏற்றுக் கொள்கிறாய். விதாதா-வே, உனக்கு நமஸ்காரங்கள். சாம வேதத்தினால் புகழப்படுபவனே. கருட வாகனனே. ஸ்ருதி ஸ்ம்ருதிகளால் போற்றப்படுபவனே. அனைவருக்கும் கதி அளிப்பவன் நீயே. முக்தர்களுக்கும் கதி நீயே. சுகத்தைக் கொடுப்பவன்.

**46. ஸ்ரீ தா4துருத்தமாய நம:**
**சதுர்முக2 பி3ரம்மனிகெ3 நியாமக உத்தமனு**
**'தா3துருத்தமனு' நமோ ஸர்வேஶ்வர நீனு ப்ரக்ருதி**
**தா4துக3ள வ்யவஹார ப்ரவர்த்திஸுவ ஸ்வாமியு**
**வைதி3க ஶப்தக3ளிந்த3 முக்2ய வ்ருத்தியலி வாச்ய**

சதுர்முக பிரம்மனுக்கு நியாமகன். உத்தமன். தாருதுத்தம-னே உனக்கு நமஸ்காரங்கள். நீயே ஸர்வேஸ்வரன். ப்ரக்ருதியின் அனைத்து செயல்களை செய்விப்பவன். ஸ்வாமியே. வேத சொற்களால் முக்கியமாக புகழப்படுபவன் / போற்றப்படுபவன் நீயே.

**47. ஸ்ரீ அப்ரமேயாய நம:**
**பரிமாண இல்லத3வனு 'அப்ரமேயனே' நமோ**
**யாரிந்த3லு ஸாகல்ய நின்ன அரியலு அஶக்ய**
**ஶிரி மத்து பி3ரம்மேஶாதி3க3ளெஷ்டே யத்னிஸித3ரு**
**ஹரிகு3ண மஹிம கொனெ அரியெ அஶக்தரு**

எல்லைகள் அற்றவன். அப்ரமேயனே - உனக்கு நமஸ்காரங்கள். யாராலும், உன்னை முழுமையாக அறிய முடியாது. ஸ்ரீலட்சுமிதேவி, பிரம்ம, ருத்ர ஆகியோர் முயன்றாலும்கூட அது முடியாது. உன்னிடம் இருக்கும் குணங்களின் மகிமைளின் எல்லைகளை யாராலும் அறியமுடியாது.

**48. ஸ்ரீ ஹ்ருஷிகேஶாய நம:**
**இந்தி3ரியக3ளிகெ3 ஸ்வாமி 'ஹ்ருஷிகேஶ' நமோ எம்பெ3**

**இந்தி3ரியாபி4மானிக3ளொளு இத்து நியமிஸுவி**
**இந்தி3ரெகு3 பி3ரம்மனிகு3 ப4க்தஜன ஸர்வரிகு3**
**மந்த3ரோத்3த4ர நீனு யதா2யோக்3ய ஹர்ஷவன்னீவி**

இந்திரியங்களின் ஸ்வாமியே ஹ்ருஷிகேஶனே உனக்கு நமஸ்காரங்கள். இந்திரிய அபிமானிகளில் இருந்து கொண்டு, நீ அவர்களை வழி நடத்துகிறாய். ஸ்ரீலட்சுமிக்கும், பிரம்மனுக்கும் மற்றும் உன் பக்தர்கள் அனைவருக்கும் அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவரவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கிறாய். மந்தரோத்தரனே.

**49. ஸ்ரீ பத்மனாபா4ய நம:**
**பத்மஸம்ப4வ வேத3 கா3யனதி3 ஸ்துதிஸுவந்த2**
**வேத3வாக்யக3ளல்லி இருவி ப்ரதிபாத்3யனாகி3**
**‘பத்மனாப4னே’ நமோ விஶ்வ ஆஶ்ரய முக்2யஸ்வாமி**
**ஜ்யோதிர்மய ஞானத3னே த3யதி3 பாலயமாம்**

பிரம்மனானவர், வேதங்களால் உன்னை துதிக்கிறார். அத்தகைய ஸ்துதி வாக்கியங்களில் நீ இருக்கிறாய். அந்த வேதங்களில் பிரதிபாத்யன் நீயே. பத்மனாபனே உனக்கு நமஸ்காரங்கள். உலகிற்கே நீயே கதி. முக்கிய ஸ்வாமியே. ஜ்யோதிர்மயனே. ஞானத்தை அளிப்பவனே. என்னை கருணையுடன் அருள்வாயாக.

**50. ஸ்ரீ அமரப்ரப4வே நம:**
**தீ3ர்க்கா4யுஷீயரிகெ3 ஸ்வாமியே ‘அமர ப்ரப4வே’**
**பாகி3 ஶிர நமோ எம்பெ3 பாஹிமாம் பாஹி த3யதி3**
**வாகீ3ஶ ஹனுமதா3தி3க3ள ப்ரபு4 சின்மயனே**
**ஸுக2மயனே ஸுக2ஞான தா3தனே நமோ எம்பெ3**

தீர்க்க ஆயுள் கொண்டவர்களுக்கு ஸ்வாமியே. அமர ப்ரபுவே, தலை வணங்கி உன்னை வணங்குகிறேன். என்னை அருள்வாயாக. பிரம்ம, வாயு முதலான அனைவரின் தலைவனே. சின்மயனே. ஸுகமயனே. சுக, ஞான ஆகியவற்றை அருள்பவனே. உன்னை வணங்குகிறேன்.

**51. ஸ்ரீ விஶ்வகர்மணே நம:**
**ஸர்வகர்மக3ளிகெ3 காரணனாகி3 இருவி நீ**
**‘விஶ்வகர்மனே’ நமோ க3ருட3வாஹன விஶ்வேஶ**
**ஸர்வ கர்மக3ளு ஸ்வதந்த்ர நின்ன தெ3ஸெயிந்த3லே**
**ஸர்வதா3 கர்மதோ3ஷாதி3 லேபவில்லத3ந்தர்யாமி**

அனைத்து கர்மங்களுக்கும் நீயே காரணன். விஶ்வகர்மனே உனக்கு நமஸ்காரங்கள். கருடவாகனனே. விஶ்வேஷனே. ஸ்வதந்த்ரனான உன்னிடமிருந்தே அனைத்து

கர்மங்களும் துவங்குகின்றன. எப்போதும் எவ்வித கர்ம தோஷங்களும் இல்லாதவன் நீயே.

**52. ஸ்ரீ மனவே நம:**
**ஞ்யாத்வா நீ 'மனு' நினகெ3 நமோ திளிஸோ எனகெ3**
**விதத கு3ணரூப க்ரியாதி3 மஹாத்ம்யக3ளனு**
**காலதே3ஶவ்யாப்தனே ஜீவ பி3ம்பா3ஹ்வயனே ஸ்ரீஶ**
**ஸதா3க3ம வேத்3ய ஸ்ரீவேத3வ்யாஸ ஸனத்ஸுஜாதா**

அனைத்தையும் அறிந்தவன். மனு – உனக்கு நமஸ்காரங்கள். உன்னுடைய குண, ரூப, க்ரியாதிகளின் சிறப்புகளை எனக்கு விளக்குவாயாக. கால, தேசமாக எப்போதும், எல்லா இடங்களிலும் வ்யாப்தனே. ஜீவர்களில் பிம்பனாக இருப்பவனே. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. நல்ல ஆகமங்களால் புகழப்படுபவனே. ஸ்ரீவேதவ்யாஸனே. ஸனத் ஸுஜாதனே.

**53. ஸ்ரீத்வஷ்ட்ரே நம:**
**தீ3ப்திமந்தா 'த்வஷ்ட்ரா' நமோ ஸ்ரீமன் நாராயண க்4ருணி**
**ப4க்த த்ரிவித4ரிகெ3 ஹொரகு3 ஒளகு3 ஸர்வத்ர**
**நக்ஷத்ர தடிஶ்சந்த்ர அர்க்கனந்த3தி3 ஹொளெயுவ**
**ஸ்வதேஜ:புஞ்ச ஸர்வகர்த்தா ஸ்பூர்த்தித3னு நீ த்4யேய**

ஒளிபொருந்தியவனே. த்வஷ்ட்ரா – உனக்கு நமஸ்காரங்கள். ஸ்ரீமன் நாராயணனே. மூன்று வித பக்தர்களுக்கும், அவர்களின் உள்ளேயும் வெளியேயும் இருப்பவனே. நட்சத்திரம், சூரியன், சந்திரன் ஆகியோரில் இருந்து ஒளிர்பவன் நீயே. அவர்களுக்கு ஒளி கொடுப்பவன் நீயே. அனைத்தையும் செய்விப்பவன். தியானிக்கப்பட வேண்டியவன் நீயே.

**54. ஸ்ரீ ஸ்த2விஷ்டாய நம:**
**அத்யந்த தேஜஸ்வியே 'ஸ்த2விஷ்டனே' நமோ நினகெ3**
**பூ4த பஞ்சக பி3ரம்மாண்ட ஒள ஹொரகெ3 ஸர்வஸ்த2**
**ஸுதேஜஸ்தம விராண்ணாம புருஷனே நமஸ்தே**
**மார்த்தாண்ட3 ப3த3ராதி3க3ளிகெ3 தேஜஸ் ப்ரதா3த**

அபாரமான தேஜஸ்வியே. ஸ்தவிஷ்டனே உனக்கு நமஸ்காரங்கள். பஞ்ச பூதங்களால் நிரம்பிய இந்த பிரம்மாண்டத்தின் உள்ளே வெளியே அனைத்து இடங்களிலும் வ்யாப்தன் நீயே. அற்புதமான தேஜஸ் கொண்டவன். புருஷனே. உனக்கு நமஸ்காரங்கள். சூரிய, சந்திரர்களுக்கு ஒளி கொடுப்பவன் நீயே.

**55. ஸ்ரீ ஸ்த2விராய நம:**
**ரத2ஸ்த2 நீ 'ஸ்த2விர' நமோ ஈ நம்ம தே3ஹ எம்ப3**

**ரத2த3ல்லி ரதி2க ப்ராணனே ஶ்ரீஹ்ரீ ஸமேதனு**
**வாததே3வனிந்த3 ஸேவெ கொள்ளுதலி இருவி நீ**
**ஜக3த்பிதாமஹ தாத நமோ ப்ரபிதாமஹனே**

ரதத்தில் வருபவன் நீயே. ஸ்தவிரனே உனக்கு நமஸ்காரங்கள். இந்த என்னுடைய தேகம் என்னும் ரதத்தில் தலைவனாக வீற்றிருப்பவனே. ப்ராணனே. ஶ்ரீலட்சுமிதேவி உடனே இருப்பவனே. வாயுதேவர் மூலமாக சேவை பெற்றுக் கொள்பவனே. உலகின் பிதாமகனான பிரம்மனின் தந்தையே. ப்ரபிதாமகனே. உனக்கு நமஸ்காரங்கள்.

**56. ஶ்ரீ த்4ருவாய நம:**
**க3க3ன மண்ட3லத3லி ஸஞ்சரிப ஸூர்யனன்ன**
**வேக3க3தியிந்த3 'த்4ருவ' மண்ட3லத3 ப3தி3யல்லி**
**ஶீக்4ர மேலெ எத்திஸுவ த்4ருவனே நமோ நினகெ3**
**விகார க்ஷயாதிக3ளில்லத3 ஸ்தை2ர்யப3லரூப**

வான் மண்டலத்தில் சஞ்சரிக்கும் சூரியனை, வேகமாக 'த்ருவ' மண்டலத்தின் வழியில் நிறுத்துபவனான 'த்ருவனே' உனக்கு நமஸ்காரங்கள். விகார (உருவ மாற்றங்கள்) இல்லாதவனே. ஞான, பல ரூபனே.

**57. ஶ்ரீ அக்3ரஹ்யாய நம:**
**து3ஷ்டஜனக3ளிந்த3 க்3ரஹண மாடி3க்கொளலிக்கெ**
**எஷ்டொனு யோக்3யனல்லத3 'அக்3ராஹ்யனே' நமோ எம்பெ3**
**இஷ்ட ப4க்தரிந்த3 நீனு ஸாகல்ய திளியலாரி**
**எஷ்டு நின்னிச்செயிம் திளிஸுவியோ அஷ்டு லாப4வு**

துஷ்ட மக்களால் புரிந்து கொள்ளப்பட முடியாத தகுதியைக் கொண்ட 'அக்ராஹ்யனே' உனக்கு நமஸ்காரங்கள். இஷ்ட பக்தர்களால் கூட உன்னை முழுமையாக அறிய முடியாது. உன்னுடைய இஷ்டத்தினால் நீ எவ்வளவு காட்டிக் கொள்கிறாயோ, அதுவே அவர்களின் லாபம் ஆகும்.

**58. ஶ்ரீ ஶாஶ்வதாய நம:**
**எந்தெ3ந்து3 எல்லெல்லு பே4த3 பரிணாமாதி3 இல்லதெ3**
**ஸதா3 பூர்ணனாகி3ருவி 'ஶாஶ்வதனே' நமோ எம்பெ3**
**ஸ்தா2ன காலாதி3க3ளிந்த3 விகாரவில்ல நினகெ3**
**எந்தெ3ந்து3 எல்லெல்லு அச்யுதனு ஶாஶ்வதனு நீனு**

என்றும், எங்கேயும், பேதங்கள் / மாற்றங்கள் ஆகியவை இல்லாமல் எப்போதும் பூர்ணனாக இருக்கிறாய். '**ஶாஶ்**வதனே' உனக்கு நமஸ்காரங்கள். கால, தேசங்களில் எவ்வித மாற்றங்களும் இல்லாதவன் நீ. அச்யுதன். **ஶாஶ்**வதன் நீயே.

**59. ஸ்ரீகிருஷ்ணாய நம:**
**சேஷ்டகனு நீ ஸர்வதா$^3$ ஸர்வகர்தனாகி$^3$ருவி**
**கிருஷ்ண நமோ ப$^3$ல ஞானாத்$^3$யமித கு$^3$ண நமஸ்தே**
**கார்ஷ்ண ஶீலனு ஸர்வ ஜக$^3$த்தின நியாமக**
**நீ ஷட்கு$^3$ணைஶ்வர்யாதி$^3$ பூர்ணனெந்து$^3$ ஆக$^3$மோக்தவு**

செயல்களை செய்விப்பவன் நீ. எப்போதும் அனைத்தையும் செய்பவனாக நீ இருக்கிறாய். கிருஷ்ணனே உனக்கு நமஸ்காரங்கள். பல, ஞானங்களை அபாரமாக கொண்டவனே. கருமை வண்ணம் கொண்டவனே. அனைத்து உலகங்களின் நியாமகனே. நீ ஷட்குண - ஐஸ்வர்யங்களால் பூர்ணன் என்று அனைத்து ஆகமங்களும் சொல்கின்றன.

**60. ஸ்ரீ லோஹிதாக்ஷாய நம:**
**ராஜஸரிகெ$^3$ ஆஸ்ரய 'லோஹிதாக்ஷ' நமோ எம்பெ$^3$**
**ராஜ ராஜேஶ்வரனே கெங்க$^3$ண்ணு தோரிஸுத நீனு**
**துர்ஜனரிகெ$^3$ பீ$^4$தி இத்தவர நிக்$^3$ரஹ மாடி$^3$**
**ஸஜ்ஜனர ரக்ஷிஸுவி பத்$^3$மபத்ர ஆயதாக்ஷ**

ராஜஸர்களுக்கு கதியினைக் கொடுப்பவனே 'லோஹிதாக்ஷ' னே உனக்கு நமஸ்காரங்கள். ராஜ ராஜேஸ்வரனே. கெட்டவர்களுக்கு உன் சிவந்த கண்களைக் காட்டி, அவர்களை அழித்து, ஸஜ்ஜனர்களை காக்கிராய். தாமரைக் கண்ணனே.

**61. ஸ்ரீ ப்ரதர்த்த$^3$னாய நம:**
**ப$^4$க்தர இஷ்டப்ராபக 'ப்ரதர்த்த$^3$ன' நமோ எம்பெ$^3$**
**ப$^4$க்தரு இஷ்ட ஸாத$^4$ன சலிஸுவ காலத$^3$ல்லி**
**ப$^3$ந்த$^3$ உபடள விக்$^4$ன ஶத்ருக$^3$ள நிவாரிஸி**
**ப$^4$க்தர்கெ$^3$ ப்ரஸாத$^3$வீவி ப்ரக்ருதி ப$^3$ந்த$^4$ கடிது$^3$**

பக்தர்களால் விரும்பப்படுபவனே. ப்ரதர்த்தனனே. உனக்கு நமஸ்காரங்கள். பக்தர்கள் விருப்பப்பட்டு ஸாதனைகளை செய்யும்போது, வரும் தடைகளை போக்கி, எதிரிகளை விலக்கி, பக்தர்களுக்கு - சம்சார பந்தனத்தை விலக்கி - பிரஸாதம் அளிப்பவனே.

**62. ஸ்ரீ ப்ரபூ$^4$தாய நம:**
**ப்ரக்ருஷ்டோத்தமனாகி$^3$ருவி 'ப்ரபூ$^4$த' நமோ எம்பெ$^3$**
**ஶுத்$^3$த$^4$னு பூர்ணனு யாரூனு நினகெ$^3$ ஸமரில்ல**
**உருகு$^3$ணார்ணவ விஶ்வவ்யாபகனு ஈஶ நீனு**
**த்$^3$ரௌபதீ$^3$ வரத$^3$ முக்$^2$யகாரண ஸ்வாமி ஸ்வதந்த்ர**

ஸர்வோத்தமனாக இருக்கிறாய். 'ப்ரபூத' னே உனக்கு நமஸ்காரங்கள். பரிசுத்தமானவன். பூர்ணன். உனக்கு யாருமே சமம் இல்லை. சிறந்த குணங்களைக் கொண்டவன். உலகம் முழுக்க வ்யாப்தன் ஆனவன். ஈசன் நீயே. திரௌபதிக்கு வரம் (அபயம்) அளித்தவன். அனைத்திற்கும் முக்ய காரணன். ஸ்வாமி. ஸ்வதந்த்ரன் நீயே.

**63. ஸ்ரீ த்ரிககுத்3தா4மனே நம:**
**ஆத்4யாத்மிக ஆதி4 தெ3ய்விக ஆதி4 பௌ4திக தாப**
**குத்ஸிதவாகி3 மாள்ப 'த்ரிககுத்3தா4மனே' நமஸ்தே**
**'ஜ்யோதி: த்ரிபாத்3தி3வ: பர ஆதி3வராஹ' ஸ்வரூப**
**த்ரிககுத் எரடு3 பு4ஜ கந்த3மூல விக்2யாத**

ஆத்யாத்மிக, ஆதி தெய்விக, ஆதி பௌதிக என்பதான மூன்று வித தாபங்களை பரிகரிப்பவனே. 'த்ரிககுத்தாமனே' உனக்கு நமஸ்காரங்கள். ஆதி வராக ஸ்வரூபனே. ஸ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட என்னும் மூன்று உலகங்களிலும் இருப்பவனே. இரு தோள்களைக் கொண்டவனே. அனைத்திற்கும் வேர் ஆனவனே.

**64. ஸ்ரீ பவித்ராய நம:**
**பாபவில்லத3வனாகி3 இருவ 'பவித்ரம்' நமோ**
**பாபாதி3 கர்மவில்லத3வ நீனு சக்ரதா4ரியு**
**பாப பர்வத பக்ஷ கடி3வ குலிஶனு நீனு**
**ஸ்ரீ புண்டரீகாக்ஷ யோக்3யப4க்தர பாபனகர்த்தா**

பாவங்கள் இல்லாதவனே. 'பவித்ரனே' உனக்கு நமஸ்காரங்கள். பாவங்கள் இல்லாத கர்மங்களைக் கொண்டவன் நீ. சக்ரதாரி. பாவங்கள் என்னும் மலையை உடைக்கும் கோடலி நீயே. தாமரைக் கண்ணன். யோக பக்தர்களின் செயல்களை செய்விப்பவன்.

**65. ஸ்ரீ மங்க3ளாய நம:**
**மங்க3ல ஸ்வரூபவந்த 'மங்க3ளா' நமோ நினகெ3**
**ப4ங்க3வில்லத3 கல்யாணதம பூர்ணைஶ்வர்ய ரூப**
**மங்க3லப்ரத3னு மோக்ஷ ஶோப4ன ப4க்தர்கெ3 ஈவி**
**க3ங்கா3பித அங்கா3ங்யபி4ன்ன ஆனந்த3மய நீனு**

மங்கல ஸ்வரூபம் கொண்டவன். 'மங்களா' உனக்கு நமஸ்காரங்கள். குறைகள் அற்ற கல்யாண குணங்களைக் கொண்டவன். பூர்ண ஐஸ்வர்ய ரூபம். மங்களங்களைக் கொடுப்பவனே. உன் பக்தர்களுக்கு மோட்சத்தைக் கொடுப்பவனே. கங்கா பிதனே. அங்காங்கங்களில் ஆனந்தமயனாக இருப்பவனே.

**66. ஸ்ரீ பராய நம:**
**ஸர்வோத்தம நீனு 'பரம்' நமோ நமோ நமோ எம்பெ3**
**ஸ்ரீவரனே கு3ணபூர்ண பரம்பி3ரம்ம பரமாத்ம**

**ஸர்வவேத³த பும்ஸூக்தாதி³யிம் முக்²ய ப்ரதிபாத்³யனு**
**ஸர்வேஶ ஸர்வக³னு 'ஸத்யம் ஞானம் அனந்தம் பி³ரம்ம'**

ஸர்வோத்தமனே. 'பரம்' உனக்கு நமஸ்காரங்கள். ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. குணங்களால் நிறைந்தவனே. பரபிரம்மனே. பரமாத்மனே. அனைத்து வேதங்களாலும், புருஷ ஸூக்தாதிகளாலும், முக்கியமாக போற்றப்படுபவனே. ஸர்வேஷனே. அனைத்து இடங்களிலும் வ்யாப்தனே. 'ஸத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம' என்று அழைக்கப்படுபவனே.

**67. ஸ்ரீ ஈஶானாய நம:**
**நீ ஸ்வாமி 'ஈஶான' நமோ நினகெ³ ஸ்ரீ பூ⁴ரமண**
**ஸர்வஸ்ய வஷி ஸர்வஶைஶான நீனெ ஸ்வதந்த்ர**
**ஸ்வஸ்த² ஸ்வயமேவ ராஜஸ்வராட் ஸர்வஸ்வாமி நீனு**
**ஸ்ரீவனஜஜ ருத்ராதி³க³ளிகு³ நீனேனெ ஸ்வாமி**

ஸ்வாமியே. 'ஈஶானனே' உனக்கு நமஸ்காரங்கள். ஸ்ரீ-பூ-ரமணனே. அனைவரையும் ஆள்பவனே. அனைவரின் தலைவனே. நீயே ஸ்வதந்த்ரன். வலிமையானவன். நீயே அனைவருக்கும் அரசன். அனைவரின் ஸ்வாமி. ஸ்ரீலட்சுமிதேவி, பிரம்மன், ருத்ரர் ஆகியோருக்கும் நீயே ஸ்வாமி.

**68. ஸ்ரீ ப்ராணதா³ய நம:**
**கண்ணு மொத³லாத³ந்த² இந்தி³ரியக³ள கொடு³வவ**
**'ப்ராணத³னெ' நமோ எம்பெ³ இந்த்³ரிய அனிமிஷரு**
**இனாதி³க³ள த்³வாரா என்னிம் ஸாத⁴னெ நீ மாடி³ஸி**
**நின்னத³ர்ஶனவித்து பாலிஸுவி கருணி ஸ்ரீஶ**

கண் முதலான இந்திரியங்களைக் கொடுப்பவன். ப்ராணதனே. உனக்கு நமஸ்காரங்கள். இனாதி முதலான இந்திரிய அபிமானி தேவதைகளின் மூலம், நீ என்னில் நின்று ஸாதனைகளை செய்வித்து, உன்னுடைய தரிசனத்தை அளித்து காக்கிறாய். கருணாளு. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே.

**69. ஸ்ரீ ப்ராணாய நம:**
**ப்ரக்ருஷ்ட சேஷ்டாவந்த 'ப்ராணனெ' நமோ நமோ எம்பெ³**
**ஸுப்ரசுர ஞானேச்சக்ரியா ப³லாதி³ரூப நீனு**
**ஸுராஸுர நரஸர்வ சராசர சேஷ்டகனு**
**உருஸுக²மய ப்ராண ஸ்ரீஶ லக்ஷ்மி ஸமேதனு**

மிகச் சிறந்த செயல்களை செய்பவனே. ப்ராணனே. உனக்கு நமஸ்காரங்கள். அபாரமான ஞான, இச்சை, க்ரியா, பல ஆகிய நற்குணங்களின் ஸ்வரூப ரூபமே நீ.

ஸுர, அஸுரர்கள், நரர்கள், சராசர என அனைத்தின் செயல்களை செய்விப்பவன் நீ. ஸுகமயமான ப்ராணனே. ஸ்ரீலட்சுமி சமேதமாக இருப்பவனே.

**70. ஸ்ரீ ஜ்யேஷ்டாய நம:**
**மஹாத்ம்யவந்த ஜ்யேஷ்டனே நமோ நமோ நமோ எம்பெ3**
**மஹாவிபூ4த்யாதி3 மஹாத்ம்யா ப3ஹள உள்ளவனு**
**பி3ரம்மதே3வர ஜனக ஸ்வதந்த்ர ஸர்வேஶ ஸ்ரீஶ**
**மஹார்ஹப்ரஶ ஸத்தம ஸனாதன வருத்3தோ3த்தம**

மகிமைகள் பொருந்தியவனே. மூத்தவனே. உனக்கு நமஸ்காரங்கள். மஹாவிபூதி முதலான மகிமைகள் பல கொண்டவனே. பிரம்மதேவரின் தந்தையே. ஸ்வதந்த்ரனே. ஸர்வேஷனே. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. மிகச் சிறந்த மகிழ்ச்சியைக் கொடுப்பவனே. ஸனாதனனே. அனைவரைவிட மூத்தவனே.

**71. ஸ்ரீ ஸ்ரேஷ்டாய நம:**
**ப்ரஶஸ்த பூர்ண நிர்தோ3ஶ கு3ண ஸ்வரூபனாகி3ஹ**
**நீ 'ஸ்ரேஷ்ட' நமோ நினகெ3 ஸதத ஶரணு எம்பெ3**
**ஸரஸிஜாஸன ருத்3ர மொத3லாத3வரிந்த3 வந்த்3ய**
**ஸம்ஸ்துத்ய ஸுபூர்ண பூ4மாதி3 கு3ணனு ஸர்வோத்தம**

போற்றத்தக்கவனே. பூர்ணனே. தோஷங்கள் அற்றவனே. குண ஸ்வரூபனாக இருப்பவனே. நீயே 'ஸ்ரேஷ்டன்'. உனக்கு நமஸ்காரங்கள். உன்னை எப்போதும் நான் போற்றுகிறேன். பிரம்ம, ருத்ர, ஆகிய அனைவராலும் வணங்கப்படுபவன். பூஜிக்கப்படுபவன். பூர்ணன். பொறுமை முதலான குணங்களைக் கொண்டவன். ஸர்வோத்தமன்.

**72. ஸ்ரீ ப்ரஜாபதயே நம:**
**சதுர்முக2 பி3ரம்மனிந்த3 ஸேவித 'ப்ரஜாபதயே'**
**ஸதா3 நமோ பத்மஜாதி3 ப்ரஜெக3ளெல்லர ஸ்வாமி**
**ஹிததி3 ப்ரஜெக3ள பாலிஸுவ ப்ரஜாபதி நீ**
**பத்மஜ பணெக3ண்ண ஶக்ராதி3 ஸஜ்ஜன வினுத**

சதுர்முக பிரம்மனால் வணங்கப்படுபவன். 'ப்ரஜாபதயே'. உனக்கு நமஸ்காரங்கள். பிரம்மன் முதலான அனைத்து பிரஜைகளின் ஸ்வாமி. அந்த பிரஜைகளை கருணையுடன் காக்கும் பிரஜாபதியே. தாமரைக் கண்ணனே. ருத்ரர், இந்திரன் முதலான ஸஜ்ஜனர்களால் வணங்கப்படுபவனே.

**73. ஸ்ரீ ஹிரண்யக3ர்ப்பா4ய நம:**
**ஹிதவாத3 ரமணீயவாகி3ருவ ஞானவன்னு**
**உத3ரக3ர்ப்ப4தி3 உள்ள 'ஹிரண்யக3ர்ப்ப4னே' நமோ**

**மாத4வனே நீ ஞானாத்3ய ஶேஷ கு3ணாதா4ர ஸ்வாமி**
**பத்3மஜாண்ட3 ஹிரண்யாத்மகவு நின்னலி த்4ருதவு**

இதமான, அழகாக இருக்கக்கூடியதான ஞானத்தை தன் வயிற்றில் கொண்டவனே 'ஹிரண்யகர்ப்பனே' உனக்கு நமஸ்காரங்கள். மாதவனே. ஞானமே முழுமையாக உள்ளவன் நீ. குணங்களுக்கு ஆதாரமானவன் நீ. ஸ்வாமி. இந்த பிரம்மாண்டனே உன்னில் அடங்கியிருக்கிறது.

**74. ஸ்ரீ பூ4க3ர்ப்பா4ய நம:**
**உத்கர்ஷகரண ஞானலப்4ய 'பூ4க3ர்ப்ப4னே' நமோ**
**உத்கர்ஷ எந்த3ரெ ஸம்ருத்3தி4யனு கொடு3வுது3**
**ஹ்ருத்கு3ஹ அந்தஸ்த2 பி3ம்ப3ஞான ஸாத4ன கொலிது3**
**ப்ரஸாத3வித்து அபரோக்ஷக்கெ ஸிகு3வி பூ4வராஹ**

சிறப்பான ஞானத்தைக் கொடுக்கக்கூடிய 'பூகர்ப்பனே' உனக்கு நமஸ்காரங்கள். உத்கர்ஷ என்றால் அதிகமாக கொடுப்பது. நம் இதயக் குகையில் இருப்பவனே. ஸாதனைக்கு தரிசனம் அளிப்பவனே. பிம்பமூர்த்தியே. அபரோக்ஷ தரிசனமான பிரஸாதத்தை அளிப்பவனே. பூவராகனே.

**75. ஸ்ரீ மாத4வாய நம:**
**ஞானாதி4பதி நீனு 'மாத4வனே' நமோ நினகெ3**
**நீனு த்ரயீமயனு த4ர்மமய தபோமயனு**
**ஞானாதி3 ஷக்திபூர்ணெ மாயாதே3விய ரமணனெ**
**நினகெ3 உத்தமரில்ல பரவாஸுதே3வ கிருஷ்ண**

ஞானாதிபதி நீ. 'மாதவனே' உனக்கு நமஸ்காரங்கள். மூன்று வேதங்களால் புகழப்படுபவன். தர்மமயன். தபோமயன். ஞானாதி ஷக்தி பூர்ணன். மாயாதேவியின் ரமணன். உன்னை விட உத்தமர்கள் வேறு யாரும் இல்லை. பரவாஸுதேவனே. கிருஷ்ணனே.

**76. ஸ்ரீ மது4ஸூத3னாய நம:**
**ஞானவன்னு நிராஸமாட3தக்கத்3தா3த்3 அஞ்ஞான**
**வன்னு நாஶ மாடு3வி நீ 'மது4ஸூத3ன' நமஸ்தே**
**ஞான ஆச்சாத3க ஶைவல அவித்3யாதி3க3ளன்னு**
**நீ நீகி3ஸி ஞான ஒத3கி3ஸுவி வ்யாஸ ஹயாஸ்ய**

ஞானத்தை குறைக்கக்கூடிய அஞ்ஞானத்தை நீ அழிப்பாய். 'மதுஸூதனனே' உனக்கு நமஸ்காரங்கள். ஞானத்தை மறைக்கக்கூடிய அவித்யைகளை நீ போக்கி, ஞானத்தைக் கொடுக்கிறாய். வ்யாஸனே. ஹயக்ரீவனே.

**77. ஶ்ரீ ஈஶ்வராய நம:**
**ருத்3ரன கு3ணக்கிந்த ஸ்ரேஷ்ட ஸ்வரூபனெ 'ஈஶ்வர'**
**வந்தே3 நமோ நமோ பத்3மஜ வாய்வாதி3 ஸுரஸ்ரேஷ்ட**
**பத்3மாலய பதியு ஸ்வேச்சா ப்ரவர்த்தகனு நீனு**
**ஸத்யகாமனு ஸத்யஸங்கல்ப நிரவத்3ய ஸ்வாமி**

ருத்ரனின் குணத்தைவிட சிறந்த ஸ்வரூபனே. 'ஈஶ்வரனே' உனக்கு நமஸ்காரங்கள். பிரம்மா, வாயு ஆகியோரைவிட சிறந்தவனே. ஶ்ரீலட்சுமிதேவியின் பதியே. தன் இஷ்டப்படியே அனைத்து செயல்களையும் செய்பவன் நீ. விருப்பங்களை நிறைவேற்றுபவன். சொன்னதையே செய்பவன். யாராலும் வெல்லப்பட முடியாதவன். ஸ்வாமி.

**78. ஶ்ரீ விக்ரமிணே நம:**
**நீ ஸ்ரேஷ்ட வ்யாபார மாள்பி 'விக்ரமீ' நமோ நினகெ3**
**நீ ஸ்ருஷ்டி ஸ்தி2தி லயாத்4யகி2ளக1ர்த்த நாராயண**
**ஷீர்ஶாஸ்யகர பாதா3தி3யலு அவதாரத3ல்லு**
**நீ ஸதா3 தாரதம்யவில்லத3வ நிர்தோ3ஷபூர்ண**

மிகச் சிறந்த செயல்களையே செய்கிறாய். 'விக்ரமீ' உனக்கு நமஸ்காரங்கள். ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய முதலான அனைத்தையும் செய்பவன். நாராயணன். புகழப்படத் தக்கவன். மூலத்திலும், அவதாரங்களிலும் நீ தாரதம்யம் இல்லாதவன் (எப்போதும் உயர்ந்தவன்). எவ்வித தோஷங்களும் அற்றவன்.

**79. ஶ்ரீ த4ன்வினே நம:**
**உத3கவ ப்ரவர்த்திஸுவி 'த4ன்வீ' நமோ நினகெ3**
**உத3ஶாயி நாராயண ஹ்ருஷிகேஶ ஸாரங்க3பாணி**
**ஸுதி3வ்ய சக்ரஶங்க2க3தா4 த4னஸு க2ட்3கா3தி3 த3ர**
**ப்3ருஹத்3ப3ல ஸர்வதா4ரக நித்யத்ருப்த தர்ப்பக**

தண்ணீரை தோற்றுவிக்கிறாய் (கங்கை). 'தன்வீ' உனக்கு நமஸ்காரங்கள். தண்ணீரில் படுத்திருப்பவன். நாராயணன். ஹ்ருஷிகேஶன். ஸாரங்கபாணி. திவ்யமான சக்ர, சங்கு, கதா ஆகியவற்றை தரித்திருப்பவன். வாள் ஏந்தியவன். மிகச் சிறந்த வலிமை பொருந்தியவன். அனைவருக்கும் ஆதாரமானவன். நித்ய த்ருப்தன். விருப்பங்களை நிறைவேற்றுபவன்.

**80 ஶ்ரீ மேதா4வினே நம:**
**பு3த்தி4வந்தனே 'மேதா4வி' ஸதா3 நமோ எம்பெ3**
**நித்ய நிஸ்ஸீம ஞான ஸ்வரூப ஸ்வதந்த்ர ஸர்வக்ஞ**
**நித்ய வேத3க3ளு நின்ன பு3த்தி4ஸ்த2வாகி3த்3து3 நீனு**
**போ3தி4ஸுவி பி3ரம்மனிகெ3 நாராயண ஹயஶீர்ஷா**

அறிஞனே. 'மேதாவி' உனக்கு நமஸ்காரங்கள். எப்போதும், எல்லைகளற்ற ஞானத்தைக் கொண்டவனே. ஸ்வதந்த்ரனே. ஸர்வக்ஞனே. வேதங்கள் நீ நித்யமாக இருந்து, பிரம்மனுக்கு போதிக்கிறாய். நாராயணனே. ஹயக்ரீவனே.

**81. ஸ்ரீ விக்ரமாய நம:**
**பராக்ரம சரிஸுவி 'விக்ரம' நமோ நினகெ$^3$**
**த்ரிவிக்ரமனெ பாத$^3$ விக்ஷேபகர்த்த விஶ்வரூப**
**த$^4$ராந்தரிக்ஷ தி$^3$வி அளெதி$^3$ விதி$^4$ பூஜிதனெ**
**உருபராக்ரம விஷ்ணோர்னுகம் ஶ்ருதிவேத்$^3$ய**

பராக்ரமசாலியானவனே. 'விக்ரம' னே உனக்கு நமஸ்காரங்கள். த்ரிவிக்ரமனே. பாதங்களால் விஶ்வரூப தரிசனம் எடுத்து, பூமி, அந்தரிக்ஷ, ஆகாயம் என அளந்தாய். பிரம்மனால் பூஜிக்கப்படுபவனே. அபாரமான பராக்ரமம் கொண்டவனே. 'விஷ்ணோர்னுகம்' என்னும் ஶ்ருதியால் போற்றப்படுபவனே.

**82. ஸ்ரீ க்ரமாய நம:**
**பூ$^4$மியலி உத$^3$கக$^3$தி வருத்$^3$தி$^4$ஸ்தித்யாதி$^3$க$^3$ள**
**நீ மாடு$^3$வி 'க்ரம' நமோ ஸூர்யாந்தர்க$^3$த வாயுஸ்த$^2$**
**பூ$^4$மியலி வராஹனு தி$^3$வியல்லி வாமனனு**
**லக்ஷ்மீ ந்ருஸிம்ஹனு அந்தரிக்ஷஸ்த$^2$ ஸர்வஸ்த$^2$ விஷ்ணு**

பூமியில் தண்ணீரில் வேகத்தை அதிகம் / குறைவுபடுத்துகிறாய். 'க்ரம' னே உனக்கு நமஸ்காரங்கள். சூரியனில் இருப்பவனே. வாயுவில் அந்தர்யாமியே. பூமியில் வராகனாக இருப்பவனே. ஆகாயத்தில் வாமனனே. லட்சுமி நரசிம்மனே. அந்தரிக் ஷத்தில் இருப்பவனே. அனைத்து இடங்களிலும் இருப்பவனே. விஷ்ணுவே.

**83. ஸ்ரீ அனுத்தமாய நம:**
**நீனேனெ ஸர்வோத்தமனு அனுத்தம நமோ ஸ்ரீஶ**
**நினகெ$^3$ உத்தமரில்ல ப்ரேரகரில்ல ஸ்வதந்த்ர**
**வனஜாஸன ஶிவாத்$^3$யுத்தமளு அம்ப்$^4$ரணி ஸ்ரீயு**
**க்ருஷ்ணோக்தி 'மத்த:பரதரம் நான்யத் கிஞ்சித$^3$ஸ்தி'**

நீயே ஸர்வோத்தமன். ஒப்புமை இல்லாதவன். 'அனுத்தமனே' உனக்கு நமஸ்காரங்கள். லட்சுமிதேவியின் தலைவனே. உன்னைவிட சிறந்தவர்கள் யாரும் இல்லை. உன்னை நடத்துபவர்கள் யாரும் இல்லை. ஸ்வதந்த்ரனே. கீதை 7-7 ஸ்லோகத்தில் ஸ்ரீகிருஷ்ணனே சொல்வது - என்னைவிட உயர்ந்தவர் வேறு யாரும் இல்லை அர்ஜுனனே.

**84. ஸ்ரீ து$^3$ராத$^3$ர்ஷாய நம:**

**பராப$^4$வ நினகி$^3$ல்ல ‘து$^3$ராத$^3$ர்ஷ’ நமோ எம்பெ$^3$**
**யாரிந்த$^3$லு நினகெ$^3$ அபஜயவில்ல எந்தி$^3$கு$^3$**
**ம்ருத்யு ம்ருத்யு நரஸிம்ஹ வராஹ ஹயாஸ்ய கிருஷ்ண**
**பரஶுத$^4$ர ராம ராக$^4$வ கல்கி நீ அஜித**

உனக்கு தோல்வி என்பதே கிடையாது. ‘துராதர்ஷ’ னே உனக்கு நமஸ்காரங்கள். யாராலும் என்றும் உனக்கு தோல்வி கிடையாது. ம்ருத்யுவிற்கே ம்ருத்யுவான நரசிம்மனே. வராகனே. ஹயக்ரீவனே. கிருஷ்ணனே. பரசுராமனே. ராமனே. ராகவனே. கல்கியே. நீ தோல்வியே இல்லாதவன்.

**85. ஸ்ரீ க்ருதக்ஞாய நம:**
**க்ருதகர்ம ஞானி நீனு ‘க்ருதக்ஞ’ நமோ நினகெ$^3$**
**க்ருதம்ஸ்மர ஸ்ருதிஉக்தி அனுக்$^3$ரஹ மாடு$^3$வியோ**
**ஸ்வாராத$^4$னாரூப கர்மக$^3$ள திளித$^3$வனு நீ**
**தத்தத்$^3$யோக்$^3$ய ப$^2$லதா$^3$த ஸ்ருஷ்டாதி$^3$க$^3$ள ஈஶ**

உன் வேலைகளை சரியாகச் செய்யும் ஞானி நீ. ‘க்ருதக்ஞனே’ உனக்கு நமஸ்காரங்கள். ‘க்ருதம் ஸ்மர’ என்னும் ஸ்ருதி இதையே சொல்கிறது. எனக்கு அருள்வாயாக. அவரவர்களின் ஆராதனைகள், ரூப, கர்மங்களை நன்றாக அறிந்தவன் நீ. அதற்கேற்ப அவர்களுக்கு பலன்களை அளிக்கிறாய். ஸ்ருஷ்டி முதலான கர்மங்களை செய்பவன் நீயே.

**86. ஸ்ரீ க்ருதயே நம:**
**இதரரிம் மாட$^3$லிக்கெ ஸாத்$^4$யவில்லத$^3$ கர்மவ**
**ஸ்வதந்த்ர ஸச்சக்த நீமாள்பெ ‘க்ருதி’ நமோ நமஸ்தே**
**பத்$^4$மஜ ஸ்துதிஸிஹரு ராவணவத$^4$ கர்மவு**
**இதரரிம் ஸாத்$^4$யவாக$^3$த்து நீ மாடி$^3$தி$^3$ எந்து$^3$**

மற்றவர்களால் செய்ய முடியாத செயல்களை நீ ஸ்வதந்த்ரமாகவே செய்து முடிப்பாய். ‘க்ருதி’ யே உனக்கு நமஸ்காரங்கள். ராவண வத காரியமானது, வேறு யாராலும் செய்ய முடியாத செயலாகும் என்று பிரம்மதேவர் முதலானோர் உன்னை புகழ்கின்றனர்.

**87. ஸ்ரீ ஆத்மவதே நம:**
**ஜனன மரண ஸம்ஸாரதி$^3$ம் முக்தராகெ$^3$ யோக்$^3$ய**
**ஸுமனஸரே ப்$^4$ருத்யராகி$^3$ உள்ள ஆத்மவான் நமோ**
**அனக$^4$ அப்ராக்ருத ஸம்ஸார ரஹிதவு நித்ய**
**ஆனந்த$^3$ சின்மாத்ரவவு நீனு ப்$^4$ருத்யமோக்ஷத$^3$னு**

**உக்குவ ஸுபூர்ண ஆனந்த3 ப்ரசுர 'ஸுரானந்த3'**
**பா3கி3ஶிர நமோ எம்பெ3 ஆனந்த3 ஒத3கி3ஸுவி**
**ப4க்தரிகெ3 மோப4னஞான அபரோக்ஷ ப்ரதா3த**
**அகளங்க நித்யானந்தானுப4வ ஸ்வரூப ஸ்வாமி**

நிரம்பி வழிவதான, பூர்ணமான ஆனந்தத்தைக் கொண்டவனே 'ஸுரானந்தனே' உனக்கு என் தலை வணங்கியதான நமஸ்காரங்கள். மகிழ்ச்சியைக் கொடுப்பாயாக. பக்தர்களுக்கு முக்தி ஞானத்தை, அபரோக்ஷத்தை வழங்குபவனே. களங்கமற்ற நித்யானாந்த அனுபவத்தைக் கொண்ட ஸ்வரூபத்தைக் கொண்டவனே. ஸ்வாமியே.

**192. ஸ்ரீ கோ3விந்தா3ய நம:**
**பஶுபுத்ர மொத3லாத3வர ஸம்ப3ந்த4 மாடி3ஸுவ**
**ஸ்ரீஶ 'கோ3விந்த' நமோ ஹ்ரீங்கார நாம ப்ரதிபாத்3ய**
**பூ4ஸுரரிம் அமரரிம் ஸூரிக3ளிம் ஸம்ஸ்துதனு**
**ஸமஸ்த வேத3வாக்யக3ளிந்த3 கீர்த்தித வேத3வேத்3ய**

மாடு, வாரிசு ஆகியவற்றை வழங்குபவனான ஸ்ரீஶனே. 'கோவிந்தனே' உனக்கு என் நமஸ்காரங்கள். ஹ்ரீங்கார என்று அழைக்கப்படுபவனே. பூமியில் வாழ்பவர்களால், முக்தர்களால், தேவதைகளால் வணங்கப்படுபவனே. அனைத்து வேத வாக்கியங்களாலும் போற்றப்படுபவனே. வேதவேத்யனே.

**193. ஸ்ரீ கோ3விதா3ம்பதயே நம:**
**தேஜஸ்விக3ள ஸ்வாமி 'கோ3விதா3ம்பதி' நமோ எம்பெ3**
**ஸஞ்ஞானதேஜஸ்வி அபரோக்ஷி ப4க்தருக3ளிகு3**
**ஸூர்யாதி3க்3ரஹ நக்ஷத்ர த1டித்தாதி3 தே3வர்க்க3ளிகு3**
**தேஜஸ்வி ஸுர ரிஷியஜகர்கு3 ரக்ஷக ஸ்வாமி**

அறிஞர்களின் ஸ்வாமியே 'கோவிதாம்பதியே' உனக்கு என் நமஸ்காரங்கள். உன் பக்தர்களுக்கு யதார்த்த ஞானத்தையும், அபரோக்ஷத்தையும் வழங்குபவனே. சூரியன் முதலான கிரகங்களுக்கும், நட்சத்திர முதலானவர்களுக்கும், தேவர்களுக்கும், ஞானத்தைக் கொண்ட ரிஷிகளுக்கும் கூட நீயே ரக்ஷகனாக இருக்கிறாய். ஸ்வாமியே.

**194. ஸ்ரீ மரீசயே நம:**
**தாமஸ தை3த்யர்க3ள மரண ஹொந்தி3ஸுவ 'மரீசி'**
**நமோ எம்பெ3 அக்3ஞான ஸம்ஹர ஸக்ஞானதா3த**
**சாமீகராப4 ப்ரகாஶவான் நிர்மல ஸ்வரூப**
**அமலகு3ண ஜலநிதே4 க்ருபாம் ம்ருத ஸுரிஸோ**

தாமஸ தைத்யர்களுக்கு மரணத்தை கொடுப்பவனே 'மரீசியே' உனக்கு என் நமஸ்காரங்கள். அஞ்ஞானத்தை அழித்து, ஸுக்ஞானத்தை அளிப்பவனே. தங்கமயமாக ஒளிர்பவனே. நிர்மல ஸ்வரூபம் கொண்டவனே. குறைகள் அற்ற குணங்களைக் கொண்டவனே. பாற்கடலில் வசிப்பவனே. உன் கருணை என்னை மழையை பொழிவாயாக.

**195. ஸ்ரீ த3மனாய நம:**
**ஶத்ருக3ள புர நிரோத4னமாள்ப 'த3மனனே'**
**ஶிரபா3கி3 நமோ எம்பெ3 முப்புரக3ளுரிஸிதி3**
**புரஸ்த2 ஸஞ்ஜீவினி ரஸவ கோ3ரூபதி3 குடி3து3**
**ஹரனொளித்3து3 ஒதகி3தி3 த்ரிபுர த3ஹிஸலிகெ**

எதிரிகளின் இருப்பிடங்களைக் கூட அழிப்பவனே 'தமனனே' உனக்கு தலைவணங்கி நமஸ்காரம் செய்கிறேன். முப்புரங்களை அழித்தவனே. அப்போது ஸஞ்சீவினி ரஸத்தினை பசு ரூபத்தில் வந்து குடித்து உதவினாய். த்ரிபுராஸுரர்களை அழிப்பதற்காக, ருத்ரரில் இருந்து உதவி செய்தாய்.

**196. ஸ்ரீ ஹம்ஸாய நம:**
**ஶத்ருவத4 கொடி3ஸுவவ ஹம்ஸனே நமோ எம்பெ3**
**நிர்தோ3ஷத்வதி3 'ஹம்' ஸாரத்வதி3ம் 'ஸ்வ:' நிர்தோ3ஷஸுக2**
**ஆதி3ஸார ப3லவத்வதி3 ஞானிப4க்தபோஷண**
**நித்ய நிர்தோ3ஷஸார ப3லவந்ததி3ம் ஶத்ருவத4**

எதிரிகளை அழிப்பவனே. ஹம்ஸனே உனக்கு என் நமஸ்காரங்கள். தோஷங்கள் அற்றவன் என்பதால் 'ஹம்' எனப்படுகிறாய். அனைத்தையும் நடத்துவதால் 'ஸ்வ:' எனப்படுகிறாய். தோஷங்கள் அற்ற சுகத்தினைக் கொடுத்து, அனைத்து பக்தர்களுக்கும் வலிமை ஆகியவற்றை அருளி, பக்தர்களை காப்பவனே. எதிரிகளை அழிப்பவனே.

**197. ஸ்ரீ ஸுபர்ணாய நம:**
**விகாரவில்லதெ3 ஸமானவாகி3ருவ 'ஸுபூர்ண'**
**உத்க்ருஷ்டானந்தா3னுப4வ ஸ்வரூப ஸுபர்ண நமோ**
**அகளங்க பரமானந்த3 ஸ்வரூப அவதார**
**ஸகலத3லு ஸர்வஸ்த2ரூபத3லு ஸமானபூர்ண**

எவ்வித மாற்றங்களும் இன்றி சமமாகவே இருப்பவனே 'ஸுபூர்ணனே' உனக்கு என் நமஸ்காரங்கள். அபரிமிதமான ஆனந்த அனுபவ ஸ்வரூபத்தை கொண்டவனே. தோஷங்கள் அற்றதான பரமானந்த ஸ்வரூபனே. உன்னுடைய அவதாரங்கள் அனைத்திலும், அனைத்து ரூபங்களிலும், ஒரே மாதிரியாக பூரணமாக இருப்பவனே.

**198. ஸ்ரீ பு$^{4}$ஜகோ$^{3}$த்தமாய நம:**
**விஷயபோ$^{4}$க$^{3}$க்காகி$^{3}$யே அன்னாதி$^{3}$ போ$^{4}$க$^{3}$ரதரு**
**ஸ்ரீஶனலி பரான்முக$^{2}$ தை$^{3}$த்யரன்ன பீடி$^{3}$ஸுவ**
**ஶாஸக 'பு$^{4}$ஜகோ$^{3}$த்தம' நமோ எம்பெ$^{3}$ ஶேஷஶய்யா**
**ஈஶவாஹன ஸேவகப்ரிய அஸுர ஶிக்ஷகனு**

அன்னம் முதலான விஷய போகங்களில் ஈடுபடும், ஸ்ரீஶனிடம் பக்தி செய்யாத தைத்யர்களை பீடிக்கும், அவர்களை ஆளும் 'புஜகோத்தமனே' உனக்கு என் நமஸ்காரங்கள். ஶேஷன் மேல் படுத்திருப்பவனே. வலிமையான கருடனை வாகனமாக கொண்டவனே. பக்தர்களின் ப்ரியனே. அசுரர்களை தண்டிப்பவனே.

**199. ஸ்ரீ ஹிரண்யக$^{3}$ர்பா$^{4}$ய நம:**
**வஜ்ரஹஸ்தனே 'ஹிரண்யனாப$^{4}$னே' நமோ நினகெ$^{3}$**
**வஜ்ரரேகா$^{2}$ங்கித ஹஸ்ததி$^{3}$ வஜ்ரகூரு நக$^{2}$தி$^{3}$ம்**
**நிர்ஜரர பூ$^{4}$ஸுரர ஹரிப$^{4}$க்த ப்ரஹ்லாத$^{3}$ன**
**மூர்ஜக$^{3}$த$^{3}$ வைரி ஹிரண்யகன நாபி$^{4}$ ஸீளிதி$^{3}$**

தங்கமயமான ஹஸ்தங்களைக் கொண்டவனே 'ஹிரண்யனாபனே' உனக்கு என் நமஸ்காரங்கள். தங்கமயமான ரேகைகளைக் கொண்ட கைகளால், அதில் உள்ள வலிமை பொருந்திய நகங்களால், சிறந்த தேவதையான, ஹரிபக்தனான பிரகலாதனின் எதிரியான ஹிரண்யகனின் நாபியை கிழித்து அவனை கொன்றவனே.

**200. ஸ்ரீ ஸுதபஸெ நம:**
**அஸுரமாயா பூர்ண நாஶமாள்ப 'ஸுதபோ' நமோ**
**நீ ஸுபூர்ண ஞானஸ்வரூப மித்யாஞான ஹந்த**
**'ஸு' ஸம்பூர்ண 'த' தாரக 'ப' பரமேஶ்வர பாத$^{1}$**
**பி$^{3}$ஸஜப$^{4}$வ நின்னஸுத ஸுதபாத ஸுதபா**

அசுர சக்திகளை முழுமையாக அளிப்பவனே 'ஸுதபனே' உனக்கு என் நமஸ்காரங்கள். நற்குணங்களை முழுமையாகக் கொண்டவன். ஞான ஸ்வரூபன். மித்யா ஞானத்தை அழிப்பவனே. அனைத்தையும் தரித்திருப்பவனான ஸர்வோத்தமனே. பிரம்மன் உன் மகன். ஸச்சிதானந்த ஸ்வரூபியே. அனைவரையும் காப்பவனே.

**கு$^{3}$ருக$^{3}$ மத்$^{4}$வக$^{3}$ ஸரஸிஜாஸனபித ஸ்ரீஶ**
**விரஜ கல்யாணதம ஸுகு$^{3}$ணாப்$^{3}$தி$^{4}$ ஸர்வகர்த்த**
**'ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ' ஸஹஸ்ர நாமனே நமோ**
**நீ ரசிஸி நுடிஸித்$^{3}$து$^{3}$ அர்ப்பிதவு ப்ரீதனாகோ$^{3}$ ||ப**

**|| மூன்றாம் ஸந்தி முடிந்தது ||**

**|| ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து ||**

**நான்காம் ஸந்தி**

**கல்யாணதம ரூப அனக[4] ஸுகு[3]ணார்ணவனெ**
**மாலக்ஷ்மிபதி பி[3]ரம்ம விஶ்வாக்[2]ய விஷ்ணு வஷட்கார**
**ஶீல ஜீவோத்தம வர வாயு பி[3]ரம்மதா[4]மன ஹ்ருத்**
**கீலாலஜாந்தஸ்ய பரமாத்ம கேஶவ நமஸ்தே ||ப**

**201. ஸ்ரீ பத்மனாபா[4]ய நம:**
**ஸிம்ஹ நாதா[3]தி[3]க[3]ளந்தெ பா[4]ஸநாம 'பத்மனாப[4]'**
**அஹர்னிஶி நமோ நினகெ[3] ஆதி[3]வராஹ நின்ன**
**ஸிம்ஹ நாத[3] மஹாஸ்வனதி[3] நீனெந்து[3] திளிஸிதி[3]**
**பி[3]ரம்மனிகெ[3] நாபி[4]கமலதி[3] ஜன்மவித்தவனு**

ஸிம்ஹ நாதத்தைப் போல கம்பீரமான கர்ஜனை கொண்டவனே. 'பத்மனாபனே' உனக்கு என் இரவும் பகலுமான நமஸ்காரங்கள். ஆதிவராகனே. உன் சிம்ம நாதத்தால், உன்னைப் பற்றி தெரிவித்தாய். நாபி கமலத்திலிருந்து பிரம்மனை படைத்தவனே.

**202. ஸ்ரீ ப்ரஜாபதயே நம:**
**ஜக[3]த்ப்ராணிபாலக 'ப்ரஜாபதி' நமோ நமோ**
**ஜக[3]த்தல்லி ப்ரஜெக[3]ள ஸ்வாமி நியந்த நீனேவெ**
**ஏக சித்ததி[3] ஜபிபருக[3]ள ரக்ஷகானந்த[3]ப்ரத[3]**
**ஜக[3]த்காரணனு விஶ்வவ்யாபி நீனெ ஸர்வகர்த்தா**

உலகின் அனைத்து பிராணிகளையும் காப்பவனே 'ப்ரஜாபதியே' உனக்கு என் நமஸ்காரங்கள். உலகில் அனைத்து பிரஜைகளின் ஸ்வாமி நீயே. ஒரு மனதுடன் உன்னை ஜெபிப்பவர்களை காப்பவர்களில் நீயே முதல்வன். இந்த உலகின் காரணன் நீயே. அனைத்து இடங்களிலும் வ்யாபித்திருக்கிறாய். அனைத்தையும் செய்பவன் நீயே.

**203. ஸ்ரீ அம்ருத்யவே நம:**
**மாரகரு ஹிம்ஸகரூ இல்லத[3]வ 'அம்ருத்யு' நீ**
**ஶரணு நமோ ப[4]க்தரக்ஷக ஸ்ரீஶ நரஸிம்ஹ**
**ஶரணரிகெ[3] ஜன்ம ஜராமரணாதி[3] ஸம்ஸார**
**பரிஹரிஸி முக்தி அம்ருதத்வ நீடி[3] பொரெவி**

துன்பம் கொடுப்பவர். வெல்பவர் யாரும் இல்லாத 'அம்ருத்யுவே' உன்னை சரணடைகிறேன். பக்தர்களை காப்பவனே. ஸ்ரீலட்சுமி தேவியின் தலைவனே.

நரசிம்மனே. உன்னை சரணடைந்தவர்களுக்கு, அவர்களின் சம்சார பந்தனத்தை பரிகரித்து, முக்தி என்னும் அமிர்தத்தைக் கொடுத்து காக்கிறாய்.

**204. ஶ்ரீ ஸர்வத்3ருதே நம:**
**ஸர்வகாலத3லு நீ ப்ரகாஶமான மஹிமாவான்**
**'ஸர்வத்3ருக்' நமோ எம்பெ3 ஸர்வத்ர ஸர்வவ்யாபி நீனு**
**ஸர்வம்பஶ்யதி ஆது3த3ரிந்த3 ஸர்வத்3ருக் எம்பு3வரு**
**ஸர்வதோமுக2னெந்து3 ப்ரஸித்3த4 நீ ஶ்ரீ நாரஸிம்ஹ**

அனைத்து காலங்களிலும் நீ ஒளிமயமான மகிமைகளை கொண்டவன். 'ஸர்வத்ருக்' உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்து இடங்களிலும் வ்யாப்தனானவன் நீயே. அனைத்தையும் பார்க்கிறாய் ஆகையால் 'ஸர்வத்ருக்' என்பார்கள். அனைத்து திசைகளிலும் பார்ப்பவன் என்று புகழ் பெற்றிருக்கிறாய். ஶ்ரீ நரசிம்மனே.

**205. ஶ்ரீ ஸிம்ஹாய நம:**
**மேக4தாட3னரூப ஶாஸன மாடு3வியோ 'ஸிம்ஹ'**
**பா3கி3 ஶிர நமோ எம்பெ3 ஶங்க்ருந்த3 பர்ஜன்ய ஸேவ்ய**
**நாக3ராஜன க3ர்வப3டி3தி3 கி3ரியெத்தி கிருஷ்ண**
**கோ3குலவ காய்த3 கோ3விந்த3 தே3வ தே3வ ஸிம்ஹ**

மேகத்தை மீறியதான ரூபத்தை எடுத்து அனைவரையும் ஆள்பவனே. 'ஸிம்ஹனே' . உனக்கு தலை வணங்கி நமஸ்காரம் செய்கிறேன். அபாரமான மழை பெய்தபோது, உன் மேல் குடை பிடித்து காத்த நாகராஜனை, பின்னர் அவனுடைய கர்வத்தை அடக்கினாய் (காளிந்தி). கோவர்த்தன மலையை தூக்கி கோகுலத்தை கிருஷ்ணனான காத்தாய். கோவிந்தனே. தேவதேவனே. ஸிம்ஹனே.

**206. ஶ்ரீ ஸந்தா4த்ரே நம:**
**ப்ருது2வீத்3யு ஸந்தா4னமாள்ப 'ஸந்தா4த' நமோ நினகெ3**
**த்3யுப்4வாதி3 ஸர்வதா4ரக பரம ஆத்ம ஸர்வேஶ**
**ஸர்வக்கு ஆதா4ரனாகி3த்3து3 ஜனபோஷண மாள்பி**
**தைத்தரீய ஸத்பா4ஷ்யனோள்பது3 யோக்3ய கு3ருத்3வார**

பூமி, ஆயுள், வாரிசி ஆகியவற்றைக் கொடுப்பவனான 'ஸந்தாதனே' உனக்கு என் நமஸ்காரங்கள். தேவர்கள் முதலான அனைவருக்கும் ஆதாரமானவனே. பரமாத்மனே. ஸர்வேஶனே. அனைத்திற்கும் ஆதாரனாக இருந்து, மக்களை நீ காக்கிராய். ஒரு தக்க குருவின் மூலமாக தைத்திரிய ஸத்பாஷ்யத்தை படித்தால் உன்னை அறியலாம்.

**207. ஶ்ரீ ஸந்தி4மதே நம:**
**யக்ஞக3ளிந்த3 ஸம்யோக3மான் 'ஸந்தி4மான்' நமோ நமோ**

**யக்3ஞப்4ருத் யக்ஞக்ருத் யக்ஞ யக்ஞபு4க் யக்ஞஸாத4ன**
**யக்ஞஸ்த விஷ்ணோஷரணெம்பெ3 ஸர்வஸ்வாமி நம்மொளிஹ**
**ஸம்யோக3 யக்ஞ நாம வாயுவந்தர்யாமி யக்ஞ ஶ்ரீஶ**

யக்ஞங்களால் மகிழ்பவனே 'ஸந்திமான்' உனக்கு என் நமஸ்காரங்கள். யக்ஞங்களை செய்பவன், செய்விப்பவன், அதனால் வரும் ஸாரத்தை ஏற்றுக் கொள்பவன் மற்றும் அந்த யக்ஞத்தில் இருப்பவனான விஷ்ணுவே உனக்கு நான் சரணடைகிறேன். அனைவருக்கும் ஸ்வாமியே. நமக்குள் இருப்பவனான, பாரதிரமண முக்யபிராணாந்தர்கதனான, ஸம்யோக யக்ஞனே. லட்சுமிதேவியின் தலைவனே.

**208. ஶ்ரீ ஸ்தி2ராய நம:**
**ஹஸ்தத3லி வஜ்ரஸ்தா2பக 'ஸ்தி2ர' நமோ நினகெ3**
**கஸ்த2 குஸ்த2 கே2சர ஸுராஸுர ஶிவவிதி4**
**ஸுஸ்திரரல்ல புட்டிபோபுரு நீ ஸ்தி2ர அச்யுத**
**ஸ்வதந்த்ர நித்யனு அப்ராக்ருத முக்2ய ஸ்தி2ர நீனே**

கைகளுக்கு வலிமையைக் கொடுப்பவனே 'ஸ்திரனே' உனக்கு என் நமஸ்காரங்கள். பூமியில், தண்ணீரில், வானத்தில் சஞ்சரிக்கும் என அனைத்து ஜீவர்களும் / பிராணிகளும், மற்றும் தேவதைகள், ருத்ரர், பிரம்மன் ஆகியோரும்கூட நிலையானவர்கள் அல்ல, பிறப்பு இறப்பு கொண்டவர்கள். நீ மட்டுமே ஸ்திரமானவன். அழிவில்லாதவன். ஸ்வதந்த்ரன். நித்யன். அப்ராக்ருத சரீரம் கொண்டவன். ஸர்வோத்தமனான ஸ்திரன் நீயே.

**209. ஶ்ரீ அஜாய நம:**
**சோரரு து3ஷ்டரொளு பரஸ்பர வைமனஸு**
**பா4ரி க3லபெ4 உண்டுமாள்ப 'அஜ' நமோ நினகெ3**
**ஸுர நராதி3க3ளந்தெ ஜன்ம நினகி3ல்லவு**
**நரஸிம்ஹ ஆவிர்பா4வதி3ம் நஜாயதேதி அஜ:**

திருடர்கள், துஷ்டர்கள் ஆகியோருக்கும் பரஸ்பரம் கருத்து வேறுபாடு மற்றும் குழப்பங்களை உருவாக்கும் 'அஜனே' உனக்கு என் நமஸ்காரங்கள். தேவதைகள், மனிதர்கள் ஆகியோருக்கு இருப்பதைப் போல உனக்கு பிறப்பு என்பது இல்லை. நரஸிம்மனாக தோற்றம் கொண்டவனே. 'ந ஜாயதேதி அஜ:' - யார் செல்வதில்லையோ (இறப்பதில்லையோ), அவன் அஜன்.

**210. ஶ்ரீ து3ர்மர்ஷணாய நம:**
**ஶத்ருக3ளிகெ3 உக்3ர 'து3ர்மர்ஷண' நமோ நினகெ3**
**ஶத்ரு து3ஷ்டரிகெ3 ப4யங்கர கா4தக ந்ருஹரே**
**வராஹ ராம கிருஷ்ண கல்கி நீ யாரிந்த3லு**
**மர்ஷணகெ அஶக்யனு பூர்ணப3ல ரூப நீனு**

எதிரிகளுக்கு உக்ரனே. துர்மர்ஷணனே உனக்கு என் நமஸ்காரங்கள். எதிரிகளுக்கு துஷ்டர்களுக்கு பயங்கரமான எதிரியே. ந்ருஹரியே. வராகனே. ராமனே. கிருஷ்ணனே. கல்கியே. நீ யாராலும் (முழுமையாக) அறியப்பட முடியாதவன். பூர்ணபலன்களின் ரூபம் நீயே.

**211. ஸ்ரீ ஶாஸ்தாய நம:**
**ஶத்ருக$^3$ள நாஶகனு 'ஶாஸ்தா' நமோ எம்பெ$^3$**
**சோரர து$^3$ஷ்டர அஸத்யவந்தர த$^3$ண்டிஸுவி**
**சராசர ஜக$^3$த்ஸர்வ நின்ன அதீ$^4$னவாகி$^3$ஹுது$^3$**
**யாரு ஸமரில்லத$^3$ பரமைக ஶாஸ்தா நினேவெ**

எதிரிகளை அழிப்பவனே. ஶாஸ்தாவே. உனக்கு என் நமஸ்காரங்கள். திருடர்களை, துஷ்டர்களை, பொய் பேசுபவர்களை தண்டிக்கிறாய். சராசரங்களால் நிறைந்த இந்த உலகம் முழுவதும் உன் அதீனமாகவே இருக்கிறது. யாரும் உனக்கு சமமானவர் இல்லை. ஸர்வோத்தமனான ஶாஸ்தா நீ ஒருவனே.

**212. ஸ்ரீ விஶ்ருதாத்மனே நம:**
**ப்ரஸித்$^3$த$^4$வாகி$^3$ ஸ்தோத்ர மாடி$^3$ஸிகொம்ப$^3$ 'விஸ்ருதாத்மா'**
**நா ஶிரபா$^3$கி$^3$ நமோ நமோ எம்பெ$^3$ கருணாப்$^3$தி$^4$யே**
**ஸ்ரீஶ ஈ ஸ்தோத்ர நுடி$^3$ கொள்ளோ ஸுப்ரஸன்ன**
**ப்ரஸித்$^3$த$^4$ ஸ்வரூபவந்த விஶ்ருதாத்ம ஸ்ரீனிவாஸ**

அனைவராலும் ஸ்தோத்திரம் சொல்லப்பட்டு, அவற்றை ஏற்றுக் கொள்பவனே. விஶ்ருதாத்மனே. உனக்கு நான் தலைவணங்கி நமஸ்காரம் செய்கிறேன். கருணைக்கடலே. லட்சுமிதேவியின் தலைவனே. இந்த ஸ்தோத்திரத்தை ஏற்றுக் கொள்வாயாக. புகழ்பெற்ற ஸ்வரூபங்களைக் கொண்டவனே. விஶ்ருதாத்மனே. ஸ்ரீனிவாஸனே.

**213. ஸ்ரீ ஸுராரிக்$^4$னே நம:**
**ஸுராரி தை$^3$த்யர ஹந்தா 'ஸுராரிஹா' நமோ நமோ**
**ஸுராரி ஹிரண்யகரன்ன ஸீள்தி$^3$ ப$^4$க்தபால**
**முர நரரன்ன அளிதி$^3$ ஸுஜன ஸுரபாலா**
**ஜைரேய கௌரவர கொல்லிஸிதி$^3$ பாண்ட$^3$வப்ரிய**

தேவதைகளின் எதிரிகளை அழிப்பவனே. ஸுராரிஹனே. உனக்கு என் நமஸ்காரங்கள். தேவர்களின் எதிரியான ஹிரண்யாக்ஷனை கொன்றவனே. பக்தர்களை காப்பவனே. முர-அசுரன், நரகாசுரன் ஆகியோரைக் கொண்றவனே. ஸஜ்ஜனர்களை, தேவர்களை காப்பவனே. பாண்டவர்களின் நண்பனே. கௌரவர்களைக் கொல்ல வைத்தவனே.

**214. ஸ்ரீ கு$^3$ரவே நம:**
**அம்ருதாதி$^3$ த்$^3$ரவ்யக$^3$ள க்$^3$ருஹீதா 'கு$^3$ருவே' நமோ**
**அம்ருத ஸுரரிகு$^3$ணிஸிதி$^3$ அஸுரரிகெ$^3$ இல்ல**
**ப்$^3$ரம்மாதி$^3$க$^3$ளிகெ$^3$ உபதே$^3$ஶிஸி$^3$தி யதா$^2$யோக்$^3$ய**
**நீ மூல கு$^3$ரு ஸ்ரீமன் நாராயண ஹம்ஸ ஹயாஸ்ய**

அம்ருதம் முதலான அனைத்து பொருட்களையும் (அதன் ஸாரத்தை) பெற்றுக் கொள்பவனே. 'குருவே' உனக்கு என் நமஸ்காரங்கள். அந்த அமிர்தத்தை தேவர்களுக்கு பிரித்துக் கொடுத்தாய். அசுரர்களுக்கு கொடுக்கவில்லை. அவரவர்களின் யோக்யதைக்கேற்ப பிரம்மாதிகளுக்கு உபதேசம் செய்தாய். நீயே மூல குரு. ஸ்ரீமன் நாராயணனே. ஹம்ஸனே. ஹயக்ரீவனே.

**215. ஸ்ரீ கு$^3$ருதமாய நம:**
**உத்க்ருஷ்ட ரீதியலி ஏக விஸ்தார 'கு$^3$ருதம'**
**உத்தமாங்க$^3$த$^3$ பா$^3$கி$^3$ ஶரணாகி$^3$ நா நமோ எம்பெ$^3$**
**இந்த்$^3$ர கு$^3$ரு ருத்$^3$ர ருத்ரகு$^3$ரு பத்$^3$மஜ ஸமீர**
**பத்$^3$மஜ கு$^3$ரு ஸ்ரீபதி கு$^3$ருதமனு அகு$^3$ரு**

மிகச் சிறந்ததான வகையில் ஸர்வோத்தமனாக இருப்பவனே 'குருதமனே' அனைத்து அனைத்து அங்கங்களாலும் உன்னை சரணடைந்து வணங்குகிறேன். இந்திரனின் குரு ருத்ரர்; ருத்ரரின் குரு பிரம்ம வாயுகள்; அவர்களின் குரு ஸ்ரீபதி, நீயே. குருதமனே. குரு இல்லாதவனே.

**216. ஸ்ரீ தா$^4$ம்னே நம:**
**ஸோமார்க்காதி$^3$ க்$^3$ரஹதே$^3$வதெ பு$^3$த்$^3$தி$^4$ ஹொளிஸுவி நீ**
**'தா$^4$ம' நமோ தேஜோரூபவான் தா$^4$ம நாமா**
**ஸோம ஸூர்யாதி$^3$க$^3$ள பு$^3$த்$^3$தி$^4$ க்ரியா நின்னிந்த$^3$லேவெ**
**தம்ம தம்ம ப்ரகாஶனாதி$^3$க$^3$ளன்னு மாடு$^3$வரு**

சந்திரன், சூரியன் ஆகிய கிரகங்களில் இருந்து அவர்களுக்கு ஒளி கொடுப்பவனே 'தாமனே' உனக்கு என் நமஸ்காரங்கள். ஒளி பொருந்தியவனே. தாம என்று அழைக்கப்படுபவனே. அந்த சந்திரன், சூரியன் ஆகியோர்களின் புத்தி, செயல்கள் உன்னாலேயே நடக்கின்றன. உன்னாலேயே அவர்கள் மற்றவர்களுக்கு ஒளி கொடுக்கிறார்கள்.

**217. ஸ்ரீ ஸத்யாய நம:**
**ப$^4$க்தரிகெ$^3$ உத்தமவாத$^3$ போ$^4$க$^3$ ஒத$^3$கி$^3$ஸுவி**
**'ஸத்யனே' நமோ ஸதத ப$^4$க்தவத்ஸலனெ ஸ்ரீஶ**
**தத்தத்காலதி$^3$ ப$^4$க்தேஷ்டதா$^3$த ஹிதகரனு நீ**

**ஸந்தத ப்ரியகர ஸாது4 பரிபால கருணி**

பக்தர்களுக்கு மிகச்சிறந்த்தான போகத்தை அருள்பவனே 'ஸத்யனே' எப்போதும் உன்னை வணங்குகிறேன். பக்தவத்ஸலனே. லட்சுமிதேவியின் தலைவனே. அந்தந்த (தக்க) காலங்களில் பக்தர்களின் இஷ்டங்களை நிறைவேற்றுபவனே. இதம் அளிப்பவனே. நீ எப்போதும் அனைவருக்கும் ப்ரியமானவனாக இருக்கிறாய். ஸஜ்ஜனர்களுக்கு அருள்பவனே. கருணைக் கடலே.

**218. ஸ்ரீ ஸத்யபராக்ரமாய நம:**
**ஸோமாதி3 ஸாது4 யக்ஞரதராத3வர க்3ருஹதி3**
**ரமாயுக் வாஸமாள்பி 'ஸத்யபராக்ரம' நமஸ்தே**
**பி3ரம்மவாய்வர்க்காதி3 ஸத்யர பராக்ரம நின்னிந்த3**
**வாமன த்ரிவிக்ரம ஸத்யசாரி ப3லிகொ3லிதி3**

ஸோமயக்ஞ முதலான யக்ஞங்களை செய்பவர்களின் வீட்டில் ஸ்ரீலட்சுமிதேவி உடன் வசிக்கிறாயே. 'ஸத்யபராக்ரமனே' உன்னை வணங்குகிறேன். பிரம்ம, வாயு, சூரியன் ஆகியோரின் பராக்கிரமங்கள் (செயல்கள்) உன்னாலேயே நடக்கின்றன. வாமனனே. த்ரிவிக்ரமனே. உண்மையை பேசி பின்பற்றியவனான பலிச் சக்கரவர்த்திக்கு அருளியவனே.

**219. ஸ்ரீ நிமிஷாய நம:**
**ஜாக்3ரதாவந்தனே 'நிமிஷ' நமோ நமோ நினகெ3**
**ஜாக்3ரதா அவஸ்தா2 ப்ரவர்த்தக ஸ்தூ2லபு4க்ஞ விஶ்வ நீ**
**ஜக3 ஸ்தூ2ல விஷயக3ளோள் ஸுக2ஸார நீனிருவி**
**ஜக3ல்லீலானந்த3 நீ ஸ்வாக்2யரஸ கொம்பி3 அனக4**

எப்போதும் முழிப்புடன் இருப்பவனே. 'நிமிஷனே' உனக்கு என் நமஸ்காரங்கள். விழிப்பு நிலையை கொடுப்பவனே. உலகில் அனைத்து ஸ்தூல பதார்த்தங்களிலும், அதன் சுகங்களை (சுக பலன்களை) ஏற்றுக் கொள்பவனாக இருப்பவனே. உலகின் அனைத்து செயல்களையும் உன் லீலைகளால் செய்பவனே. அனைத்திலிருந்தும் ஸ்வாக்ய ரஸத்தினை ஏற்றுக் கொள்பவனே. யாராலும் வெல்லப்பட முடியாதவனே.

**220. ஸ்ரீ அனிமிஷாய நம:**
**மனுஷ்யாதி3 ஜீவரிகெ3 பி4ன்னனு லீலாக்ரீடா3**
**அனுப4வ தே3வ 'அனிமிஷனே' நமோ நினகெ3**
**மனுஷ்யவத் அவதார மாடி3தரூ நரனல்ல**
**பி4ன்னனு ஞானானந்த3ப3ல அப்ராக்ருத விக்3ரஹ**

மனிதர்கள் முதலான அனைத்து ஜீவர்களைவிட பின்னனே (வேறுபட்டவனே). லீலைகளால் செயல்களை செய்பவனே. அனுபவத்தை கொடுக்கும் தேவனே.

'அனிமிஷனே' உனக்கு என் நமஸ்காரங்கள். மனிதனாக நீ அவதாரம் செய்திருந்தாலும், நீ மனிதன் அல்ல. அனைவரையும் விட வேறுபட்டவன். ஞானானந்த பலரூபனே. அப்ராக்ருத தேகத்தைக் கொண்டவனே.

**221. ஸ்ரீ ஸ்ரக்3விணே நம:**
**அதிக்ரமிஸி இருவந்த2 'ஸ்ரக்3வி' நமோ நினகெ3**
**ஸ்ரீதே3விகு3 பி3ரம்மாமுவாதி3 ஸுரநர ஸமஸ்த**
**ஜந்துக3ளு சராசர ஸர்வக்கு ஸஹா மீரித3**
**அதிபராக்ரம கு3ணப3லாதி3க3ளிந்த3 பூர்ண**

அனைவரையும் மீறியவனான 'ஸ்ரக்வி' உனக்கு என்னுடைய நமஸ்காரங்கள். ஸ்ரீதேவிக்கும், பிரம்மதேவரே முதலான அனைத்து சுரர்களுக்கும், நரர்களுக்கும், அனைத்து ஜந்துக்களுக்கும், சராசரங்களான அனைத்திற்கும் எப்போதும் மீறியவனே. அனைவரையும்விட பராக்ரமியே. குண, பலங்களால் பூர்ணனே.

**222. ஸ்ரீ வாசஸ்பதயே நம:**
**வாகீ3ந்த்3ரியாதி3பதி 'வாசஸ்பதி' நமோ நினகெ3**
**ஆக3மாம்னாய வேதோ3பனிஷத் வாக்யக3ள ஸர்வக்கு**
**அக3ணித மஹாத்ம்யவாகி3 நீனு பதியாகி3ருவி**
**ஸக்ரமவேத3வாக்யக3ள ரக்ஷிபி ப்ரளயதி3**

வாக் இந்திரியத்திற்கு அதிபதியே 'வாசஸ்பதியே' உனக்கு என் நமஸ்காரங்கள். ஆகம, ஆம்னாய வேதங்கள், உபநிஷத் வாக்கியங்கள் என அனைத்திற்கும் நீயே தலைவனாக இருக்கிறாய். அகணித மஹாத்ம்யத்தைக் கொண்டவன் நீ. பிரளய காலத்தில் அனைத்து வேத வாக்கியங்களையும் காப்பவனே.

**223. ஸ்ரீ உதா3ரதி4யே நம:**
**ஸர்வப3ந்த4 நாஶக கர்மவான் 'உதா3ரதீ4' நமோ**
**'உ' ஸர்வோத்க்ருஷ்டதா3ர லக்ஷ்மிய 'தீ4' ஞானஸுகா2தி3**
**ஸர்வப3லகு3ணாஸ்ரயனு உதா3ர ஸ்ருஹுத3**
**ஸர்வதா3 நிர்தோ3ஷ நிரவதி4க ஞானவான் நீனு**

அனைத்து பந்தங்களையும் அழிக்கும் கர்மங்களை செய்விப்பவனே 'உதாரதி' யே உனக்கு என் நமஸ்காரங்கள். உ என்றால் அனைத்து நலன்களையும் கொடுப்பளான லட்சுமிதேவியின்; தீ - என்றால் அனைத்து ஞான ஸுக, பல குணங்களின் ஆஸ்ரயனே. கருணை வடிவானவனே. நல் இதயம் கொண்டவனே. எப்போதும் தோஷம் அற்றவனே. எல்லையற்றதான ஞானத்தைக் கொண்டவனே.

**224. ஸ்ரீ அக்3ரணே நம:**
**ஶுபா4ஶுப4 கர்ம நேதா 'அக்3ரணே' நமோ நினகெ3**

**ஶுப4 மோக்ஷ ஸாத4னெ ஸ்ரவண மனன ஸுத்4யான**
**ஶுப4 விரோதி4 ஸம்ஸார தமஸு ஸாத4ன கர்ம**
**ஶுப4தம நீ ஈர்வித4 கர்மக்கு அக்3ர நமோ**

ஶுப, அஶுப என அனைத்து கர்மங்களையும் செய்பவனே 'அக்ரணே' உனக்கு என் நமஸ்காரங்கள். **ஶு**பமான மோட்சத்திற்கு ஸாதனைகளான ஸ்ரவண, மனன, ஸுத்யான ஆகியவற்றை செய்விப்பவனே. அ**ஶு**பமான ஸம்ஸாரத்திற்கு, தமஸ்ஸிற்கு ஸாதனமான கர்மங்களை செய்விப்பவனே. **ஶு**பதமனே. நீயே இந்த இரு வித கர்மங்களுக்கும் முதல்வன் (தலைவன்).

**225. ஸ்ரீ க்3ராமண்யே நம:**
**வித4வித4 அபீ4ஷ்டாவளி நியமேன கொடு3வி**
**ஸ்ரீத3 'க்3ராமணி' நினகெ3 நமோ த3யமாடு3**
**ஸாத4ன விவிதா4னுசரிபர யோக்3யதா அந்தெ**
**ஸாத4னக்கு தத்பலக்கு நீ நியாமக ஸுப2லி**

பற்பல அபீஷ்டங்களின் வரிசையை யோக்யதைக்கேற்ப கொடுப்பவனே. ஸ்ரீதேவியின் தலைவனே. 'க்ராமணி' யே உனக்கு என் நமஸ்காரங்கள். கருணை புரிவாயாக. பற்பல ஸாதனைகளை செய்பவர்களின் யோக்யதைக்கேற்ப அந்த ஸாதனத்திற்கும், அதன் பலனுக்கும், நீ நியாமகனாக இருக்கிறாய். பலன்களைக் கொடுப்பவனே.

**226. ஸ்ரீ ஸ்ரீமத்யை நம:**
**விகாரவில்லத3 கொரதெயில்லத3 காந்திமான்**
**ஏகாத்மா 'ஸ்ரீமான்' நமோ ஜ்யோதிர்மய ஸ்ரீகாந்தா**
**அர்கேந்து3 தாரா மொத3லாத3 ஸர்வதேஜஸ்விக3ள**
**ப்ரகாஶக்கெ ப்ரகாஶப்ரத நீ ஸ்வதந்த்ர ஜ்யோதி**

எவ்வித மாற்றங்களும், குறைகளும் அற்றவனே. ஒளிமயமானவனே. ஸர்வோத்தமனே. 'ஸ்ரீமான்' உனக்கு என் நமஸ்காரங்கள். ஜ்யோதிர்மயமானவனே. ஸ்ரீதேவியின் தலைவனே. சூரிய, சந்த்ர, நட்சத்திரங்கள் என அனைத்து தேஜஸ்விகளின் ஒளிக்கு ஒளி கொடுப்பவனே. நீ ஸ்வதந்த்ரமாகவே ஜ்யோதியை வழங்குகிறாய்.

**227. ஸ்ரீ ந்யாயாய நம:**
**மஹாபு3த்3தி4மான் 'ந்யாய' நமோ ஸதா3 நமோ நினகெ3**
**மஹார்ஹ நீ தத்தத்யோக்3யப2ல நியமன மாடி3**
**அர்ஹதெ அனுஸாரவீவ புண்யவந்தர்க3ள புண்ய**
**லோக, பாப மாடி3த3வரிகெ3 பாப லோகவன்ன**

மிகச் சிறந்த புத்திவந்தனே. ‘நியாயனே’ உனக்கு என் நமஸ்காரங்கள். உத்தமமானவனே. அவரவர்களின் யோக்யதைக்கேற்ப அவர்களை வழிநடத்தி, தக்க பலன்களை கொடுப்பவனே. புண்ணியம் செய்தவர்களை புண்ணிய உலகிற்கும், பாவம் செய்தவர்களுக்கு பாவ லோகத்திற்கும் அனுப்புபவனே.

**228. ஸ்ரீ நேத்ரே நம:**
**பர்வதசே$^{2}$த$^{3}$ மாடு$^{3}$வ ‘நேதா’ நமோ நினகெ$^{3}$**
**நிர்வாஹ மாடு$^{3}$வி ஸர்வவ ஸதா$^{3}$ ஸர்வத்ர நீனு**
**ஸர்வப்ராணிக$^{3}$ள ஸத்தா ப்ரமதி ப்ரவ்ருத்திக$^{3}$ளு**
**ஸர்வேஶ நின்னாதீ$^{4}$னவாகி$^{3}$ஹவு நியம்யவாகி$^{3}$**

பர்வதங்களை உடைக்கும் வலிமை கொண்டவனே ‘நேத்ரனே’ உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்தையும் நீயே நிர்வகிக்கிறாய். எப்போதும், அனைத்து இடங்களிலும், நீயே, அனைத்து பிராணிகளுக்கு நல்புத்தியைக் கொடுக்கிறாய். அவர்களது நடவடிக்கைகளை செய்து, செய்விக்கிறாய். அனைவருக்கும் ஈஶனே. அனைத்தும் உன் அதீனத்திலேயே இருக்கின்றன.

**229. ஸ்ரீ ஸமீரணாய நம:**
**ப்ரேரகனு ஸர்வரிகு$^{3}$ ஸதா$^{3}$ ‘ஸமீரண’ நமோ**
**ஈரயதி ப்ரேரயதி ‘ஸம்’ ஸம்யக் ஸமீரண நீ**
**வரவாயு தே$^{3}$வரிகெ$^{3}$ ஸுக$^{2}$ப்ராபக ஸமீரண**
**ஸ்ரீ ரமாதே$^{3}$விய ஸ்துதி ஶப்$^{3}$த$^{3}$தி$^{3}$ந்த$^{3}$ ஸேவ்ய**

அனைவருக்கும் நீயே ப்ரேரகனாக இருக்கிறாய். ‘ஸமீரணனே’ உனக்கு என் நமஸ்காரங்கள். ப்ரேரணை செய்பவனும், அதனை நடத்துபவனும் நீயே. வாயு தேவருக்கு சுகத்தைக் கொடுப்பவன் நீயே. ஸ்ரீரமாதேவி, உன்னை எப்போதும் வணங்குகிறாள்.

**230. ஸ்ரீ ஸஹஸ்ரமூர்த்$^{4}$னே நம:**
**ப$^{4}$க்தரிகெ$^{3}$ சிரகால மஹாஹர்ஷ கொடு$^{3}$வவ**
**ப$^{4}$க்தேஷ்ட ‘ஸஹஸ்ரமூர்த்$^{3}$தா$^{4}$’ நமோ ஸ்ரீராமசந்த்$^{3}$ர**
**அதி அஸங்க்$^{2}$யேய மூர்த்$^{3}$தா$^{4}$ ‘ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ:’**
**எந்து$^{3}$ புருஷ ஸூக்த ஹொக$^{3}$ளுத்தெ பூர்ண ஞானாத்மா**

பக்தர்களுக்கு நிரந்தரமான மகிழ்ச்சியைக் கொடுப்பவனே. பக்தர்களின் இஷ்டதெய்வமே. ‘ஸஹஸ்ரமூர்த்தனே’ உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ரீராமசந்திரனே. எண்ணிக்கையற்ற பல ரூபங்களைக் கொண்டவனே. ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ: என்று உன்னையே புருஷ ஸூக்தம் புகழ்கிறது. பூர்ண ஞானத்தைக் கொண்டவனே.

**231. ஸ்ரீ விஷ்வாத்மனே நம:**
**ஸர்வவனு தா3னமாள்ப 'விஷ்வாத்மா' நமோ நினகெ3**
**விஶ்வ நியாமக விஶ்வவ்யாபகனு நீனே ஸ்வராட்**
**வாயுவந்தர்யாமியாகி3ருவ ஸ்வாமி ஸ்ரீபதி நீனு**
**ஈஶவாஹன நினகெ3 ஈஜக3த் ஆவாஸஸ்தா2ன**

அனைத்தையும் அருள்பவனே. 'விஶ்வாத்மனே உனக்கு என் நமஸ்காரங்கள். விஶ்வ நாமகனே. அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவனே. அனைத்து உலகங்களையும் ஆள்பவனே. வாயுவின் அந்தர்யாமியாக இருக்கும் ஸ்வாமி நீயே. லட்சுமிதேவியின் பதி. சிறந்த வாகனங்களைக் கொண்டவனே. இந்த உலகமே உனக்கு இருப்பிடம் ஆகும்.

**232. ஸ்ரீ ஸஹஸ்ராக்ஷாய நம:**
**ப3ஹு ஶத்ரு ஸேனெயன்னு க்ஷயமாடு3வவ நீனு**
**'ஸஹஸ்ராக்ஷ' நமோ ஸஹஸ்ஷீர்ஷ புருஷ ஸ்ரீஶ**
**ஸஹஸ்ர ஷப்3தி4த அஸங்க்யேய சக்ஷு ஸ்வந்த நீனு**
**மஹதா3தி3 விஶ்வஸ்த2 விஶ்வதோமுக2 விஶ்வா ஆத்மா**

அதிகமான எதிரிகளின் சேனைகளை நீ அழிக்கிறாய். 'ஸஹஸ்ராக்ஷனே' உனக்கு என் நமஸ்காரங்கள். ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ: நீயே. ஸ்ரீஶனே. ஸஹஸ்ர என்றால் எண்ணிக்கையற்ற என்று பொருள். அவ்வளவு கண்களைக் கொண்டவன் நீயே. மஹத்திலும் மஹத் நீயே. உலகத்தையே முகமாகக் கொண்டவன். உலகத்தையே ஆத்மாவாகக் கொண்டவன் நீயே.

**233. ஸ்ரீ ஸஹஸ்ரபதே நம:**
**ப3ஹு ரீதியலி ப்ரஜெக3ள பாலனெ மாடு3வ**
**'ஸஹஸ்ரபாத்' நமோ நினகெ3 புருஷ ஸர்வேஶ்வரா**
**ஸஹஸ்ரஶீர்ஷா ஸஹஸ்ராக்ஷ அஸங்க்யேய பாதா3த்ம**
**அஹமாத்மா கு3டா3கேஷ ஸர்வபூ4த மஹேஷ்வர:**

பற்பல விதங்களாக மக்களை காக்கிறாய். 'ஸஹஸ்ரபாத்' உனக்கு என் நமஸ்காரங்கள். புருஷனே. ஸர்வேஶ்வரனே. அனந்தமான தலைகளை, கண்களை, பாதங்களைக் கொண்டவனே. அஹமாத்மா குடாகேஷ ஸர்வபூத மஹேஷ்வர: - மகாபாரதம் (6-32-20).

**234. ஸ்ரீ ஆவர்த்தநாய நம:**
**ஶத்ருக3ளனு ஸோலிஸி விமுகராகி3 மாடி3ஸுவி**
**ஶத்ரு ஜய ஶீல நீனு 'ஆவர்த்தன' நமோ எம்பெ3**
**அத்ர தத்ர ஸர்வத்ர நீ வாஸிஸுவி ப்4ரமிஸுவி**
**'ப்4ராமயன் ஸர்வபூ4தானி' எந்து3 ப4க3வானுவாச**

எதிரிகளை வென்று, அவர்களை தோல்வி அடையச் செய்பவனே. 'ஆவர்த்தனனே' உனக்கு என் நமஸ்காரங்கள். இங்கு, அங்கு என அனைத்து இடங்களிலும் நீ வசிக்கிறாய். அனைத்து இடங்களிலும் நீ சஞ்சரிக்கிறாய். ப்ராமயன் ஸர்வபூதானி (கீதை 18-61). அனைவருக்குள்ளும் நான் இருக்கிறேன்.

**235. ஸ்ரீ நிவ்ருத்தாத்மனே நம:**
**எது$^3$ரு நிந்தவராத$^3$ ஶத்ருக$^3$ளு அஞ்சி ஓடு$^3$**
**வந்தெ$^3$ மாடு$^3$வ 'நிவ்ருத்தாத்ம' ஸதா$^3$ நமோ நினகெ$^3$**
**பூ$^4$த ஸர்வ ப்ரளயதி$^3$ உத$^3$ரதி$^3$ ரக்ஷிஸி**
**யுக்தகாலதி$^3$ புன: ஸ்ருஜிஸுவ ஸ்ருஷ்ட்யாதி$^3$கர்த**

எதிரில் நிற்கக்கூடிய எதிரிகள் பயந்து ஓடுமாறு செய்யும் 'நிவ்ருத்தாத்மனே' உனக்கு என் நமஸ்காரங்கள். பிரளய காலத்தில் அனைத்து ஜீவர்களையும் உதரத்தில் வைத்து காத்து, தக்க காலத்தில் மறுபடி அவர்களை படைக்கும் ஸ்ருஷ்ட்யாதி கர்தனே.

**236. ஸ்ரீ ஸம்வ்ருதாய நம:**
**ஸம்பூர்ணப$^3$லஶாலி 'ஸம்வ்ருதனெ' நமோ நினகெ$^3$**
**ஸம்பூர்ண ஞானானந்த$^3$ வீர்யாதி$^3$ கு$^3$ணக$^3$ணக$^3$ள**
**ஸ்வரூப நீனு எந்தா$^3$க$^3$ம ப்ரஸித்த ஞானிக$^3$ம்ய**
**பாபிமூட$^4$ தாமஸக$^3$ள கூட நீனு ஸம்வ்ருதனு**

முழுமையான வலிமையைக் கொண்டவனே. ஸம்வ்ருதனே - உனக்கு என் நமஸ்காரங்கள். முழுமையான ஞானானந்த வீர்ய ஆகிய குணங்களின் ஸ்வரூபன் நீ என்று ஆகமங்கள் உன்னை புகழ்கின்றன. ஞானிகளில் வசிக்கிறாய். பாவிகளை, தாமஸர்களுக்கு தக்க தண்டனைகளை கொடுப்பவனே.

**237. ஸ்ரீ ஸம்ப்ரமர்த்த$^3$னாய நம:**
**ப$^4$க்திகெ$^3$ விரோத$^4$ கு$^3$ணக$^3$ளு ஹரித்$^3$வேஷி ஹரி**
**ப$^4$க்தர த்$^3$வேஷி தை$^3$த்யர நாஶமாள்ப 'ஸம்ப்ரமர்த்த$^3$ன'**
**ஸாத$^3$ரதி$^3$ நமோ எம்பெ$^3$ ஹிரண்யகாதி$^3$ வித்$^3$வம்ஸி**
**அப$^4$க்தரிகெ$^3$ து$^3$க்க$^2$வே ஈவி நீ ப$^4$க்தேஷ்டதா$^3$த**

பக்திக்கு எதிரான குணங்களைக் கொண்டிருப்பவர்களை; ஹரித்வேஷிகளை; ஹரி பக்தர்களின் த்வேஷிகளை, தைத்யர்களை அழிக்கிறாய். ஸம்ப்ரமர்த்தனே உன்னை நான் பக்தியுடன் நமஸ்காரம் செய்கிறேன். ஹிரண்யகாதி அசுரர்களை நீ அழிக்கிறாய். அபக்தர்களுக்கு துக்கத்தினை கொடுக்கிறாய். பக்தர்களுக்கு வேண்டிய வரங்களை அளிக்கிறாய்.

**238. ஸ்ரீ அஹ:ஸம்வர்த்தகாய நம:**

**ஞானிப4ய ஹர 'அஹஸ்ஸம்வர்த்தகனே' நமோ**
**ஞானிக3ளிகெ3 ஸம்ஸாரப4ய ஶத்ருப4ய மத்து**
**மன காய தோ3ஷப4ய நிவாரணமாள்பி அஹ:**
**ஸம்வர்த்தக வந்தே3 காலப்ரவர்த்தக காலஸ்வாமி**

ஞானிகளின் பயத்தினை போக்குபவனே. அஹ:ஸம்வர்த்தகனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஞானிகளுக்கு சம்சார பயம், எதிரிகளின் பயம், மற்றும் உள்ளம், உடல் ஆகியவற்றால் செய்யப்படும் தோஷங்களின் பயம் ஆகியவற்றை நிவாரணம் செய்கிறாய். காலபிரவர்த்தகனே. கால ஸ்வாமியே.

**239. ஶ்ரீ வன்ஹயே நம:**
**ப3லநியாமக ப3லதா3தா நீனு 'வன்ஹி' நமோ**
**ப3லபூர்ண நீனு ஸர்வஜகத் விஶ்வவாஹகனு**
**எல்ல ஜக3த் விஶ்வவாஹக ஶேஷ ஆதா4ரவாயு**
**ப3லிஷ்ட2வாயு கூர்மகாதா4ர மஹாகூர்ம நீனு**

வலிமையை கொடுப்பவனே. 'வன்ஹியே' உனக்கு என் நமஸ்காரங்கள். பலபூர்ணனே. அனைத்து உலகங்களையும் வியாபித்திருப்பவனே. உலகத்தை தாங்கியிருக்கும் சேஷனை, அவரை தாங்கியிருக்கும் வாயுவை, அந்த வாயுதேவரை தாங்கியிருக்கும் மகாகூர்மன் நீயே.

**240. ஶ்ரீ அனிலாய நம:**
**ஶத்ருக3ள அவர ஸ்தா2னதி3ந்தோடி3ஸுவத3ரல்லி**
**ப்ரபஞ்ஜன வாயு தே3வனந்தெ3 நீனு 'அனிலனே'**
**ஶிரபா3கி3 நமோ எம்பெ3 ஸ்வதந்த்ர ப3லஶாலி நீ**
**தா4ரகனு ஸர்வக்கு நின்ன தா4ரகனு யாரு இல்ல**

எதிரிகளை அவர்களின் இடங்களிலிருந்து ஓட்டுவதில் வாயுதேவரைப் போல நீயும் 'அனிலனே' உனக்கு நான் தலைவணங்குகிறேன். ஸ்வதந்த்ரமான வலிமையானவன் நீயே. அனைத்தையும் தாங்குபவன். உன்னை தாங்குபவர்கள் யாரும் இல்லை.

**241. ஶ்ரீ த4ரணீத4ராய நம:**
**ஹரித3த்த பூ4மியுள்ள ப4ரத்வாஜாதி3க3ளன்ன**
**ஹருஷபடிஸுவி அன்னாதி3 ஸாது4போ4ஜ்யவித்து**
**'த4ரணீத4ர' நமோ நினகெ3 புருஷார்த்த2 தா3தா**
**மந்த3ர கோ3வர்த்த4னதா4ரியே பூ4மிஜன பாலா**

ஶ்ரீஹரி அளித்த பூமிகளை கொண்ட பரத்வாஜாதி முனிவர்களுக்கு, அன்னாதி அனைத்து ஸாத்விக போஜனங்களை அளித்து மகிழ்ச்சிப்படுத்துகிறாய். தரணிதரனே உனக்கு என் நமஸ்காரங்கள். புருஷார்த்தங்களை கொடுப்பவனே. மந்தர மற்றும்

கோவர்த்தன மலைகளை தூக்கியவனே. பூமியில் உள்ள அனைத்து மக்களையும் காப்பவனே.

**242. ஸ்ரீ ஸுப்ரஸாதா$^{3}$ய நம:**
**ஸஜ்ஜனர ஹஸ்ததா$^{4}$ரக 'ஸுப்ரஸாத$^{3}$னே' நமோ**
**ஸஜ்ஜனரு ஞானிக$^{3}$ளிகெ$^{3}$ மோக்ஷ ஹேது ப்ரஸாத$^{3}$**
**த்ரிஜதீ$^{3}$ஶனே நீனு நித்ய ஸுக$^{2}$ ஒத$^{3}$கு$^{3}$வி**
**அஜ ஶிவாதி$^{3}$க$^{3}$ளிகெ$^{3}$ த்வத் ப்ரஸாத$^{3}$தி$^{3}$ந்த$^{3}$லேவெஸ்தா$^{2}$ன**

ஸஜ்ஜனர்களின் கைகளைப் பிடித்து காப்பவனே. ஸுப்ரஸாதனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஸஜ்ஜனர்கள் மற்றும் ஞானிகளுக்கு மோட்சத்தைக் கொடுப்பவனே; மூன்று உலகங்களின் தலைவனே. நித்ய ஸுகமான மோட்சத்தை நீ கொடுக்கிறாய். பிரம்ம, ருத்ரர்களுக்கு அவரவர்களின் இடமானது உன்னுடைய பிரஸாதத்தினாலேயே கிடைத்திருக்கிறது.

**243. ஸ்ரீ ப்ரஸன்னாத்மனே நம:**
**த்$^{3}$யுப்$^{4}$யாதி$^{3}$ ஸர்வத்ர இருவ ஜீவர்க$^{3}$ளு ப$^{4}$யதி$^{3}$ம்**
**ப்ரவர்த்திஸுவந்தெ மாள்பி 'ப்ரஸன்னாத்மா' நமோ எம்பெ$^{3}$**
**நிவ்ருத்தி கர்மசரிஸுவ ப$^{4}$க்தரிகெ$^{3}$ ப்ரஸன்ன**
**ஸ்ரீத$^{4}$ர ஸ்ரீனிவாஸ நீ ஒலியெ ஸர்வேஷ்ட லாப$^{4}$**

ஸ்வர்க்கம் முதலான அனைத்து உலகங்களிலும் இருக்கும் ஜீவர்கள், பயத்துடன் (பக்தியுடன்) இருக்குமாறு செய்கிறாய். பிரஸன்னாத்மனே உனக்கு என் நமஸ்காரங்கள். நிவ்ருத்தி கர்மங்களை செய்யக்கூடிய பக்தர்களுக்கு மகிழ்கிறாய். ஸ்ரீதரனே. ஸ்ரீனிவாஸனே. நீ மகிழ்ந்தால் அதுவே அனைத்து விதமான லாபம் ஆகும்.

**244. ஸ்ரீ விஶ்வத்$^{3}$ருஷே நம:**
**ஸர்வரூபாதி$^{3}$ அஸுர நாஶகனு நீ 'விஶ்வத்$^{3}$ருக்'**
**ஸர்வதா$^{3}$ நமோ நினகெ$^{3}$ விஶ்வோத்பாத$^{3}$கனு நீனு**
**விஶ்வதா$^{4}$ரகனு நீனு விஶ்வாலயகர்த்தனு நீனு**
**விஶ்வ நிலயன ஞானாவ்ருதிப$^{3}$ந்த$^{4}$ மோக்ஷகர்த**

அனைத்து ரூபங்களாலும், அசுரர்களை அழிப்பவன் நீ. விஶ்வத்ருக் உனக்கு என் நமஸ்காரங்கள். உலகத்தை படைப்பவன் நீயே. உலகிற்கு ஆதாரகன் நீயே. உலகத்தில் இருப்பவர்களின் ஞானத்தை வளர்த்து, அவர்களை மோட்சத்திற்கு அழைத்துச் செல்பவனும் நீயே.

**245. ஸ்ரீ விஶ்வபு$^{4}$ஜே நம:**
**ஶம்ப$^{3}$ராதி$^{3}$ ப$^{3}$ஹு அஸுரபுர நாஶ மாடு$^{3}$வ**
**ஸுப$^{3}$லவான் 'விஶ்வபு$^{4}$க்' நமோ நமோ எம்பெ$^{3}$ நினகெ$^{3}$**

**‘பு4ங்க்தே விஶ்வ பு4க3வ்யய’ எந்து3 உக்தவாகி3ஹுது3**
**விஶ்வபோஷக ஞானானந்தா3 ப3ல ஓஜஸ்ஸுபூர்ண**

ஷம்பர போன்றதான பல அசுரர்களை அழிப்பவனே. மிகச் சிறந்த பலசாலியே. விஶ்வபுக். உனக்கு என் நமஸ்காரங்கள். ‘புங்க்தே விஶ்வபுகவ்யய’ என்று சரியாகவே சொல்லப்பட்டிருக்கிறது. உலகத்தை காப்பவனே. ஞான, ஆனந்த, பல, ஓஜஸ் ஆகிய குணங்களை முழுமையாகக் கொண்டவனே.

**246. ஸ்ரீ விபு4வே நம:**
**உத்க்ருஷ்ட ஶாஶ்வத ப3லாதி3 த4ர்மவான் ‘விபு4’ நமோ**
**நித்யஞானானந்த3 ப3ல ஸ்வரூபவுள்ள ப்ரத்3யும்ன**
**வாஸுதே3வ கோல நாராயணானிருத்3த4 ந்ருஸிம்ஹ**
**அதிப3ல ஸங்கர்ஷண ஶேஷஶாயி ஸாமஸ்துத்ய**

மிகச் சிறந்ததான நிரந்தரமான பலம் முதலான அனைத்து குணங்களையும் கொண்டவனே. தர்மவானே. விபுவே உனக்கு என் நமஸ்காரங்கள். நித்ய ஞானானந்த பல ஸ்வரூபம் உள்ள ப்ரத்யும்னனே, வாஸுதேவனே. நாராயணனே. அனிருத்தனே. நரசிம்மனே. மிகவும் பலசாலியே. ஸங்கர்ஷணனே. ஶேஷஶாயியே. ஸாம வேதத்தால் போற்றப்படுபவனே.

**247. ஸ்ரீ ஸத்கர்த்ரே நம:**
**ப4க்தர ஸத்கர்ம ப்ரஸித்3த4 மாடு3வவனு**
**‘ஸத்கர்தா’ நமோ நமோ ஸத்யஜக3த்கர்தா ரமேஶ**
**தை3த்ய து3ர்ஜன ஹிம்ஸகனு ஸஜ்ஜனபோஷகனு**
**ஸதா3ஶோகரஹித ஶுக்ர நீனு ஸ்ரீஶ ப்ரக்2யாத**

பக்தர்களின் ஸத் கர்மங்களை பலிக்க வைப்பவனே. ஸத்கர்தனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஸத்யமான இந்த ஜகத்தினை படைத்தவனே. ரமாதேவியின் தலைவனே. தைத்யர்களை, கெட்டவர்களை அழிப்பவனே. ஸஜ்ஜனர்களை காப்பவனே. எப்போதும் துக்கங்கள் இல்லாதவனே. பவித்ரமானவனே. நீ லட்சுமிதேவியின் தலைவன். அனைத்து உலகங்களிலும் புகழ் பெற்றவன்.

**248. ஸ்ரீ ஸத்க்ருதயே நம:**
**ப4க்தியிந்து3த்தம ஸ்தோத்ர மாள்பர ப்ரியனு நீனு**
**ப4க்தியிந்து3த்தம ஸ்தோத்ர மாள்பரல்லி இருவி**
**‘ஸத்க்ருதி’ நமோ நினகெ3 ப4க்தக்ருத பூஜெகொம்பி3**
**க்ருதிரமண ப4க்தேஷ்ட ப்ரத்3யும்ன ஸம்ஸ்துத்ய ப்ரீத**

பக்தியுடன் மிகவும் உத்தமமான ஸ்தோத்திரத்தை செய்பவர்களின் ப்ரியன் நீயே. அப்படி ஸ்தோத்திரம் செய்பவர்களில் நீ இருக்கிறாய். ஸத்க்ருதியே உனக்கு என்

நமஸ்காரங்கள். பக்தர்கள் செய்யும் பூஜையை ஏற்றுக் கொள்கிறாய். க்ருதி ரமணனே. பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றும் ப்ரத்யும்னனே. ஸ்தோத்திரங்களால் மகிழ்ச்சி அடைபவனே.

**249. ஸ்ரீ ஸாத4வே நம:**

**அஸுரரிந்த3 அபஹார மாட3ல்பட்ட கோ3க3ள**
**நீ ஸம்ரக்ஷிஸுவுத3காகி3 ஶைலா ஶீலா ஒட3தி3**
**ஹே 'ஸாது4' நமோ நினகெ3 தீ3னஜன க்ருபாகர**
**நீ ஸதா3 ப்ராணிரக்ஷக ஸ்வப்ரயோஜன ரஹித**

அசுரர்களால் கடத்தப்பட்ட பசுக்களை காப்பதற்காக நீ மிகப்பெரிய மலைகளை உடைத்தாய் (தூக்கினாய்); ஹே ஸாதுவே உனக்கு என் நமஸ்காரங்கள். உன் பக்தர்களை காப்பவனே. நீ எப்போதும் அனைத்து பிராணிகளையும் காப்பவன். எதனாலும் உனக்கு எவ்வித பிரயோஜனங்களும் இல்லை.

**250. ஸ்ரீ ஜன்ஹவே நம:**

**ஸுரர ப4க்தர ஸுஸ்வபா4விக3ள ஸஹ நீனு**
**ஸரஸ ஸக்2யாதி3க3ள மாள்ப 'ஜன்ஹு' நமோ எம்பெ3**
**உரக3 பூ4ஷண தாண்ட3வ விப்ரோத்தம ஸுதா4ம**
**ஸுக்3ரீவ மாலாகாரோத்3த4வ கோ3கோ3ப கோ3பீஸக2**

தேவர்களின், பக்தர்களின், ஸஜ்ஜனர்களின் நண்பன் நீயே. சுலபமாக அனைவருக்கும் நீ இருக்கிறாய். ஜன்ஹுவே உனக்கு என் நமஸ்காரங்கள். பாம்பினை தரித்தவனே. நர்த்தனம் ஆடுபவனே. ஸர்வக்ஞனே. வைகுண்டனே. சுக்ரீவனுக்கு மாலையை அணிவித்து, அவனை காத்தவனே. பசுக்களை மேய்த்தவனே. கோபியர்களின் தோழனே.

**251. ஸ்ரீ நாராயணாய நம:**

**நரோபயோக3க்கெ ஜலாதி3க3ளீவ 'நாராயண'**
**ஶிரபா3கி3 நமோ எம்பெ3 ஸ்ரீபூ4மஹாது3ர்கா3பதே1**
**அரது3ர க்ஷயஹீன நிர்தோ3ஷ ஞானாதி3பூர்ண**
**நரோத்பாத3க நரவந்த்3ய ஜலஶாயி லக்ஷ்மீஶ**

ஜீவர்களின் பயன்பாட்டிற்காக தண்ணீர் ஆகியவற்றை கொடுக்கும் நாராயணனே. உனக்கு தலை வணங்கி நமஸ்காரங்களை செலுத்துகிறேன். ஸ்ரீ, பூ, துர்காவின் பதியானவனே. தோஷ தூரனே. குறைகள் அற்றவனே. ஞானாதி பூர்ண குணங்களைக் கொண்டவனே. அனைவரையும் மேம்படுத்துபவனே. அனைவரையும் வெல்பவனே. தண்ணீரில் படுத்திருப்பவனே. லட்சுமிதேவியின் தலைவனே.

**252. ஸ்ரீ நராய நம:**

**பூ4மிகெ3 ஜலக3ள ஒத3கி3ஸுவ 'நர' நமோ**
**ஆமயதூ3ரனு அவிகார ஆனந்த3ரூப**
**ரமா மத்து பி3ரம்ம ஶிவேந்த்3ராத்3யமர ப4க்தவந்த்3ய**
**ஸ்வாமியு அப்ராக்ருதனு ஶேஷவாயுவந்தர்யாமி**

பூமிக்கு தண்ணீரை கொடுப்பவனே. நரனே உனக்கு என் நமஸ்காரங்கள். தோஷங்கள் அற்றவனே. விகாரம் அற்றவனே. ஆனந்தமயனே. ரமா, பிரம்மா, ருத்ர, தேவர்கள் மற்றும் பக்தர்களால் வணங்கப்படுபவனே. ஸ்வாமியே. அப்ராக்ருதனே. ஶேஷ, வாயுகளின் அந்தர்யாமியாக இருப்பவனே.

**253. ஶ்ரீ அஸங்க்யேயாய நம:**
**ப4க்தரிகெ3 அனந்த ஸுக2தா3தா 'அஸங்க்யேயனே'**
**ஆத3ரதி3 நமோ எம்பெ3 அக3ணித கு3ணபூர்ண**
**உத்தம ஸுபூர்ண ஞானானந்த3 ப3லாதி3க3ளு**
**உத்தம ஸுபூர்ண ஸுக2லீலா க்ரியா அஸங்க்யேய**

பக்தர்களுக்கு நிரந்தர சுகமான முக்தியை கொடுப்பவனே. எண்ணிக்கையற்ற ரூபங்களைக் கொண்டவனே. உனக்கு பக்தியுடன் நான் வணங்குகிறேன். எண்ணிக்கையற்ற குணங்களை பூர்ணமாக கொண்டவனே. உத்தமமான ஞானானந்த வலிமைகளை முழுமையாக கொண்டவனே. அனைத்தையும் உன் லீலைகளால் செய்பவனே.

**254. ஶ்ரீ அப்ரமேயாத்மனே நம:**
**ரிபுக3ள கையிந்த3 ஸோது ஹோக3த3 புத்ரதா3த**
**'அப்ரமேயாத்மா' நமோ அபரிமித பரிமாண**
**அபரிமித வ்யாபகனு தே3ஶகாலகு3ண**
**அபரிச்சின்ன தன்னிச்சா இல்லதெ3 காணிஸிகொள்ள**

எதிரிகளால் தோற்கடிக்கப்பட முடியாதவனே. செல்வங்களை கொடுப்பவனே. அப்ரமேயாத்மனே உனக்கு என் நமஸ்காரங்கள். அபாரமான குணங்களைக் கொண்டவனே. அபாரமான வ்யாபகனே. தேஶ கால, குணங்களால் கட்டுப்படாதவனே. உன் இச்சை இல்லாமல் காட்டிக் கொள்ளாதவனே.

**255. ஶ்ரீ விஶிஷ்டாய நம:**
**விஶேஷ ஸ்துத்யனாகி3ஹ 'விஶிஷ்ட' நமோ நினகெ3**
**பி3ஸஜ ஸம்ப4வ ஆதி3கவி ஸ்தோத்ர மாடி3த3னு**
**ஈஶான ஷக்ர ஸ்வாயம்பு4வ ப்ரஹ்லாத3 த்4ருவாதி3க3ள்**
**ப்ரசேதஸரு அமர நர கூடதி3ம் ஸ்துத்ய ஶ்ரீஶ**

விஶேஷமாக வணங்கப்படக் கூடியவனே. விஶிஷ்டனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஆதிகவியான பிரம்ம தேவன் உன்னை ஸ்தோத்திரம் செய்தான். ருத்ரர், இந்திரன், ஸ்வாயம்புவ, பிரகலதன், த்ருவ, தேவர்கள், ஜீவர்கள் என அனைவராலும் வணங்கப்படுபவனே. லட்சுமிதேவியின் தலைவனே.

**256. ஸ்ரீ ஶிஷ்டக்ருதே நம:**

**ஶத்ரு ஶாஸன மாள்ப 'ஶிஷ்டக்ருத்' நமோ நினகெ3**
**ப4க்தரு மாடி3த3 ஸத்கர்மஶிஷ்டவ பூர்ணமாள்பி**
**ப4க்தப3லிராஜ யக்ஞபூர்த்தி மாடி3ஸித3 வடோ1**
**அந்து3 த3க்ஷக்ருத யக்ஞ ஶிஷ்ட பூர்ண மாடி3ஸிதி3**

எதிரிகளை அழிப்பவனே. ஶிஷ்யர்களை காப்பவனே. உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்கள் செய்யும் கர்மங்களின் பலன்களைக் கொடுப்பவனே. பக்தனான பலி சக்ரவர்த்தியின் யக்ஞத்தை பூர்த்தி செய்த வடு வாமனனே. அன்று தக்ஷன் செய்த யாகத்தையும் நீ பூர்ணம் ஆக்கினாய்.

**257. ஸ்ரீ ஶுசயே நம:**

**நிர்து3ஷ்டக்3ஞான ப4க்தியுக் ஸ்தோத்ரத3 விஷய 'ஶுசி'**
**ஆத3ரதி3 நமோ எம்பெ3 கமலஜ ஸம்ஸ்துதனெ**
**வேத3த்3ருஷ்டா ஆதி3மனு ப்ரஹ்லாத3 த்3ருவாதி3க3ளு**
**ருத்3ரப்ரசேதஸக3ள போ4தி4ஸித்3த3 த்வத்பர ஸ்தோத்ர**

யதார்த்த ஞான, பக்தி, ஸ்தோத்திரங்களின் விஷயனே. ஶுசியே உனக்கு பக்தியுடன் நமஸ்காரங்களை செய்கிறேன். பிரம்மனால் வணங்கப்படுபவனே. வேதங்களால் அறியப்படுபவனே. ஆதி மனுவான ஸ்வாயம்புவ, பிரகலாத, த்ருவ, தேவர்கள் ஆகியோர் உன்னை புகழ்ந்தனர்.

**258. ஸ்ரீ ஸித்3தா4ர்த்தா2ய நம:**

**அனாதி3ஸித்3தி3 நித்யவேத3வாக்யக3ள் ஹேளுவந்தெ**
**ஹிந்தி3ன முந்தி3ன இந்தி3ன கால ப்ராணிக3ளிகெ3**
**அனன்யாதீ4ன ஸ்வாமியாகி3ஹ 'ஸித்3தா4ர்த்த2னெ' நமோ**
**பூர்ண ஆப்தகாம நீனு ப4க்தேஷ்டஸித்3தி4 ப்ரதா3தா**

அனாதியான நித்யமான வேத வக்கியங்கள் சொல்வதைப் போல, முக்காலங்களிலும் இருக்கும் ஜீவர்களுக்கு, அன்னம் ஆகியவற்றைக் கொடுக்கும் ஸ்வாமியாக இருப்பவனே. ஸித்தார்த்தனே. உனக்கு என் நமஸ்காரங்கள். நெருங்கிய நண்பன் நீயே. பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றுபவன் நீயே.

**259. ஸ்ரீ ஸித்3த4ஸங்கல்பாய நம:**

**த்ரிகாலஸித்3த4 ஸக்ஞானி பு3த்3தி4 கௌஶல்யதி3ந்த3லி**

**ஏகசித்த ஸுவிசார நிஶ்சித ‘ஸித்3தி4 ஸங்கல்ப’**
**ஸ்ரீகரனே நமோ நின்னலி கொடு3 நிஶ்சித பு3த்3தி4**
**ஸ்ரீகஞ்சஜாதி3னுத ஸத்யகாம ஸத்ய ஸங்கல்ப**

கடந்த, நிகழ், இறந்த என மூன்று காலங்களிலும் இருப்பவனே. ஸர்வக்ஞனே. ஞானம், வலிமை ஆகியவற்றில் சிறந்தவனே. நல்லறிவைக் கொடுப்பவனே. யதார்த்த ஞானத்தை கொடுப்பவனே. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. உன்னை வணங்குகிறேன். உன்னில் எனக்கு நிச்சய ஞானத்தைக் கொடுப்பாயாக. லட்சுமிதேவி மற்றும் பிரம்மதேவர் ஆகியோரால் வணங்கப்படுபவனே. விரும்பியவற்றை செய்பவனே. நிச்சயித்தபடியே அனைத்தையும் செய்பவனே.

**260. ஸ்ரீ ஸித்3தி4தா3ய நம:**
**ஸக்ஞானிப4க்தரு ரிஷிக3ளு ஸ்தோத்ரமாள்புத3லி**
**‘அஞ்சஸா அஹம்பூர்வ அஹம்பூர்வம்ரூப யுத்3த4வ’**
**கஞ்ஜ நயனனெ நீனு மாடி3ஸுவி ‘ஸித்3தி4த3னே’**
**அஞ்ஜலீப3த்3த4னாகி3 நமோ எம்பெ3 ஸித்3தி4ப்ரதா3த**

ஞானி பக்தர்கள், ரிஷிகள் ஆகியோர் உன்னை வணங்கினால், தாமரைக் கண்ணனே நீயே அவர்களுக்கு அருள்கிறாய். இரு கரம் குவித்து உன்னை வணங்குகிறேன். விருப்பங்களை நிறைவேற்றுபவனே.

**261. ஸ்ரீ ஸித்3தி4ஸாத4னாய நம:**
**ஞானவந்த ப4க்த மாடு3வ ஸ்தோத்ர ரூப ஸாத4ன**
**வன்னு ஒப்பி ப4க்த ஸாத3னக்கெ தக்க ப2லவன்ன**
**நீனு கொடு3வியோ ‘ஸித்3தி4 ஸாத4ன’ நமோ நினகெ3**
**ஞானிக3ம்ய வாஸுதே3வ மோக்ஷவெம்ப3 ப2லதா3த**

ஞானத்துடன் பக்தர்கள் செய்யும் ஸ்தோத்திர ரூபமான ஸாதனைகளை ஏற்றுக் கொண்டு, அதற்கு தக்க பலன்களை நீ கொடுக்கிறாயே. உன்னை நான் வணங்குகிறேன். ஞானிகளால் அறியப்படுபவனே. வாசுதேவனே. மோட்சத்தை கொடுப்பவனே.

**262. ஸ்ரீ வ்ருஷாஹிணே நம:**
**வேதோ3க்த ஸ்தோத்ரக3ணதி3ம் ஸம்ருத்த நித்ய ஆனந்த3**
**உத்3ரேக நிதய் ப்ரவ்ருத்த ‘வ்ருஷாஹி’ நமோ நினகெ3**
**வேத3த4ர்ம பரிபால த4ர்மப்ரவர்த்தக ஸ்வாமி**
**ஸதா3ஸுமங்க3ள நின்ன த3ர்ஷானந்த3 ஏனெம்பெ3**

வேத மந்திரங்களால் அறியப்படுபவனே. நித்யானந்தனே. வ்ருஷாஹிணே உனக்கு என் நமஸ்காரங்கள். வேதங்களை, தர்மங்களை காப்பவனே. தர்மங்களை

நியமித்தவனே. ஸ்வாமியே. எப்போதும் மங்களகரமாக இருப்பதான உன்னை தரிசனம் செய்யும் ஆனந்தத்தை நான் என்னவென்று சொல்வேன்?.

**263. ஸ்ரீ வ்ருஷபா4ய நம:**
**ஸோமரஸ ப4ரண காரண 'வ்ருஷப4னே' நமோ**
**த4ர்மமய நின்ன ஆராதி4ஸுவ ப4க்தருக3ள**
**ஆமய ஸம்ஶய ஞான களெது3 ஹ்ருத3யாப்3ஜதி3**
**ஸோம ரவி தட்டித்தாரா அந்த3தி3 ப்ரகாஶிஸுவி**

அமிர்தம் வெளி வருவதற்கு காரணம் ஆனவனே. வ்ருஷபனே உனக்கு என் நமஸ்காரங்கள். தர்மமயனே. உன்னை ஆராதிக்கும் பக்தர்களின் மன நோய்களை, சந்தேகங்களை களைந்து, அவர்களின் இதயங்களில், சந்திரன், சூரியன், நட்சத்திரங்களைப் போல ஒளிர்கிறாய்.

**264. ஸ்ரீ விஷ்ணவே நம:**
**ஸுஶ்ரேஷ்ட ப3லசேஷ்டாதி3கு3 புருஷார்த்த2க3ள்கு3 நீ**
**காரணனு 'விஷ்ணு' நமோ ஸ்ரீபதியே வாய்வந்தஸ்த2**
**உருப3ல சேஷ்டகத்வாதி3 ஸுபூர்ணரூப நீனு**
**ஸுர நராதி3க3ளிகெ3 ப3லாதி3ப்ரத3 தீ4ஜனக**

மிகச் சிறந்ததான அனைத்து செயல்களுக்கும், புருஷார்த்தங்கள் கிடைப்பதற்கும் நீயே காரணன் ஆகிறாய். விஷ்ணுவே உனக்கு நமஸ்காரங்கள். ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. வாயுதேவரின் அந்தர்யாமியானவனே. அபாரமான செயல்களை செய்பவனே. பூர்ண ரூபனே. ஸுர, நரர்களுக்கு வலிமை முதலான அனைத்தையும் அருள்பவனே. ஞானத்தை அருள்பவனே.

**265. ஸ்ரீ வ்ருஷபர்வணே நம:**
**ஶ்ரேஷ்ட ஸ்தோத்ர ரூப ஸாத4னக3ளன்ன பூரெயிஸுவ**
**ஶ்ரேஷ்ட த4னப2லாதி3க3ளிந்த3 'வ்ருஷபர்வா' நமோ**
**ப்3ரஷ்டதனவில்லதா3சாரவந்த க்ருதபுண்ய**
**ஶ்ரேஷ்டஸாத4ன ப2லவன்னீவ கருணாகரனு**

சிறந்ததான ஸ்தோத்ர ரூப ஸாதனைகளை, சிறந்த தனம், வலிமை ஆகியவற்றை அருளி நிறைவேற்றுபவனே. வ்ருஷபர்வனே உனக்கு என் நமஸ்காரங்கள். குறைவில்லாத புண்ணியங்களை, சிறந்த ஸாதனைகளுக்கான பலன்களை அருள்பவனே. கருணைக்கடலே.

**266. ஸ்ரீ வ்ருஷோத3ராய நம:**
**ஶ்ரேஷ்டாஸ்மதீ3யரிந்த3 ஶ்ரேஷ்ட பரகீயரக3ள**
**இஷ்ட பரஸ்பரதி3 ஸங்க3ம மாடி3ஸுவந்த2**

**'வ்ருஷோத3ர' நமோ புண்யோத3ர ப்ரிய க3ங்கா3பித**
**புஷ்பப4வ பூஜித த்ரிவிக்ரம ஜயஜயது**

சிறந்த அறிஞர்களை சிறந்த கற்றறிந்தவர்களுடன் ஒருவருக்கொருவர் ஸங்கத்தை செய்பவனான 'வ்ருஷோதரனே' உனக்கு என் நமஸ்காரங்கள். கங்கையின் பிதனே. புஷ்பங்களால் பூஜிக்கப்படுபவனே. த்ரிவிக்ரமனே. உனக்கு மங்களம் உண்டாகட்டும்.

**267. ஸ்ரீ வர்த்3த4னாய நம:**
**ப4க்தஸஜ்ஜன ஸுக2தா3த ஶத்ருஸுக2 நாஶக**
**'வர்த்3த4ன' நமோ எம்பெ3 நினகெ3 வர்த்த4யதி ஸ்வீயான்**
**ஸ்ரீவ நீ ப4க்தரிகெ3 த4னதா4ன்யாதி3க3ளன்னீவி**
**தத்3மத3 தூ3ரமாடி3 ஹெச்சிஸுவி ஞானத4னவ**

பக்தர்களுக்கு, ஸஜ்ஜனர்களுக்கு சுகத்தை அருள்பவனே. எதிரிகளின் சுகத்தினை அழிப்பவனே. வர்த்தனனே உனக்கு என் நமஸ்காரங்கள். நீ உன் பக்தர்களுக்கு தன, தான்யாதிகளை கொடுத்து அருள்கிறாய். அவர்களின் கர்வத்தினை விலக்கி, ஞானத்தினை அதிகரிக்கிறாய்.

**268. ஸ்ரீ வர்த்த4மானாய நம:**
**ஸ்தோத்ர தன்னல்லி யோஜனமாள்ப 'வர்த்த4மான' நமோ**
**நித்யப்ரவ்ருத்தனு ஸம்பூர்ண கு3ணக3ணார்ணவனு**
**நித்யஸம்ருத்3த4 மஹா ஐஷ்வர்யபூர்ண ஸர்வேஶனு**
**'நித்யோ நித்யானாம் சேதன சேதனானாம்' எந்து3 ஸ்ருதி**

தனக்கு ஸ்தோத்திரம் செய்பவர்களை அருள்பவனே. வர்த்தமானனே உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்து காலங்களிலும் இருப்பவனே. முழுமையாக குணங்கள் அனைத்தையும் கொண்டவனே. எப்போதும் திருப்தி உள்ளவனே. மஹா ஐஶ்வர்ய பூர்ணனே. ஸர்வேஶனே.

**269. ஸ்ரீ விவிக்தாய நம:**
**பாபாதி3 தோ3ஷ வியோக3வுள்ளவனு 'விவிக்தனெ'**
**ஸ்ரீப நமோ ஸர்வதோ3ஷக3ந்தா4தி3தூ3ரனு ஷு3த்3த4**
**அபஹதபாப்மனு அபிபாஸ ஆனந்த3மய**
**ஸுபவித்ர கேவல ஏகாந்தப4க்த பரமேஷ்ட**

பாவம் முதலான தோஷங்கள் அற்றவனே. விவிக்தனே உனக்கு என் நமஸ்காரங்கள். லட்சுமிதேவியின் தலைவனே. எவ்வித தோஷங்களும் இல்லாதவனே. குற்றம், குறைகள் இல்லாதவனே. ஆனந்தமயனே. பவித்ரமானவனே. ஏகாந்த பக்தர்களுக்கு அருள்பவனே.

**270. ஸ்ரீ ஶ்ருதிஸாக3ராய நம:**

**ஸ்தோத்ரக3ளிந்த3 ஸதா3 ஸம்பூர்ண ஸாக3ரவத் நீனு**
**'ஶ்ருதிஸாக3ரனே' நமோ 'நாராயணபராவேதா3:**
**வேதே3 ராமாயணேசைவ புராணே பா4ரதேததா2**
**ஆதா3வந்தேச மத்4யேச விஷ்ணு: ஸர்வத்ர கீ3யதே'**

ஸ்தோத்ரங்களால் வணங்கத்தக்கவனே. முழுமையாக ஸாகரம் போன்றவனே. ஶ்ருதிஸாகரனே உனக்கு என் நமஸ்காரங்கள். வேதங்கள், ராமாயணத்தில், புராணங்களில், பாரதத்தில் என அனைத்திலும் – துவக்கத்தில், நடுவில், முடிவில் என விஷ்ணு அனைத்து இடங்களிலும் இருக்கிறான் என்று ஸ்ருதியால் புகழப்படுபவனே.

**271. ஶ்ரீ ஸுபு4ஜாய நம:**
**ப்ரக்ருதேபர: நீனு அப்ராக்ருதவாகி3ருவ**
**அகளங்க ஸம்பூர்ணானந்த3 விஶேஷானுப4வி**
**ஸுக2பு4க் 'ஸுபு4ஜ' நமோ ஸுப4க்த ஸாது4ஜனகெ**
**ஸுகா2னுப4வவீவி ஸுபு4ஜ ஸர்வதா4ரகனு**

அனைத்து இடங்களிலும் வியாபித்திருப்பவன் நீயே. அப்ராக்ருதமான தேகத்தை கொண்டவனே. களங்கங்கள் அற்றவனே. முழுமையான ஆனந்தமயனே. ஸஜ்ஜனர்களுக்கு விஶேஷமான அனுபவங்களை (முக்தியை) கொடுப்பவனே. அனைத்தையும் தன் தேகத்தில் தரித்திருப்பவனே.

**272. ஶ்ரீ து3ர்த4ராய நம:**
**ஶத்ருக3ளிந்த4ரிஸல்கெ அஷக்ய 'து3ர்த4ர' நமோ**
**உரத3லப்பிகொண்ட3 பூதனி த4ரிஸலாக3தெ3**
**ஹீரி நீ அவளன்ன கௌகெ3 பீ3ளிஸிதி3 ஹாகே3**
**பி3ருகா3ளி அஸுர நின்ன ப3லதாளதெ3 பி3த்3த3**

எதிரிகளால் வெல்லப்பட முடியாதவனே. 'துர்தரனே' உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னை கட்டிக் கொண்ட பூதனி, உன்னை விலக்க முடியாதவாறு செய்து, அவளை கீழே தள்ளினாயே. அப்படியே சூறாவளியாக வந்த அசுரன், உன்னுடைய வலிமையை தாங்க முடியாமல் கீழே விழுந்தான்.

**273. ஶ்ரீ வாக்3மினே நம:**
**வேதா3தி3ரூப வாக்3விஶ்ரேஷ்ட 'வாக்3மீ' நமோ நினகெ3**
**மது4ரதர க3ம்பீ4ரபா4ஷி நீனெந்து3 ப்ரக்2யாத**
**ஶ்ரீத3 நின்னய வேத3 உச்சாரணவே கா3யனவு**
**சேதனா சேதன ஸம்ரக்ஷணெ த்ராண நீ கா3யத்ரி**

வேதங்களால் போற்றப்படுபவனே. சிறந்த வாக்வலிமையை கொண்டவனே. வாக்மினே உனக்கு என் நமஸ்காரங்கள். இனிமையாக, கம்பீரமான பேசுபவன் என்று நீ புகழ் பெற்றிருக்கிறாய். ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. வேத உச்சாரணை என்பது உன்னுடைய புகழை பாடுவதே ஆகும். சேதன அசேதன என அனைவரையும் காப்பவனே. அனைவருக்கும் நீயே இருப்பிடமாக இருக்கிறாய். காயத்ரி மந்த்ர ப்ரதிபாத்யனே.

**274. ஸ்ரீ மஹேந்த்3ராய நம:**

**ப3ஹுவ்யாப்திவுள்ளவனு பூ4மிய கொடு3வவனு**
**'மஹேந்த்3ரனே' ஸர்வதா3 நமோ எம்பெ3 நினகெ3 ஸ்ரீஶ**
**மஹேஶ்வர்யவந்த மஹோஜ்வல ஸ்வகாந்திமந்த**
**மஹீதா3ன கொட்ட பரஶுராம பூ4வராஹ**

அனைத்து இடங்களிலும் வ்யாப்தி உள்ளவன். அனைவருக்கும் அருள்பவனே. மஹேந்த்ரனே உனக்கு என்னுடைய நமஸ்காரங்கள். ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. மிகப்பெரிய ஐஶ்வர்யங்களைக் கொண்டவனே. மிகச் சிறந்த ஒளி பொருந்தியவனே. தானாகவே ஒளி கொண்டவனே. பரஶுராமனே. பூவராகனே.

**275. ஸ்ரீ வஸுதா3ய நம:**

**த4னவன்ன கொடு3வவ 'வஸுத3னே' நமோ எம்பெ3**
**த4னமணி மொத3லாத3வ ஸுரப யக்ஷபக3ள**
**இன்னு ஸுதா4மாதி3 ப4க்தரிகெ3 பாலிஸிதி3**
**நின்னன்ன கு3ருத்3வார ப4ஜிபர்க்கெ3 த4ன ஸம்ருத்3தி3**

செல்வங்களைக் கொடுப்பவனே. வஸுதனே உனக்கு என் நமஸ்காரங்கள். தேவர்களுக்கும், அஸுரர்களுக்கும், மேலும் ஸுதாமா முதலான பக்தர்களுக்கு செல்வம் ஆகியவற்றை (அவரவர்களின் யோக்யதைக்கேற்ப) கொடுத்து அவர்களை அருளினாய். ஒரு தக்க குருவின் மூலம் உன்னை வணங்குபவர்களுக்கு அபாரமான செல்வம் (ஞானம்) கிடைக்கிறது.

**276. ஸ்ரீ வஸவே நம:**

**த்3ரவ்யக்கெ ஸ்வாமி நீனு 'வஸு' நமோ நமோ நினகெ3**
**ஸர்வவ்யாபி 'வாஸிதந்தெ ஜக3த்ரயம் வாஸுதே3வ'**
**ஜீவாச்சாத3ன பரமாச்சாத3ன கர்தனாகி3ஹி**
**த்3ரவ்ய ஸர்வதொ3ளிருவி ஏக ஏவ பரமாத்ம**

த்ரவ்யங்களைக் கொடுப்பதில் நீயே 'வஸு' வாக இருக்கிறாய். உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்து இடங்களிலும் வ்யாப்தனாக இருக்கிறாய். மூன்று உலகங்களிலும் இருப்பதால் உனக்கு வாஸுதேவ என்று பெயர். ஜீவாச்சாதன,

பரமாச்சாதன என்னும் இரு உறைகளை விலக்குபவனாக நீ அனைவரிலும் இருக்கிறாய். நீ ஒருவனே பரமாத்மன். ஸர்வோத்தமன்.

**277. ஸ்ரீ நைகரூபாய நம:**
**ப$^3$ஹூ அஶ்வக$^3$ள மேலெ கொடு$^3$வந்த$^2$ 'நைகரூப'**
**அஹர்நிஶி நமோ எம்பெ$^3$ அஶ்வோத்பாத$^3$க அஶ்வேஷ**
**பி$^3$ரம்ம ஶிவ வந்தி$^3$த அனந்தரூப ஶ்ருதிக்ஞேய**
**ப$^3$ஹூத$^3$ஶ ஸஹஸ்ரானந்த விஶ்வரூப ஏகாத்மா**

பற்பல குதிரைகளை (செல்வங்களை) அருள்பவனான 'நைகரூபனே' உனக்கு இரவும் பகலுமாக நமஸ்காரம் செய்கிறேன். செல்வங்களை உருவாக்குபவனே. செல்வங்களின் நாயகனே. பிரம்ம ருத்ரர்களால் வணங்கப்படுபவனே. அனந்த ரூபம் கொண்டவனே. ஶ்ருதிகளால் வணங்கப்படுபவனே. பத்து, ஆயிரம், விஶ்வரூப என பற்பல விதமான ரூபங்களைக் கொண்டவனே. ஏகாத்மனே.

**278. ஸ்ரீ ப்$^3$ருஹத்$^3$ரூபாய நம:**
**கு$^3$ணவுள்ள ஸோமரஸ ப்ராபகனு 'ப்$^3$ருஹத்ரூப'**
**ஆ நமோ சராசர ஸமஸ்தவாத$^3$ பூ$^4$ க$^3$க$^3$ன**
**கு$^3$ணதே$^3$ஶ காலவஸ்து வ்யாப்தனு பரிச்சேத$^3$**
**நினகி$^3$ல்ல நீ அணோரணீயான் மஹிதொமஹீயான்**

ஸோமரஸத்தினை வரவழைத்தவனே 'ப்ருஹத்ரூபனே' உனக்கு என் நமஸ்காரங்கள். சராசரமான அனைத்து ஜீவர்களிலும் - பூமியில், வானில் இருக்கும் அனைத்து ஜீவர்களிலும் - குண, தேஶ காலங்களால் அவற்றில் நிறைந்திருப்பவனே. உனக்கு எவ்வித மாற்றங்களும் இல்லை. நீ அணுவை விட சிறியவனாகவும், பெரியதைவிட பெரியதாகவும் இருக்கிறாய்.

**279. ஸ்ரீ ஶிபிவிஷ்டா$^2$ய நம:**
**ஶிபிவிஷ்ட$^2$ நீ ஹவிஸ்ஸலி ப்ரவேஶ மாள்பி நமோ**
**ஶிபி எம்ப$^3$ காஷ்ட$^2$ஸ்த$^2$ அக்$^3$ன்யந்தர்யாமி 'ஶிபிவிஷ்ட$^2$'**
**ஶிபி எம்ப பஷு ஆவிஷ்ட$^2$ அந்தராத்ம ஶிபிவிஷ்ட$^2$**
**ஶிபிவிஷ்ட$^2$ ஸர்வஸ்த$^2$ பஶ்வாதி$^3$ யக்ஞவஸ்த்வந்தஸ்த$^2$**

ஶிபிவிஷ்டனே நீ - யாகங்களிலும் போடும் ஹவிஸ்ஸில் பிரவேசம் செய்கிறாய். உனக்கு என் நமஸ்காரங்கள். ஶிபி என்னும் காஷ்டத்தில் இருக்கும் அக்னியின் அந்தர்யாமியாக இருக்கிறாய். ஶிபி என்று பசுக்களில் இருக்கிறாய். அந்தராத்மத்திலும் இருக்கிறாய். பசுக்களில், யக்ஞங்களில் நீயே இருக்கிறாய்.

**280. ஸ்ரீ ப்ரகாஶனாய நம:**
**யக்ஞகர்த்ரு கொடு$^3$வ த$^3$க்ஷிணெய ப்ரகாஶமாள்ப**

**'ப்ரகாஶனே' நமோ ஸூர்ய ஸோமாதி3க3ள பா4ஸகனே**
**ப்ரகர்ஷேண ஸுக2 அனுப4வ மாள்பானந்த3மய**
**ப4க்தர ஹ்ருத் பத்3மதி3ம் ஜ்வலிஸுவ ஆகாஶ நாம**

யக்ஞுங்களை செய்பவர் கொடுக்கும் தக்ஷிணையினை ஒளிர்விப்பவனே 'ப்ரகாஶனே' உனக்கு என் நமஸ்காரங்கள். சூர்ய சந்திரர்களை ஒளிர்விப்பவனே. உன்னை வணங்கும் பக்தர்களின் மனதில் இருந்துகொண்டு ஆனந்தத்தைக் கொடுத்து ஒளிர்விப்பவனே. ஆகாஶநாமகனே.

**281. ஸ்ரீ ஓஜஸ்தேஜோத்3யுதி1 த4ராய நம:**
**ஓஜஸ்தேஜஸ்ஸு ப்ரகாஶகத்வ த4ர்மவுள்ளவ**
**'ஓஜஸ்தேஜோத்3யுதி த4ரனே' நமோ எம்பெ3 நினகெ3**
**ஓஜஸ் ஸாமர்த்4யப3ல தேஜஸ்காந்தி யஶஸ்த்3ருதி**
**ஔஜ்வல்ய இவுக3ளு ஸதா3 த4ரிஸிருவி நீனு**

அபாரமான தேஜஸ் மற்றும் ஒளியினைக் கொடுக்கும் தர்மத்தை கொண்டிருக்கும் 'ஓஜஸ்தேஜோத்யுதிதரனே' உனக்கு என் நமஸ்காரங்கள். அபாரமான சாமர்த்திய பலம், ஒளி, புகழ் இவை அனைத்தையும் எப்போதும் தரித்திருப்பவன் நீயே.

**282. ஸ்ரீ ப்ரகாஶாத்மனே நம:**
**ப்ரகாஶமானவாகி3ருவ த4னத்3ரவ்யாதி3க3ள**
**நீ கொடு3வி 'ப்ரகாஶாத்மா' நமோ ஸ்ரீஶ ஸ்ரீனிவாஸ**
**ப்ரகாஶ ஸ்வரூபத்வதி3ந்த3 ஜக3த: ப்ரபு4 நீனு**
**ப்ரகாஶாத்மா எந்தெ3னிஸுவி சிதா3னந்த3மயனு**

ஒளிமயமான / அபாரமான செல்வங்களை நீ கொடுக்கிறாய். ப்ரகாஶாத்மனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ரீனிவாஸனே. ஒளிமயமாக இருந்து, இந்த உலக நாயகனாக நீ இருக்கிறாய். ப்ரகாஶாத்மன் என்று அழைக்கப்படுகிராய். சிதானந்தமயனே.

**283. ஸ்ரீ ப்ரதாபனாய நம:**
**ஶத்ரு தாபன 'ப்ரதாபனனே' நமோ எம்பெ3**
**ஶத்ருக3ள் நரளுவரு நீ கொடு3வ தாபதி3ந்த3**
**ஸூர்யாதி3க3ளொளு ப்ரகர்ஷேண இருத கொடு3வி**
**பரந்தப நீ தாபவன்னு ஹே ப்ரதாபன மஹோஜ**

எதிரிகளை அழிக்கவல்ல 'ப்ரதாபனே' உனக்கு என் நமஸ்காரங்கள். நீ கொடுக்கும் தாபத்தினால், எதிரிகள் துன்பப்படுகிறார்கள். சூரியர்களில் நீயே இருந்து ஒளி கொடுக்கிறாய். எதிரிகளை அழிப்பவனே, அனைவருக்கும் தந்தையே.

**284. ஸ்ரீ ருத்3தா4ய நம:**

**அன்ய விஷயக$^{3}$ளல்லி க$^{3}$மனமாள்ப இந்த்$^{3}$ரன்ன**
**தன்ன ஸன்முக$^{2}$வாகு$^{3}$வ ப$^{3}$கெ$^{3}$யல்லி ஸ்தோத்ரக$^{3}$ள**
**அவனிந்த$^{3}$ மாடி$^{3}$ஸுவ 'ருத்$^{3}$த$^{4}$' நமோ நமோ எம்பெ$^{3}$**
**ஞான ப$^{4}$க்த்யாதி$^{3}$க$^{3}$ள அபி$^{4}$வ்ருத்$^{3}$தி$^{3}$ மாடு$^{3}$வி ருத்$^{3}$த$^{4}$**

பிற விஷயங்களில் மனதினை செலுத்திய இந்திரனை, உன் பக்கமாக திருப்பி, ஸ்தோத்திரங்களை செய்ய வைத்தவனான 'ருத்தனே' உனக்கு என் நமஸ்காரங்கள். ஞான பக்தியாதிகளை நீ வளர்க்கிறாய்.

**285. ஸ்ரீ ஸ்பஷ்டக்ஷராய நம:**
**ஸ்தோத்ரக$^{3}$ளிந்த$^{3}$ திளிவ ஜராதி$^{3}$ நாஶ ஹீனனு**
**ஸ்ரீத$^{3}$னு ஸ்பஷ்டாஜனரனு 'ஸ்பஷ்டாக்ஷர' நமோ எம்பெ$^{3}$**
**வேதா$^{3}$ர்த்த$^{2}$ திளிஸி ஆரோக்$^{3}$ய ஆயுஷ்ய ப$^{3}$ல ஞான**
**இத்தென்ன காயோ வேத$^{3}$வ்யாஸ ஸ்ரீகிருஷ்ண ஹயக்$^{3}$ரீவ**

ஸ்தோத்திரங்களால் நீ அறியப்படுகிறாய். பிறப்பு, இறப்பு முதலான எவ்வித அழிவும் இல்லாதவன் நீ. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவன். 'ஸ்பஷ்டாக்ஷரனே' உனக்கு என் நமஸ்காரங்கள். வேதார்த்தத்தினை தெரியவைத்து, ஆயுள், ஆரோக்ய, வலிமை, ஞானம் ஆகியவற்றைக் கொடுத்து என்னை காப்பாயாக. வேதவ்யாஸனே. ஸ்ரீகிருஷ்ணனே. ஹயக்ரீவனே.

**286. ஸ்ரீ மந்த்ராய நம:**
**உக்த மொத$^{3}$லாத$^{3}$ ஸ்தோத்ரக$^{3}$ளன்ன நின்னய ஸந்தோ**
**ஷார்த்த$^{2}$மாடி$^{3}$ஸி ஸ்வீகரிஸுவி 'மந்த்ர' நமோ பி$^{3}$ரம்ம**
**ஸ்ரீத$^{3}$ நின்ன ஸம்ஸ்மரிப ப$^{4}$க்தர ஸம்ரக்ஷிஸுவி**
**விபத்ஸர்வவ களெவி வேத$^{3}$கா$^{3}$யகர ப்ரிய**

பக்தர்கள் மூலமாக ஸ்தோத்திரங்களை சொல்லச் செய்து அவற்றை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறாய். மந்த்ரனே உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னை வணங்கும் பக்தர்களை நீ காக்கிறாய். அனைத்து துக்கங்களையும் நீ களைகிறாய். வேதங்களை சொல்பவர்களின் ப்ரியனே.

**287. ஸ்ரீ சந்த்ராம்ஷவே நம:**
**ஆஹ்லாத$^{3}$கரத$^{3}$ தே$^{3}$வ ஸேவித 'சந்த்$^{3}$ராம்ஶு' நமோ**
**ஆஹ்லாத$^{3}$கர சந்த்$^{3}$ரகிரண நியாமக**
**ஆஹ்லாத$^{3}$கனு ஸத்பாத்ரரிகெ$^{3}$ சந்த்ராம்ஶு தெரதி$^{3}$**
**ஆஹ்லாத$^{3}$கர ஸக்ஞானவீவி ஸம்ஶய களெவி**

மனதிற்கு மகிழ்ச்சியைக் கொடுப்பவனே. தேவர்களால் வணங்குபவனே. சந்த்ராம்ஶுவே உனக்கு என் நமஸ்காரங்கள். குளிர்ச்சியைத் தரும் சந்திரனின்

கிரணங்களில் இருந்து அதனை நியமனம் செய்பவனே. ஸத்பாத்ரர்களுக்கு சந்திரனின் கிரணங்களைப் போல குளிர்ச்சியைத் தருவதான, ஞானத்தை அளிக்கிறாய். அவர்களின் சந்தேகங்களை (அஞ்ஞானத்தினை) களைகிறாய்.

**288. ஸ்ரீ பா4ஸ்கரத்3யுதயே நம:**
**ப்ரகாஶக மந்த்ர த்3ருஷ்ட ப4ரத்வாஜாத்3யர பூஜா**
**ஸ்வீகரிஸுவ 'பா4ஸ்கரத்3யுதி' நமோ எம்பெ3**
**அர்க்கன த்3யுதி நியாமகனு த்3யுதிதா3தா நீனு**
**அர்க்கவத் ஹ்ருத் திமிர சேதி3ஸி ஞானத்3யுதி ஈவி**

மந்த்ரங்களின் பலன்களைப் பெற்றவரான பரத்வாஜ முதலான ரிஷிகளின் பூஜையை ஏற்றுக் கொள்ளும் 'பாஸ்கரத்யுதியே' உனக்கு என் நமஸ்காரங்கள். சூரியனின் உள்ளே இருந்து கொண்டு ஒளியை கொடுப்பவன் நீயே.

**289. அம்ருதாம்ஶூத்3ப4வாய நம:**
**ஸோம கோ3க3ளலித்3து3 ஸ்ரேஷ்டகாமன பூரயிஸுவி**
**'அம்ருதாம்ஶூத்ப4வனே' ஸதா3 நமோ எம்பெ3 நினகெ3**
**அம்ருதாம்ஶு ஸ்ரீத4ன்வந்தரி நீ உத்க்ருஷ்ட ருத்3ராதி3**
**அமரரு இந்தி3ரியாபி4மானிக3ளுத்பாத3கனு**

சந்திரன், பசுக்களில் இருந்து கொண்டு, நம் அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றுகிறாய். 'அம்ருதாம்ஶூத்பவனே' உனக்கு என் நமஸ்காரங்கள். அமிர்தத்தை கொண்டு வந்த தன்வந்தரியே. ருத்ராதி தேவர்களின் இந்திரிய அபிமானிகளை நியமிப்பவன் நீயே.

**290. ஸ்ரீ பா4னவே நம:**
**ப்ரகாஶ நியமன மாள்ப 'பா4னு' நமோ நினகெ3**
**ப்ரகாஶ ஸ்வரூபனு நீனு ப்ரகாஶனகர்த்தா நீனே**
**அர்க்கன ப்ரகாஶக்கெ ஆதா4ரனாகி3 நீ இருவி**
**ஹாகு3 ப3த3ரக்3ரஹ நக்ஷத்ர ஸௌதா3மினிக3ள்கு3**

அனைவருக்கும் ஒளியை கொடுக்கும் 'பானுவே' , உனக்கு என் நமஸ்காரங்கள். ஒளிமயமானவனே. ஒளியைக் கொடுப்பவனே. சூரியனின் ஒளிக்கு நீயே ஆதாரகனாக இருக்கிறாய். இதைப் போலவே சந்திரன், நட்சத்திரங்கள் ஆகியோருக்கும் ஒளியைக் கொடுக்கிறாய்.

**291. ஸ்ரீ ஶஶிபி3ந்து3வே நம:**
**அதி ஶ்ரேஷ்ட ஸுக2ஸாத3ன ஆஹ்லான ஞானவந்த**
**ஸ்ரீத3 'ஶஶிபி3ந்து3' நமோ ஞானஞ்ஞான: ஸுக2ஸுக2:**
**அத்யந்த ஸுக2ஸ்வரூப ஞானாத்மா ஶஶிபி3ந்து3வே**

**இது3 திளிது3பாஸிப ப4க்தர்கெ3 ஸுக2ஞானதா3**

மிகச் சிறந்ததான சுக சாதனமான ஞானத்தை கொடுப்பவனே. ஶஶிபிந்துவே உனக்கு என் நமஸ்காரங்கள். ஞான, அஞ்ஞான, சுக, துக்க, முக்தி, ஞான ஆகியவற்றை கொடுப்பவன் நீயே. இதனை அறிந்து உன்னை உபாஸனை செய்யும் பக்தர்களுக்கு சுக ஞானத்தை கொடுக்கிறாய்.

**292. ஶ்ரீ ஸுரேஶ்வராய நம:**
**ஸுகா2னுப4வராத3 யோக்3யஜன ஸ்வாமியு நீனு**
**ஸுகா2த்மக ‘ஸுரேஶ்வர’ நமோ ஸதா3 நமோ எம்பெ3**
**முக்2ய ஸ்வாமியே நீனு ஸுரரெல்லர ஈஶ்வரனு**
**ஏகாந்த ப4க்தர ஹ்ருத்கமலதி3 ப்ரஜ்வலிபி**

சுகத்தை அனுபவிப்பரான முக்தி யோக்யர்களின் தலைவன் நீயே. ஸுகாத்மகனே. ஸுரேஶ்வரனே உனக்கு என் நமஸ்காரங்கள். அனைவருக்கும் ஸ்வாமியே. தேவர்கள் அனைவரின் ஈஸ்வரனே. உன்னுடைய ஏகாந்த பக்தர்களின் இதய கமலத்தில் நீ இருந்து ஒளிர்கிறாய்.

**293. ஶ்ரீ ஔஷதா3ய நம:**
**புரோட3ஶ மொத3லாத3 ஹவிஸ்க்3ராஹக ‘ஔஷத3ம்’**
**ஶிரபா3கி3 நமோ எம்பெ3 விபு4 ஶ்ரீஷ த4ன்வந்தரி**
**மூரு தாப பீடி3தர ஆஶ்ரயனு ஔஷத4னு**
**தீவ்ர ப4வரோக3 பரிஹார து3க்க2 பே4ஷஜனு**

புரோடஶ முதலான ஹவிஸ்களை ஏற்றுக் கொள்பவனே. ஔஷதனே உன்னை தலைவணங்கி நமஸ்காரம் செய்கிறேன். தன்வந்த்ரி ரூபத்தினால், மூன்று விதமான தாபங்களையும் போக்குபவனே. அத்தகைய ஔஷதத்தினை தருபவனே. என்னுடைய சம்சார துக்கத்தினையும் பரிகாரம் செய்வாயாக.

**கு3ருக3 மத்4வக3 ஸரஸிஜாஸனபித ஶ்ரீஶ**
**விரஜ கல்யாணதம ஸுகு3ணாப்3தி4 ஸர்வகர்த்த**
**‘ஶ்ரீப்ரஸன்ன ஶ்ரீனிவாஸ’ ஸஹஸ்ர நாமனே நமோ**
**நீ ரசிஸி நுடிஸித்3து3 அர்ப்பிதவு ப்ரீதனாகோ3 ||ப**

**|| நான்காம் ஸந்தி முடிந்தது ||**
**|| ஶ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து ||**

**ஐந்தாம் ஸந்தி**

**கல்யாணதம ரூப அனக4 ஸுகு3ணார்ணவனெ**

**மாலக்ஷ்மிபதி பி³ரம்ம விஶ்வாக்²ய விஷ்ணு வஷட்கார**
**ஶீல ஜீவோத்தம வர வாயு பி³ரம்மதா⁴மன ஹ்ருத்**
**கீலாலஜாந்தஸ்ய பரமாத்ம கேஶவ நமஸ்தே ||ப**

**294. ஸ்ரீ ஜக³தஸ்ஸேதவே நம:**
**மைத்ரிஸுக² ச௱ய ஸஜ்ஜனரிகெ³ ஜக³த்தினல்லி**
**உத்தம ரீதியலி ஒத³கு³வ 'ஜக³த³ஸ்ஸேது:'**
**ஸதா³ நமோ எம்பெ³ ஶுப⁴க்கெ ஶுப⁴ பாபக்கெ பாப**
**ஒத³கி³ஸுவி ஜக³த்திகெ³ மித்ரரிகெ³ ஶுப⁴வா**

இந்த உலகில் ஸஜ்ஜனர்களுக்கு உத்தமமான ரீதியில் அருளும் 'ஜகதஸ்ஸேதுவே' உனக்கு என் நமஸ்காரங்கள். ஶுபத்திற்கு ஶுபத்தையும், பாவத்திற்கு பாவத்தையும் அருள்கிறாய். உன்னுடைய பக்தர்களுக்கு ஶுபத்தையே கொடுக்கிறாய்.

**295. ஸ்ரீ ஸத்யதர்ம பராக்ரமாய நம:**
**சித்ரஜக³த் ஸ்ருஷ்டி கர்த்ருத்வ லக்ஷணனு மத்து**
**ஶத்ரு நாஶாயுத⁴தா³ரி 'ஸத்யத⁴ர்ம பராக்ரம'**
**ஸதா³ நமோ ஜக³தாஶ்ரயதா⁴ரக வஶீ**
**ஶத்ரு மத்து அத⁴ம நாஶக உருப³ல பூர்ண**

பல விதமான ஜீவர்களைக் கொண்ட ஜகத்தினை படைத்த கர்த்ருத்வத்தைக் கொண்டவன். எதிரிகளை அழிக்கவல்ல ஆயுதங்களை தரித்ஹ்டவனே. ஸத்யதர்ம பராக்ரமனே உனக்கு என் நமஸ்காரங்கள். உலகத்தின் ஆதாரமானவனே. அதமர்களை அழிப்பவனே. பலபூர்ணனே.

**296. ஸ்ரீ பூ⁴தப⁴வ்ய ப⁴வ நாதா²ய நம:**
**ப்ரஸித்³த⁴ வஜ்ராயுதா³தி³க³ள தீக்ஷ்ணகரிஸுவ**
**பே³ஸரிப ருணபரிஹாரக்கெ ப்ரார்த்த²னாயோக்³ய**
**ஸுஸமர்த்த² 'பூ⁴தப⁴வ்யப⁴வன்னாத²' நமோ எம்பெ³**
**ஐஶ்வர்ய ஸ்வாமித்வ த்ரிகாலதி³ ஸித்³த⁴வு நின்னல்லி**

புகழ்பெற்ற வஜ்ராயுதங்களை / வஜ்ராயுதங்களை ஏந்தியவர்களை கூர்மையாக்குபவனே. நம்மை பின் தொடர்ந்து வரும் ருணங்களின் பரிகாரத்திற்காக பிரார்த்தனை செய்வதற்கு யோக்யமானவனே. சொந்தமான சிறந்த சாமர்த்தியத்தைக் கொண்டவனே. பூதபவ்ய பவன்னாதனே உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்து செல்வங்களையும், உத்தமத்வத்தையும் எப்போதும் நீ உன்னில் கொண்டிருக்கிறாய்.

**297. ஸ்ரீ பவனாய நம:**
**ப⁴க்தரனு பவித்ர மாடு³வ 'பவனனே' நமோ**
**ஸதா³ ஸர்வத்ரத³லி பவித்ரமாடு³வ ஸ்வபா⁴வ**

**பா1தா1ப1ரேஶ வரேண்ய அப4ய அம்ருதோத்தம**
**வந்த்3யதம ஸர்வவந்த்3ய நாராயணனு ப1வன**

பக்தர்களை பவித்ரம் ஆக்கும் பவனனே. உனக்கு என் நமஸ்காரங்கள். எப்போதும் அனைத்து இடங்களையும் பவித்ரம் ஆக்குபவனே. அம்ருதோத்தமனே. அனைவராலும் வணங்கத்தக்கவனே. நாராயணனே. பவனனே.

**298. ஶ்ரீ பாவனாய நம:**
**மன்வாதி3 ராஜ ஸம்ரக்ஷணெ மாள்ப 'பாவன' நமோ**
**மனு ஸ்வாயம்பு4வ ஈஶயக்கு நின்ன துதிஸலு**
**நீனு ராக்ஷஸரன்ன கொந்து3 ஆ மனுவ ரக்ஷிஸிதி3**
**மீனரூபதி3 ஸத்ய வ்ரதன்ன காய்தி3 நீ பாவன**

மனு முதலாக அனைத்து அரசர்களையும் காப்பவனே. பாவனனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்வாயம்புவ மனுவானவன், உன்னை ஈஶாவாஸ்யத்தினால் துதிக்க, அசுரர்களை நீ கொன்று, அவனை காத்தாய். மீன ரூபத்தினால், ஸத்ய வ்ரதனை காத்தாய். ஹே பாவனனே.

**299. ஶ்ரீ அனிலாய நம:**
**அதி உத3கவீவனு 'அனில' நமோ நினகெ3**
**ப4க்தி அனுராக3 ரூப ஸ்னேஹகாஶ்ரய நீனு**
**ஒத3கி3ஸுவி ஸ்னேஹவ முக்2யவாய்வந்தர்யாமி நீ**
**ஆதா4ர ஸர்வக்கு நீ ஆஸ்ரய ரஹித ஸர்வேஶ**

அதிகமான மழையினை தருபவனே அனிலனே உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தி, வைராக்ய, நட்புக்கு நீயே ஆதாரமானவன். அனைவரிலும் நட்பினை கொடுப்பவன் நீயே. அனைவரிலும் அந்தர்யாமியாக இருப்பவன் நீ. அனைத்திற்கும் நீயே ஆதாரமானவன். உனக்கு யாருடைய ஆதாரமும் தேவையில்லை. ஸர்வேஶனே.

**300. ஶ்ரீ காமக்4னே நம:**
**அன்னாதி3க3ள கொட்டு ஒத3கு3வ 'காமஹா' நமோ**
**நீனு எந்தா2 மஹானெந்து3 ப4க்த ஜிக்ஞாஸ விஷய**
**க4ன ரோகா3தி3 கஷ்டக3ள பரிஹார மாடு3வி**
**ஞான ப்ரகாஶக்கெ விக்4ன அக்3ஞான களெவி வ்யாஸ**

அன்னம் முதலான அனைத்து விருப்பங்களையும் கொடுத்து காப்பவனே. காமஹா. உனக்கு என் நமஸ்காரங்கள். நீ எத்தகைய மகான் என்பதை பக்தர்களை உன்னை ஆராய்ந்து அறிகிறார்கள் (முழுமையாக அல்ல). மிகப்பெரிய நோய்களை / கஷ்டங்களை நீ பரிகரிக்கிறாய். ஞானம் வருவதற்கு தடையாக உள்ளதான அஞ்ஞானத்தினை நீ களைகிறாய். வ்யாஸனே.

**301. ஸ்ரீ காமக்ருதே நம:**
**ப4க்த ஸுக2 ஸம்ருத்3தி4காரகனு 'காமக்ருத்' நமோ**
**ப4க்தரிகெ3 போ4க3மோக்ஷாதி4க காய்து3 பூரெயிஸுவி**
**வித்3யுக்த காம கர்மகெ3யிஸி ஸ்வர்க்கா3தி3 ப2லவீவி**
**ஸாத்4ய ஸா4து காம்ய ஸாத4னகாரக யதா2யோக்3ய**

பக்தர்களுக்கு அபாரமான சுகங்களை தருகிறாய். காமக்ருத் உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்களுக்கு, போகங்கள், மோட்சங்களை கொடுத்து காக்கிறாய். அவர்களை செய்யும் விதிப்படியான கர்மங்களை ஏற்றுக் கொண்டு, ஸ்வர்க்கம் முதலான பலன்களைக் கொடுக்கிறாய்.

**302. ஸ்ரீகாந்தாய நம:**
**யுத்3த4 மொத3லாத3வுக3ளலி ஸம்ரக்ஷணக்காகி3**
**நீ த3யதி3 அபேக்ஷா மாடி3ஸிகொம்பி3 'காந்த' நமோ**
**தை3த்யர்க3ள ஸுக2 நாஶமாடு3வ நீனு காந்தனு**
**பது3மஜாதி3 ஸுக2ஸ்வரூப நிர்ணய நின்னிந்த3**

போர் முதலானவற்றில் அனைவரையும் காப்பதற்காக, நீ கருணையுடன் விருப்பத்தை கொள்கிறாய். காந்தனே உனக்கு என் நமஸ்காரங்கள். தைத்யர்களின் சுகத்தினை நீ அழிக்கிறாய். ஸுக ஸ்வரூப நிர்ணயமானது உன்னாலாயே ஆகிறது.

**303. ஸ்ரீ காமாய நம:**
**பி3ரம்மாண்ட3 ஸம்பூர்ணவாகி3 நிர்மிஸுவ 'காம' நமோ**
**பி3ரம்மதே3வரிந்த3 க3ம்யவாத்3த3ரிந்த3 காம நீனு**
**மஹாப3ல வாயுதே3வரிந்த3 க3ம்ய காம நீனு**
**வித்3யுத்பதி 'வாயுனயேத்3பி3ரம்ம நிஜாபர:'**

பிரம்மாண்டத்தை முழுமையாக நிர்மாணம் செய்தவனே. காமனே உனக்கு என் நமஸ்காரங்கள். பிரம்மதேவரால் வணங்கப்படுவதால், நீ காமன். மஹாபலம் பொருந்திய வாயுதேவரால் வணங்கப்படும் காமன் நீ.

**304. ஸ்ரீ காமப்ரதா3ய நம:**
**வாஞ்சிதப்ரத3 நீனு 'காமப்ரத3' நமோ நினகெ3**
**காஞ்சனாதி3 க்ஷுத்3ரகாம்ய அர்ஹதானுஸார ஈவி**
**பராஞ்சி கா2னியுத் த்ருணத் ப4க்தரிகெ3 நீனே இஷ்ட**
**விரஞ்சி வாயுகெ3 நின்ன வின: பே3ரெ இச்செயில்ல**

விரும்பிய இஷ்டார்த்தங்களை நிறைவேறுபவன் நீ. காமப்ரதனே உனக்கு என் நமஸ்காரங்கள். அவரவர்களின் தகுதி / யோக்யதைக்கேற்ப தங்கம் முதலான

செல்வங்களை நீ அளிக்கிறாய். பக்தர்களுக்கு நீயே இஷ்டமானவன். பிரம்ம வாயுகளுக்கு உன்னைத் தவிர வேறு எதுவும் இஷ்டம் இல்லை.

**305. ஸ்ரீ பிரபு4வே நம:**
**தே3வதெக3ளிகே3வெ ஸ்ரேஷ்டதே3வத்வ ஈவ 'ப்ரபு4' நமோ**
**தே3வ தே3வோத்தமனே ப்ரகர்ஷேணப4வதி ப்ரபு4:**
**ரவிஜாதி3 கபி விராதா4தி3க3ளிகெ3 தே3வத்வ**
**தே3வதாவதாரராத்3த3ரிம் இத்தி ஸ்ரீ ராமசந்த்ர**

தேவதைகளுக்கு அவர்களின் சிறந்த தேவத்வத்தை கொடுக்கும் பிரபுவே உனக்கு என் நமஸ்காரங்கள். தேவ தேவோத்தமனே. சுக்ரீவன், விராதா ஆகியோருக்கு தேவத்வத்தையும், அவர்கள் தேவதா அவதாரர்கள் ஆனதாலும், இத்தகைய சிறப்பினை அருளினாய், ஹே ஸ்ரீராமசந்திரனே.

**306. ஸ்ரீ யுகா3தி3க்ருதே நம:**
**ஸர்வஸுக2 யோக்3யதி3ந்த3 ஸுக2போ4க3 மாடி3ஸுவி**
**ஸர்வஸுக2 பூர்ணனே 'யுகா3தி3க்ருத்' நமோ நமஸ்தே**
**தே3வ நின்ன க்ரீடா3ர்த்த2 ஸஜ்ஜனோத்3தா4ரார்த்த2 யுக3க3ள்**
**ஸ்ரீவரனே நீ மாடி3ஸுவி த்ரயிமய த்ரையுக3**

தக்க யோக்யதை / தகுதி கொண்டவர்களுக்கு தக்க போகங்களைக் கொடுக்கிறாய். ஸர்வ சுகங்களையும் முழுமையாகக் கொண்டவனே. யுகாதிக்ருத் – உனக்கு என் நமஸ்காரங்கள். தேவனே. ஸஜ்ஜனர்களை நீ உன் லீலைகளால் காக்கிறாய். ஸ்ரீவரனே இத்தகைய செயல்களை நீயே செய்விக்கிறாய். மூன்று யுகங்களில் அவதாரம் செய்தவனே.

**307. ஸ்ரீ யுகா3வர்த்தாய நம:**
**யக்3ஞ தா3னாதி3க3ளனு பதே3பதே3 தி3ன தி3ன**
**யக்3ஞனே நீ ப்ரவ்ருத்திஸுவி 'யுகா3வர்த்த' நமஸ்தே**
**த்ரயியுக3னெ நீ சதுர்யுக3க3ள ஆவர்த்திஸி**
**யோக்3ய ஸாத4ன ஜனரிகொ3த3கி3ஸுவி ஸர்வக்ஞ**

யக்ஞ, தானங்களை நீ தினம்தினம் செய்விக்கும் யக்ஞனே, யுகாவர்த்தனே உனக்கு என் நமஸ்காரங்கள். மூன்று யுகங்களில் அவதாரம் செய்தவனே. நீ நான்கு யுகங்களிலும் இருக்கிறாய். யோக்ய ஸாதனங்களை செய்த மக்களுக்கு நீ தரிசனம் அளிக்கிறாய். ஸர்வக்ஞனே.

**308. ஸ்ரீ அனேகமாயாய நம:**
**அன்யைக ஸாமர்த்த2வந்தனு 'அன்யைகமாயாய' நமோ**
**நின்னிச்சாஶக்தி ஸாமர்த்2யக3ளிகெ3ந்து3 எணெ இல்ல**

**நின்ன யாவாக3ளு மித்2யாவல்ல ஸத்யவே நின்னிச்சா ஶக்தி**
**நின்னிச்சா க்ரியா ஞானஶக்தியிம் ஸ்ருஷ்ட்யாத்3யஷ்டகவு**

அபாரமான சாமர்த்தியங்களைக் கொண்டவனே. அன்யைகமாயாயனே உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னுடைய இச்சா சக்தி, சாமர்த்தியங்களுக்கு எவ்வித இணையும் இல்லை. உன்னுடைய இச்சா சக்தியானது உண்மையே. மித்யை இல்லை. அதனாலேயே, நீ ஸ்ருஷ்ட்யாதி அஷ்ட கர்த்ருத்வங்களை செய்கிறாய்.

**309. ஸ்ரீ மஹாஶனாய நம:**
**மஹாஶத்ரு ஸமுதா3ய நாஶமாள்ப 'மஹாஶன'**
**அஹர்நிஶி நமோ நினகெ3 ஆதி3தை3த்யன ஸீள்தி3**
**மஹி உத்3தா4ர ஆதி3வராஹ காஞ்சன கஶிபு**
**ஸம்ஹாரக ம்ருத்யுமாரக ந்ருஹரே பாஹிமாம் பாஹி**

மிகப்பெரிய எதிரி சமூகங்களை அழிப்பவனே. மஹாஶனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஆதி தைத்யனை நீ கொன்றாய். பூமியை காப்பாற்றினாய். ஆதி வராகனே. ஹிரண்யகசிபுனை கொன்ற நரசிம்மனே, எனக்கு அருள்வாயாக.

**310.ஸ்ரீ அத்3ருஶ்யாய நம:**
**ப்ராக்ருதேந்த்3ரிய த்3ருஷ்டிகோ3சரனாக3தெ3 'அத்3ருஷ்ய'**
**பா3கி3 ஶிர நமோ ஸூத்ரவு 'தத3வ்யக்தமாஹஹி'**
**நீ க்ருபதி3 ஒலிது3 நின்னிச்செயிந்த3லெ தோருவி**
**நீ காணிஸிகொள்ளலாரி நின்னிச்சாவின: யாரிகு3**

நம்முடைய ப்ராக்ருத இந்திரியங்களுக்கு தென்படாமல், மறைந்து நிற்பவனே. அத்ருஶ்யனே. உனக்கு என் நமஸ்காரங்கள். அனைவரிலும் இருந்து, உன் இஷ்டப்படியே நீ காட்டிக் கொள்கிறாய். உன் இஷ்டம் இல்லாமல், நீ யாருக்கும் தென்படுவதில்லை.

**311. ஸ்ரீ வ்யக்த ரூபாய நம:**
**பத்3மஜாண்ட3 நிர்மாத்ரு தத்க3த பதார்த்த2க3ளல்லி**
**நீ த3யதி3 ஹூட்டிஸி நின்னதீ4ன ஆஶ்ரயத3லி**
**ஹிதவாகி3ருவுவு 'வ்யக்த ரூபஶ்ச நமோ ஆத்மா**
**வாரே த்3ருஷ்டவ்யோ' ஸாத4ன மெச்சி நின்னிச்செயிம் தோர்வி**

இந்த உலகத்தை படைத்து, அதில் உள்ள ஒவ்வொரு பதார்த்தங்களை படைத்து, அவற்றில் நீ இருந்து, உன் அதீனமாகவே வைத்துக் கொண்டு, அவற்றை காக்கிறாய். வ்யாக்தரூபாயனே உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்களின் ஸாதனைகளை நீ மெச்சி, உன்னுடைய விருப்பப்படி அவர்களுக்கு தரிசனம் அளிக்கிறாய்.

**312. ஸ்ரீ ஸஹஸ்ரஜிதே நம:**
**பூர்ணஸ்ய ஒத3கி3ஸுவ 'ஸஹஸ்ரஜித்' நமோ எம்பெ3**
**ஏனெம்பெ3 நின்ன ஓஜஸ்ப3ல ஸஹஸ்ர எந்தெ3னிப**
**க3ணனெகெ3 ஹெச்சாத3 அஸுரரன்ன ஜயிஸுவி**
**நின்ன ப3லமஹாத்ம்ய பூர்ண அரியலு அஶக்ய**

பூர்ணமானவனே. வரங்களை அளிப்பவனே. ஸஹஸ்ரஜிதனே உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னுடைய எல்லையற்ற ஆளுமை, வலிமைகளை நான் என்னவென்று சொல்வேன். அனைத்து அசுரர்களை நீ வெல்கிறாய். உன்னுடைய வலிமைகளை மகிமைகளை முழுமையாக அறிவது அசாத்தியமானது.

**313. ஸ்ரீ அனந்தஜிதே நம;**
**அனந்த போ4க்3ய வஸ்துக3ள ஈவி நீ 'அனந்தஜிதா'**
**அனந்த போ4க்3ய வஸ்து ஜேதா நமஸ்தே ஆப்தகாமாய**
**ஸ்தா2ன பே4த3தி3ந்த3லோ கால பே4த3தி3ந்த3லோ நீனு**
**ஏனு கொரதெ இல்லத3 பூர்ண காம போ4க்3யஜேதா**

அனந்தமான போக்ய வஸ்துகளை நீ அருள்கிறாய். ஹே அனந்தஜிதனே. அந்த வஸ்துகளில் ஒளியாக நீயே இருக்கிறாய். அனைவருக்கும் ஆப்தகாமனே. கால, தேச, இடங்களால் நீ எவ்வித குறைகளும் இல்லாத பூரணமானவன்.

**314. ஸ்ரீ இஷ்டாய நம:**
**பரம ப்ரியனாத3வனு 'இஷ்டனே' நமோ எம்பெ3**
**பரிபரி யக்ஞதி3ந்த3 பூஜிதனாது3த3ரிந்த3**
**ஸ்ரீ ரமாபதி நீனு இஷ்டனு எந்தெ3னிஸி கொண்டி3**
**பரோவரிய நீனேவெ ஸ்ரேஷ்டதமனாகி3ருவி**

பரமப்ரியமானவனே. இஷ்டனே. உனக்கு என் நமஸ்காரங்கள். பற்பல யக்ஞங்களால் நீ பூஜிக்கப்படுவதால், ஹே ரமாபதியே, நீ இஷ்டன் எனப்படுகிறாய். நீயே ஸர்வோத்தமனாக இருக்கிறாய்.

**315. ஸ்ரீ விஶிஷ்டாய நம:**
**ஆனந்த3 ப3ல ஞானாத்3யுத்தம கு3ணவந்தனெந்து3**
**அனக4வேத3 வாக்யக3ளிந்த3 விஹித 'விஶிஷ்ட'**
**ஆ நமோ எம்பெ3னு ப்ரளயத3லி அவஶிஷ்டனு**
**நீனெ ஸர்வவ உத3ரதொ3ள் இட்டுகொண்டு3 இருவி**

ஆனந்த, பல, ஞானங்களில் சிறந்தவன். அனைத்து வேத வாக்கியங்களால் போற்றப்படுபவன் 'விஶிஷ்டனே' உனக்கு என் நமஸ்காரங்கள். பிரளயத்தில் நீ

மட்டுமே இருக்கிறாய். அப்போது அனைத்தையும் உன் வயிற்றில் வைத்துக் கொண்டிருக்கிறாய்.

**316. ஸ்ரீ ஶிஷ்டேஷ்டாய நம:**
**ப4க்தர அபீ3ஷ்டகள பூர்ணமாடு3வி 'ஶிஷ்டேஷ்ட'**
**ஸதா3 நமோ நினகெ3 முக்தாஸ்ரய முக்தர ஸ்வாமி**
**மோத3மய நீ ஸர்வதா3 ப4க்தரிந்தா3ராதி3தனு**
**முத3தி3 ஸ்ரீ லட்சுமியிந்த3 ஸ்துதிஸிகொம்பி3 ப்ரளயதி3**

பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றுபவனே. ஶிஷ்டேஷ்டனே உனக்கு என் நமஸ்காரங்கள். முக்தர்களின் கதி நீயே. ஆனந்தமயனே. நீ எப்போதும் பக்தர்களால் வணங்கப்படுபவன். மகிழ்ச்சியுடன், பிரளய காலத்தில், ஸ்ரீலட்சுமிதேவியால் வணங்கப்படுகிறாய்.

**317. ஸ்ரீ ஶிக2ண்டி3னே நம:**
**ஶத்ருக3ள அதிஸூக2 க2ண்டி3ஸூவவனு நீனு**
**கரெஸிகொள்ளுவி 'ஶிக2ண்டி3' எம்பு3வ நாமதி3ந்த3**
**பரிமிதி இல்லத3 ஆஶ்சர்யகரவாத3 தேஜஸ்**
**பரம அத்3பு4த மஹைஶ்வர்ய ரூபனு ஶிக2ண்டி3யு**

எதிரிகளை அதிகமாக எதிர்ப்பவன் நீ. அழைத்துக் கொள்கிறாய் 'ஶிகண்டி' என்று. எல்லைகள் அற்ற ஆச்சரியமான தேஜஸ் கொண்ட, பரம அற்புதமான ஐஶ்வர்ய ரூபன் நீயே.

**318. ஸ்ரீ நஹுஷாய நம:**
**ப3ந்த4 தூ4ர அட்டுவி ப4க்தரிகெ3 'நஹுஷ' நமோ**
**ப3ந்த4தி3 பி3கி3வி நீ தை3த்ய து3ஷ்ட ஜனரன்னு**
**ப3ந்த4க்கெ ப்ராத2மிக காரண நின்னிச்சா ப்ரக்ருதியு**
**த்ரிகு3ணவு நின்னிந்த3 நியம்ய ப3ந்த4கெ காரண**

பக்தர்களுக்கு வந்த கஷ்டங்களை பரிகரிப்பாய் 'நஹுஷனே' உனக்கு என் நமஸ்காரங்கள். தைத்ய துஷ்டர்களை நீ பந்தங்களிலிருந்து விடுவிப்பாய். பந்தத்திற்கு (சம்சாரத்திற்கு) வருவது என்பது அனைத்தும் உன்னுடைய இச்சையினாலேயே நடக்கிறது. இந்த ப்ரக்ருதி, மூன்று குணங்கள் என அனைத்தும் உன்னாலேயே. நீயே பந்தனத்திற்கு காரணம் ஆகிறாய்.

**319. ஸ்ரீ வ்ருஷாய நம:**
**ப4க்தஜனரிஷ்டவனு வர்ஷிஸூவ 'வ்ருஷ' நமோ**
**வேதோ3பதே3ஶவோ வேதா3ர்த்த2 நிர்ணயாதி3 போ4த3வோ**
**வித்ததா3ராபத்ய ஸூஹ்ருஜ்ஜன ஆயுராரோக்3யவோ**

**கோ3தா4ன்ய தனப4க்திக்ஞான வ்ருத்3தி4வர்ஷிஸுவி நீ**

பக்தர்களின் இஷ்டார்த்தங்களை மழை போய் பொழியச் செய்யும் 'வ்ருஷனே' உனக்கு என் நமஸ்காரங்கள். வேத உபதேசமோ, வேதார்த்தங்களின் நிர்ணயம் ஆகியவற்றை போதிப்பதோ, சஜ்ஜனர்களின் ஆயுள் ஆரோக்யமோ, பசு, செல்வம், பக்தி, ஞானம், ஆகிய அனைத்தையும் வளர்ப்பவன் நீயே.

**320. ஸ்ரீ க்ரோத3க்4னே நம:**
**க்ரோத3தி3ந்த3 ஶத்ருக3ள ஸம்ஹரிஸுவி 'க்ரோத3:'**
**ஆத3ரதி3 நமோ குந்ருபஹர பரஶுராம**
**க்ரோதி3 ஶத்ருக3ளு ப்ரயோகி3ஸுவ க்ரோத3வன்னேவெ**
**எது3ரு மாடி3 கொல்லுவி ஸர்வஶக்த நீ நிர்தோ3ஶ**

விரோதத்துடன் எதிரிகளை சம்ஹரிக்கிறாய். க்ரோதனே உனக்கு என் நமஸ்காரங்கள். கெட்டவர்களின் எதிரியான பரஶுராமனே. எதிரிகள் பயன்படுத்தும் க்ரோதத்தை எதிர்த்து அவர்களை கொல்பவனே. ஸர்வஶக்தனே. உன்னிடம் எவ்வித தோஷங்களும் இல்லை.

**321. ஸ்ரீ க்ரோத4க்ருதே நம:**
**த்4யுப்ருது2வீஸ்தா2பக 'க்ரோத4க்ருத்' நமோ நமோ எம்பெ3**
**பாபிக3ளு ஸாது4தன இல்லத3வரிகெ3 க்ரோத4**
**ப்ராபகனாகு3வி ஸத்வக்ஷீண ரஜோன்னாஹ தமஸ்**
**ப்ரசுரமாடு3வி தத்வத் யோக்3யதா கர்ம அரிது**

அந்தரிக்ஷம், பூமண்டலம் ஆகியவற்றை நிறுவியவனே. க்ரோதக்ருத் - உனக்கு என் நமஸ்காரங்கள். பாவம் செய்பவர்கள், ஸாத்விகம் இல்லாதவர்கள் ஆகியோருக்கு கோபத்தை உண்டாக்குபவனாக இருக்கிறாய். உன் பக்தர்களின் யோக்யதைகளை அறிந்து, அவர்களின் ஸத்வத்தினை, ரஜஸ்ஸினை, தமஸ்ஸினை அதிகமோ / குறைக்கவோ செய்கிறாய்.

**322. ஸ்ரீ கர்த்ரே நம:**
**லோகஜனரன்ன பாலனாதி3க3ளன்ன மாள்பெ**
**முக்2யகாரண நீனு 'கர்தா' நமோ எம்பெ3 நினகெ3**
**முக்2யகர்த எந்தரெ ஸ்வதந்த்ரனெந்து3 திளிவுது3**
**கர்த்ருத்வ லக்ஷண ஸ்வதந்த்ரத்3து3 அஸ்வதந்த்ரத்தல்ல**

உலக மக்களின் காத்தல் ஆகியவற்றை செய்கிறாய். இதற்கு நீயே முக்கிய காரணன். கர்தனே உனக்கு நமஸ்காரங்கள். முக்யகர்தன் என்றால் ஸ்வதந்த்ரன் என்று அறிய வேண்டும். கர்த்ருத்வ லட்சணம் என்பது ஸ்வதந்த்ரனிடம் மட்டுமே உள்ளது; அஸ்வதந்த்ரரிடம் இல்லை.

**323. ஸ்ரீ விஶ்வபா3ஹவே நம:**
**ஸர்வத்ர ஸர்வரலி க்ரியா ப்ரகடிஸுவவ நீ**
**ஸர்வகர்தா 'விஶ்வபா3ஹுவே' ஸதா நமோ நினகெ3**
**யாவ முக்2யப்ராணனு க்ரியாரூபதி3 ப்ரகட**
**ஆ வாயுதே3வரிகெ3 காரணனு நீ விஶ்வபா3ஹு**

அனைவரிடமும், அனைத்து இடங்களிலும் நின்று செயல்களை செய்விப்பவன் நீயே. நீயே ஸர்வகர்தா. 'விஶ்வபாஹுவே' உனக்கு என் நமஸ்காரங்கள். எந்த முக்யபிராணன் தன் செயல்களை ஜீவர்களில் இருந்து செய்விக்கிறானோ, அந்த வாயுதேவருக்கே நீ காரணன் ஆகிறாய். நீயே விஶ்வபாஹு.

**324. ஸ்ரீ மஹீத4ராய நம:**
**பு3த்3தி4மந்த வத்ஸ ரிஷியன்ன ப்ரகாஶ மாடு3வ**
**'மஹீத4ரனே' நமோ நினகெ3 பூ4மிகெ3 ஆதா4ர**
**கீ3தெயலி ப4க3வந்த ஹேளிதி3 'காமாவிஶ்வாச**
**பூ4தானி தா4ரயாமி அஹம் ஓஜஸா' ஹீகெ3 எந்து3**

அறிஞர்களான, ஞானிகளான ரிஷிகளை நீ மேலும் அறிஞர்கள் ஆக்குகிறாய் 'மஹீதரனே' உனக்கு என் நமஸ்காரங்கள். பூமிக்கு ஆதாரமான பகவத்கீதையில் நீயே இவ்வாறு கூறினாய். அனைத்து பூதங்களுக்கும் (ஜீவர்களுக்கும்) நானே ஒளியை தருகிறேன் – என்றாய்.

**325. ஸ்ரீ அச்யுதாய நம:**
**ச்யுதி இல்லத3வனு 'அச்யுதனே' நமோ நினகெ3**
**வ்ருததிஜாஸன ஶேஷஶிவ ஶக்ராதி3 அமர**
**ரந்த3தி3 ப்ராக்ருத தே3ஹவில்லதெ3 கேவல ஞானா**
**நந்தா3தி3 கல்யாணதம அப்ராக்ருத விக்3ரஹனு**

அழிவு இல்லாதவனே 'அச்யுதனே' உனக்கு என் நமஸ்காரங்கள். கருட, ஶேஶ, ருத்ரர், இந்திராதி தேவர்களைப் போல ப்ராக்ருத தேகம் இல்லாமல், வெறும் ஞானானந்தாதி கல்யாணகுண பரிபூர்ண அப்ராக்ருதமான தேகம் கொண்டவன் நீ.

**326. ஸ்ரீ ப்ரதி2தாய நம:**
**ப்ரக்2யாத ஸுப்ரஸித்3த4 'ப்ரதித' நமோ எம்பெ3**
**அகளங்க வேதே3திஹாஸ புராணாதி3 ஸச்சாஸ்திர**
**ஆக3மதி3 ஆதி3மத்யாந்த கீர்த்திஸல்படு3வந்த2**
**ரகு4ராம தே3வகீஸுத ஸ்ரீபதி வேத3வ்யாஸ**

அனைத்து உலகங்களிலும் புகழ் பெற்றவன் 'ப்ரதிதனே' உனக்கு என் நமஸ்காரங்கள். எவ்வித குறைகளும் இல்லாத வேத, இதிகாச, புராணாதி, நற்சாஸ்திர, ஆகமங்களில், அதன் துவக்கங்களில், நடுவில், இறுதியில் என அனைத்து பாகங்களிலும் புகழப்படுபவன் நீயே. ரகுராமன். தேவகிஸுதனான ஸ்ரீகிருஷ்ணன். ஸ்ரீலட்சுமிதேவியின் கணவன். வேதவ்யாஸன்.

**327. ஸ்ரீ ப்ராணாய நம:**
**ப்ரக்ருஷ்ட வஜ்ராதி$^{3}$க$^{3}$ள ப்ரஹரண மாள்ப 'ப்ராண'**
**பா$^{3}$கி$^{3}$ ஶிர நமோ எம்பெ$^{3}$ உத்க்ருஷ்ட ப$^{3}$லசேஷ்டவான்**
**ப்ரக்ருஷ்ட ப்$^{3}$ருஹதி ஸஹஸ்ர ஸ்வர வ்யஞ்சனாக்ஷர**
**வாச்யனே ஸூர்யனு ஶதாப்$^{3}$த க்ரியாமாடி$^{3}$ஸுவி**

உன்னுடைய சிறந்த வஜ்ராயுதங்களால் அடிக்கும் 'ப்ராணனே' உனக்கு என் நமஸ்காரங்கள். மிகச்சிறந்த செயல்களை செய்பவனே. ப்ருஹதி ஸஹஸ்ர நாமங்களால் அழைக்கப்படுபவனே. ஸ்வரங்களால், எழுத்துக்களால் அழைக்கப்படுபவனே. சூரியனுக்கு ஒளி கொடுத்து, அவனின் செயல்களை செய்ய வைப்பவனே.

**328. ஸ்ரீ ப்ராணதா$^{3}$ய நம:**
**உத$^{3}$ர கொடு$^{3}$வவ நீ 'ப்ராணத$^{3}$' நமோ நினகெ$^{3}$**
**நீ த$^{3}$யதி$^{3}$ ப்ராணகொடு$^{3}$வி ஆத்$^{3}$த$^{3}$ரிம் ப்ராணத$^{3}$னு**
**மோத$^{3}$மய நீ ஸூர்யனொளித்$^{3}$து$^{3}$ ஶதாயஷ்ய வீவி**
**உத$^{3}$காக்$^{2}$ய ப$^{4}$க்தி ப்ரவர்த்திஸுவி ப்ரதிக்ஷண ஸ்வாமி**

வயிறு (இந்த தேகத்தினை) கொடுப்பவனே 'ப்ராணதனே' உனக்கு என் நமஸ்காரங்கள். நீயே கருணையுடன் பிராணனைக் கொடுக்கிறாய். ஆகையால் 'ப்ராணதன்' என்று அழைக்கப்படுகிறாய். ஆனந்தமயமானவனே. நீ சூரியனில் இருந்து ஒளியைக் கொடுக்கிறாய். அனைவரிலும் பக்தியை வளர்ப்பவனே. உனக்கு என் ப்ரதட்சிண நமஸ்காரங்கள், ஸ்வாமியே.

**329. ஸ்ரீ வாஸவானுஜாய நம:**
**ஸோசிதானுஷ்டான ஸ்தி$^{2}$தி நாஶகெ$^{3}$ய்வ அஸுரர**
**நாஶமாடு$^{3}$வ 'வாஸவானுஜ' நமோ நமோ எம்பெ$^{3}$**
**வாஸவானுஜ வாமன யக்ஞ நரஸிம்ஹ ராம**
**வ்யாஸபா$^{4}$ர்க்க$^{3}$வ கிருஷ்ண கல்க்யாதி$^{3}$ ரூப து$^{3}$ஷ்டஹந்தா**

முனிவர்களின் யக்ஞங்களை / செயல்களை அழிக்கும் அசுரர்களை அழிக்கும் 'வாஸவானுஜனே' உனக்கு என் நமஸ்காரங்கள். வாமனே. யக்ஞனெ.

நாரஸிம்ஹனே. ராமனே. வ்யாஸரே. பார்க்கவனே. கிருஷ்ண கல்கி முதலான அவதாரங்களை துஷ்டர்களை அழிப்பதற்காகவே நீ வந்திருக்கிறாய்.

**330. ஶ்ரீ அபாம்நித$^{4}$யே நம:**
**அபகார்யக$^{3}$ள் க்ஷீர த$^{3}$தி$^{4}$ நவனீத க$^{4}$ருத மத்து**
**ஈ கார்யக$^{3}$ளபி$^{4}$மானி தே$^{3}$வதாபாத்ரு ஆஶ்ரய**
**நாகி$^{3}$ருவவ 'அபாம்நிதி$^{4}$' நமோ பாஹிமாம் பாஹி**
**நிக$^{3}$மோக்தி 'ஆபோவை ஸர்வதே$^{3}$வதா' எந்தி$^{3}$ஹுது$^{3}$**

பால், தயிர், வெண்ணெய், நெய் ஆகியவற்றில் இருந்து, மற்றும் அந்த அபிமானி தேவதைகளில் இருந்து அவர்களுக்கு ஆதரவாக இருப்பவனான 'அபாம்நிதியே' உனக்கு என் நமஸ்காரங்கள். 'ஆபோவை ஸர்வ தேவதா' என்று ஸ்ருதி உன்னையே புகழ்கிறது.

**331. ஶ்ரீ அதி$^{4}$ஷ்டானாய நம:**
**க$^{3}$ர்ப்ப$^{4}$ தன்னல்லிஹ ஶிஶு ரக்ஷணார்த்த$^{2}$ ஹிததி$^{3}$ந்த$^{3}$**
**அப்பிகொண்டி$^{3}$ருவந்தெ ஸர்வ பதா$^{3}$ர்த்த$^{2}$க$^{3}$ள நீனு**
**அப்பிகொண்டு$^{3}$ நின்னல்லிட்டிருவி 'அதி$^{4}$ஷ்டான' நமோ**
**அம்பு$^{3}$ஶாயி ஶ்ரீகூர்ம நீ ஸர்வரக்ஷக ஆதா$^{4}$ர**

தாயானவள், கர்ப்பத்தில் இருக்கும் தன் குழந்தையை கவனத்துடன் காப்பது போல, அனைத்து பதார்த்தங்களையும் நீ காத்து, உன்னிலேயே வைத்திருக்கிறாய் 'அதிஷ்டானனே' உனக்கு என் நமஸ்காரங்கள். ஶ்ரீகூர்மனே. நீயே அனைவருக்கும் ஆதாரமானவன்.

**332. ஶ்ரீ அப்ரமத்தாய நம:**
**வாயுவத் ப்ரமாத$^{3}$ ஹீன வேக$^{3}$வுள்ள 'அப்ரமத்த'**
**நமோ நினகெ$^{3}$ 'அனேஜதே$^{3}$க$^{1}$ம் மனஸோ ஜவீயோ**
**நைனத்தே$^{3}$வா ஆப்னுவன் பூர்வமர்ஷத் தத்$^{3}$தா$^{3}$வதோயிந்தா**
**நத்யேதி ஶிஷ்டத் தஸ்மின்னபோ மாதரிஷ்வ த$^{3}$தா$^{4}$தி'**

வாயுவைவிட அதிகமான வேகம் உள்ள 'அப்ரமத்தனே' உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ருதி வேத வாக்கியம் இவ்வாறு உன்னை புகழ்கிறது 'அனேஜதேகம் மனஸோ ஜவீயோ..'.

**333. ஶ்ரீ ப்ரதிஷ்டிதாய நம:**
**ப்ரதி புருஷரிகெ$^{3}$ க$^{3}$வாதி$^{3}$க$^{3}$ளன்னு கொடு$^{3}$த்தலி**
**இப்பந்த ஸ்தி$^{2}$திவுள்ள 'ப்ரதிஷ்டித' நமோ நினகெ$^{3}$**
**இதர அனபேக்ஷ ஸ்வதந்த்ரனு எந்தி$^{3}$கு$^{3}$ எல்லு**
**ப்ரதிஷ்டித நீனு நின்னானந்த$^{3}$ ப$^{3}$லாதி$^{3}$க$^{3}$ளல்லி**

அனைவருக்கும் பசு, செல்வம் ஆகியவற்றை கொடுப்பவனான 'ப்ரதிஷ்டிதனே' உனக்கு என் நமஸ்காரங்கள். என்றைக்கும், எங்கும் நீயே ஸ்வதந்த்ரன். ஆனந்தம், பலம் ஆகியவற்றில் நீயே ஸர்வோத்தமன்.

**334. ஸ்ரீ ஸ்கந்தா$^{3}$ய நம:**
**ப$^{4}$க்தரிகெ$^{3}$ ஸ்ரேஷ்ட ஸுக$^{2}$ப்ரத$^{3}$ 'ஸ்கந்த$^{3}$' நமோ எம்பெ$^{3}$**
**ஸ்கந்த$^{3}$னாத் ஸ்கந்த$^{3}$ எந்து$^{3}$ பூர்வாசார்யர வ்யாக்$^{2}$யானவு**
**ப$^{4}$க்தரிகெ$^{3}$ ஸுக$^{2}$வீவ நீனு ப$^{4}$க்தஹிம்ஸாதை$^{3}$த்யர**
**ஸ்கந்த$^{3}$ எந்த$^{3}$ரெ ஘ோஷண மாடு$^{3}$வியோ ப$^{4}$க்தரக்ஷ**

பக்தர்களுக்கு சிறந்ததான சுகத்தை தருபவனே 'ஸ்கந்தனே' உனக்கு என் நமஸ்காரங்கள். துஷ்டர்களை அழிப்பவன் ஆகையால் நீ ஸ்கந்தன் எனப்படுகிறாய். இதுவே பூர்வாசார்யரின் வ்யாக்யானம் ஆகும். பக்தர்களுக்கு சுகத்தை கொடுப்பவன் நீ. பக்தர்களை இம்சிக்கும் தைத்யர்களின் எதிரி என்றால், பக்தர்களை காப்பவன் என்று அர்த்தம். பக்த ரக்ஷகனே.

**335. ஸ்ரீ ஸ்கந்தத$^{4}$ராய நம:**
**ஶ்லாக்$^{3}$யஸுக$^{2}$ கொடு$^{3}$வந்த விதீ$^{4}$ஶாதி$^{3}$ ஸுரர்க$^{3}$ள**
**ரக்ஷகனு தா$^{4}$ரகனு நீ 'ஸ்கந்தத$^{4}$ர' நமஸ்தே**
**ஸ்கந்த$^{3}$ அஹ்வய கார்த்திகே$^{3}$யகா$^{3}$தா$^{3}$ரவாகி$^{3}$ருவி**
**ஸ்கந்த$^{3}$ன ஸௌந்த$^{3}$ர்யக்கு நீனே ஆதா$^{4}$ரவாகி$^{3}$ருவி**

தற்காலிக சுகங்களை கொடுக்கத்தக்க பிரம்மன் முதலான தேவர்களை காப்பவன் நீயே. ஸ்கந்ததரனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்கந்தன் எனப்படும் கார்த்திகேயனுக்கு ஆதாரமாக இருக்கிறாய். ஸ்கந்தனின் அழகுக்கும் நீயே காரணமாக இருக்கிறாய்.

**336. ஸ்ரீ து$^{3}$ர்யாய நம:**
**பி$^{3}$ட$^{3}$தெ$^{3}$ ஸர்வதே$^{3}$வ அக்ர$^{3}$தி$^{3}$ இஹ 'து$^{3}$ர்ய' நமோ**
**ஒடெ$^{3}$ய நின்ன ஹிந்தெ$^{3}$ ஸர்வரு ஸர்வராதா$^{4}$ர நீனு**
**பாண்ட$^{3}$வர்க$^{3}$ள யோக$^{3}$க்ஷேம வஹிஸி ஸாரத்$^{2}$யவ**
**மாடி$^{3}$ ஜய ஒத$^{3}$கி$^{3}$ஸிதி$^{3}$ முந்தெ$^{3}$ நீனு குளிது**

அனைத்து தேவர்களுக்கு உள்ளும் இருப்பவனே 'துர்யனே' உனக்கு என் நமஸ்காரங்கள். தலைவனே. உன் பின்னாலேயே அனைவரும் இருக்கிறார்கள். அனைவருக்கும் ஆதாரமானவன் நீயே. பாண்டவர்களின் நலனுக்காக நீ அவர்களுக்கு சாரதியாக இருந்து, போரில் வெற்றியை பெற்றுக் கொடுத்தாய்.

**337. ஸ்ரீ வரதா$^{3}$ய நம:**

**உத்தம ஜ்யோதிப்ரத3 ‘வரத3னே’ நமோ நினகெ3**
**ப4க்தவர்யரிகெ3 நின்னிச்செயிம் அபரோக்ஷஞான**
**யுக்தகாலதி3 ஸஸ்வரூபானந்த3விர்பா4வ யன்னு**
**வந்த மோக்ஷ ஸுக்ஞானாதி3 வரத3 ஸர்வோத்தம**

உத்தம ஞான ப்ரதனே. வரதனே உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்களுக்கு உன் இஷ்டப்படி அபரோக்ஷ ஞானத்தை அவர்களின் தக்க காலத்தில் கொடுப்பவனே. ஸ்வரூபானந்தத்தினை, மோட்ச சுக்ஞானத்தினை அளிப்பவனே. ஸர்வோத்தமனே.

**338. ஸ்ரீ வாயுவாஹனாய நம:**
**கு3ருக3ளொளிப்ப வாயுதே3வரிந்த3 உபதே3ஶ**
**அருஹுவ ஞானாதி3 கு3ணவான் ‘வாயுவாஹனனே’**
**ஶிரபா3கி3 நமோ எம்பெ3 ஶ்வாஸவாயுவாஹனனே**
**ஸ்ரீரமாயுக் நீனு வாயு அதிஷ்டானத3ல்லி த்4யேய**

குருகளின் அந்தர்யாமியாக இருக்கும் வாயுதேவரில் அந்தர்யாமியாக இருந்து உபதேசம் செய்பவனே. ஞானாதி குணங்களைக் கொண்டவனே ‘வாயுவாஹனனே’ உனக்கு என் நமஸ்காரங்கள். நீ ரமாதேவியுடன் இருக்கிறாய். வாயுவில் இருப்பவன் நீயே.

**339. ஸ்ரீ வாஸுதே3வாய நம:**
**ஆகாஶாதி3 த்3ரவ்யக3ளல்லி வ்யாபகனாகி3ருவி**
**ஸ்ரீகாந்த ‘வாஸுதே3வனே’ நமோ வஸுதே3வ புத்ர**
**ஏகாத்ம நீனு ஸர்வத3லி வாஸவாகி3ருவி**
**ஸுக்ரீடா3 லீலாதி3 சேஷ்டா விஶிஷ்டனு மாயாத4வ**

ஆகாயம் முதலான அனைத்து இடங்களிலும் நீ பரவியிருக்கிறாய். ஸ்ரீகாந்தனே. வாஸுதேவனே. உனக்கு என் நமஸ்காரங்கள். வஸுதேவ புத்ரனே ஸ்ரீகிருஷ்ணனே. ஏகாத்மனே. நீ அனைத்திலும் வசிக்கிறாய். லீலையினாலேயே அனைத்து செயல்களை நீ செய்கிறாய்.

**340. ஸ்ரீ ப்3ருஹத்பா4னவே நம:**
**ப்ராப்திஹேது ப்ரகாஶவாகி3ஹ உக்தமொத3லாத3**
**ஸ்தோத்ரவிஶேஷவந்த ‘ப்3ருஹத்பா4னு’ நமோ நினகெ3**
**நித்யதீப்தனு நீனு நினகெ3 ஸம தேஜஸ்ஸில்ல**
**ஆதி3த்யமண்ட3ல ஜ்யோதி நின்ன விபூ4தி ப்ரகாஶ**

(பக்தர்களால்) அடையத் தக்கவன்; ஒளிமயமானவன்; ஸ்தோத்திரங்களால் போற்றப்படுபவன்; ‘ப்ருஹத்பானு’ வே உனக்கு என் நமஸ்காரங்கள். எப்போதும்

ஒளிர்பவன் நீயே. உனக்கு சமமான தேஜஸ் கொண்டவர்கள் வேறு யாரும் இல்லை. ஆதித்ய மண்டலத்தில் இருக்கும் ஜ்யோதியானது உன்னுடைய விபூதி ரூபத்தின் ஒளியே ஆகும்.

**341. ஶ்ரீ ஆதி3தே3வாய நம:**
**உண்ணலிகெ யோக்3ய ஸோம ப்ராஸகனெ 'ஆதி3தே3வ'**
**நினகெ3 நமோ எம்பெ3 ப4கவந்த க்ரீடா3விலாஸ**
**நீனேவெ ஸர்வக்கு காரணீபூ4தனாகி3ஹி தே3வ**
**நின்ன லீலாக்2ய க்ரீடெ3யு ஸர்வஸ்ருஷ்ட்யாதி3 க்ரியெயு**

ஸாத்விகமான உணவினை ஏற்றுக் கொள்பவனே. ஆதிதேவனே உனக்கு என் நமஸ்காரங்கள். பகவந்தனே. உன் லீலைகளால் அனைத்து செயல்களையும் செய்பவனே. நீயே அனைத்திற்கும் காரணனாக இருக்கிறாய். ஸர்வ ஸ்ருஷ்டியாதி அனைத்து செயல்களும் உன் லீலைகளாலேயே நடக்கின்றன.

**342. ஶ்ரீ புரந்த3ராய நம:**
**த4ராத்3யுக3ள ஒக்3க3ட்டு ஸம்ப3ந்த4க்கெ விஷயனு**
**'புரந்த3ர' நமோ த்4யாவாப்ருதி2வி ஆத3ரகாரி**
**மூரு அஸுரபுரக3ளன்னு நாஶமாடி3ஸிதி 3**
**து3ர்க்ரஹாதி3 ப4யாவரணக3ளன்ன நீகி3ஸுவி**

ஜீவர்களின் சம்சார சம்பந்தத்திற்கு காரணனே, புரந்தரனே உனக்கு என் நமஸ்காரங்கள். மூன்று உலகங்களின் நலனுக்காக, மூன்று அசுர புரங்களை (த்ரிபுராஸுர) அழித்தவனே; துர்க்ரஹங்களால் வருவதான பயங்களை போக்குபவனே.

**343. ஶ்ரீ அஶோகாய நம:**
**ஶோக ரஹிதனு நீனு 'அஶோக' நமோ நினகெ3**
**ஶோக மோஹாதி3க3ள விரோதி4 ஸுக2ஸ்தா2ன பூர்ண**
**ஶுக்ரனெந்து ஶ்ரீ விஷ்ணோ நினகெ3 ஹெஸரு ப்ரஸித்3த4**
**ஶுக்ரனெந்த3ரெ ஶோகரஹித எந்து3 உபநிஷத் உக்த**

ஶோகங்கள் அற்றவன் நீ. அஶோகனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஶோக, மோகங்களின் எதிரியே; ஸுகஸ்தான பூர்ணனே; உனக்கு விஷ்ணு என்று பெயர். ஶோகரஹிதன் என்று உபநிஷத் உன்னை புகழ்கிறது.

**344. ஶ்ரீ தா4ரணாய நம:**
**ஜனனமரணாதி3 ஸம்ஸாரதி3ந்த3 ஸஜ்ஜனர**
**க4ன த3யாபூர்ண நீ தாரிஸுவி 'தா4ரண' நமோ**
**இன மண்ட3லவர்த்தி ஸுக2ஞான ஜ்யோதிர்மய நீ**
**இனகுலதி3 ப்ராது3ர்ப4விஸிதி3 ராமசந்த்3ர**

ஜனன, மரண என்னும் சம்சார சுழற்சியிலிருந்து ஸஜ்ஜனர்களை காப்பவன் நீ; தயாபூர்ணனே. அனைவரையும் நீ தரித்திருக்கிறாய். தாரணனே உனக்கு என் நமஸ்காரங்கள். சூரிய மண்டலத்தில் அந்தர்யாமியாக இருப்பவனே. ஸுகஞான ஸ்வரூபனே. ஜ்யோதிர்மயனே. சூரிய குலத்தில் நீ தோன்றினாய் ராமசந்திரனாக.

**345. ஸ்ரீ தாராய நம:**
**மது4க்ஷீர க்4ருதாதி3க3ளிந்த3 பூர்ணமாள்ப பூஜா**
**தி3க3ளிந்த3 ப்ராப்தனாகு3வி 'தாரனே' நமோ எம்பெ3**
**நீ தாரனு தாரகனாத்3த3ரிந்த3 ஸம்ஸாரப4ய**
**தி3ந்த3 தாரிஸி ஸஜ்ஜனரிகெ3 ப்ராப்தனாகு3வியோ**

தேன், பால், தயிர் ஆகியவற்றால் பூஜை செய்தால், அதன் மூலம் பக்தர்களுக்கு கிடைப்பவனே 'தாரனே' உனக்கு என் நமஸ்காரங்கள். நீ தாரகன் ஆகையால், ஸஜ்ஜனர்களுக்கு சம்சார பயத்தினை போக்கி அவரகளை காக்கிறாய்.

**346. ஸ்ரீ ஶௌராய நம:**
**ஸுக2ஸாத4ன ஸாது4 மஹத்யக்ஞ பூஜாதி3யலி**
**ஸுக2மய நீ லீலானந்த3 விஹாரமாள்பி 'ஶௌர'**
**பா3கி3 ஶிர நமோ எம்பெ3 ஸாது4 ஸாத4ன மாடி3ஸோ**
**லோகக்2யாத ஶௌரவம்ஶ ஆதா4ர கீர்த்தித3 நீனு**

ஸுகஸாதனமான யக்ஞ, பூஜை ஆகியவற்றில் நீ லீலானந்தத்தில் இருக்கிறாய். ஸுகமயனே. ஶௌரனே உனக்கு என் நமஸ்காரங்கள். மோட்சத்திற்கான சாதனைகளை செய்விப்பாயாக. உலகப் புகழ் பெற்ற சூர்ய வம்சத்தில் வந்த புகழ்பெற்றவன் நீயே.

**347. ஸ்ரீ ஶௌரயே நம:**
**ப4க்தியிம் மாள்ப யக்ஞபூஜாதி3க3ள க்3ரஹணார்த்த2**
**க3திமந்த வேத3ஸூசக 'ஶ' ஶப்த3வாச்யக3ளு**
**சதுரஶ்வக3ளிந்த3 யஜமானன க்3ருஹக்கெ நீ**
**ப3ந்து3 நில்லுவி 'ஶௌரி' நமோ நினகெ3 ஸாது4ப்ரிய**

பக்தியுடன் செய்வதான யக்ஞ, பூஜாதிகளை ஏற்றுக் கொள்பவனே; வேதத்தில் சொல்லப்பட்டுள்ள 'ஶ' ஶப்தத்தின் வாச்யனே. நான்கு குதிரைகளில் கட்டப்பட்ட ரதத்தில் நீ எஜமானனின் வீட்டிற்கு வந்து நிற்பாய். ஶௌரியெ உனக்கு என் நமஸ்காரங்கள். ஸாதுப்ரியனே.

**348. ஸ்ரீ ஜனேஶ்வராய நம:**
**க3வாதி3க3ள உத்பாத3கனு பரமைக ஈஶ**

**ஸ்ரீ வரனே நீனேவெ ஸ்வாமி நினகெ$^3$ இல்ல**
**தே$^3$வதே$^3$வோத்தம 'ஜனேஶ்வரனே' நமோ நினகெ$^3$**
**ஸர்வதா$^3$ மஹைஶ்வர்யபூர்ண ஸர்வோத்தமனே ஸ்ரீஶ**

பசு போன்ற மிருகங்களை படைப்பவனே; ஸர்வோத்தமனே; ஸ்ரீவரனே; நீயே ஸ்வாமி, உனக்கு மேல் வேறு யாரும் இல்லை. ஜனேஸ்வரனே உனக்கு என் நமஸ்காரங்கள். எப்போதும் மஹைஸ்வர்ய பூர்ணனே. ஸர்வோத்தமனே. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே.

**349. ஸ்ரீ அனுகூலாய நம:**
**தே$^3$வ நர மொத$^3$லாத$^3$ ஸர்வ ப்ராணிக$^3$ளந்தஸ்த$^2$**
**ஸ்ரீவரனே நீனு ஸர்வாந்தர் நியாமகனாத்$^3$த$^3$ரிம்**
**ஸர்வத்ர அனுகூல மாடி$^3$ மோதி$^3$ஸுவி 'அனுகூல'**
**ஆஹ்வயனே நமோ மஹைஶ்வர்ய உதா$^3$ரகருணி**

தேவ, நர என அனைத்து பிராணிகளிலும் அந்தர்யாமியாக இருப்பவனே, ஸ்ரீவரனே, நீ அனைவரின் நியாமகன் ஆகையால், அனைவரையும் சாதனைக்கான வழிகளை செய்து கொடுக்கிறாய். அனுகூலனே. உனக்கு என் நமஸ்காரங்கள். மிகச் சிறந்த செல்வங்களை கொண்டிருப்பவனே. கருணைக்கடலே.

**350. ஸ்ரீ ஶதாவர்தாய நம:**
**அபஸித்$^3$தா$^4$ந்தரத து$^3$ஷ்டஜன வர்ஜிதனாத$^3$**
**ஸ்ரீபதி 'ஶதாவர்தனே' நமோ ஶதமோத$^3$ ஸேவ்ய**
**ஸுபுண்ய அம்ருதாந்த$^4$ஸரிந்த$^3$ க்ரியா ப்ரவர்த்திஸெ**
**தப்பதெ$^3$ ஆ தத்வேஶரிகெ$^3$ அனுக்$^3$ரஹ மாடு$^3$வி**

அப ஸித்தாந்தங்களை பின்பற்றும் துஷ்ட ஜனர்களுக்கு கிடைக்காதவனே; ஸ்ரீபதியே, ஸதாவர்தனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஆனந்த மயனே. முக்தி யோக்யர்கள் மூலமாக செயல்களை செய்வித்து, தவறாமல் அவர்களுக்கு அருள்பவனே.

**351. ஸ்ரீ பத்$^3$மினே நம:**
**ப்ராத:கால மத்$^3$யான்ஹ த்ருதீய ஸவனத்ரயதி$^3$**
**ப$^4$க்தவிதி$^4$பூர்வ அர்ப்பித ஸோமாதி$^3$ தி$^3$வ்யவாத$^3$**
**விதி$^4$யுக்த பதா$^3$ர்த்த$^2$ பானாதி$^3$ரூபதி$^3$ கொள்ளுவி**
**'பத்$^3$மி' நமோ மோத$^3$மய விதி$^4$பித பூர்ணகாம**

காலையில், மதியத்தில், மாலையில் என மூன்று வேளைகளிலும், பக்தியுடன், விதிப்படி, அர்ப்பிக்கப்படும் ஸாத்விக பதார்த்தங்களை நீ, அதன் ரஸங்களை

ஏற்றுக்கொள்கிறாய். பத்மினே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஆனந்தமயனே. பிரம்மனின் தந்தையே. பூர்ணகாமனே.

**352. ஶ்ரீ பத்3ம நிபே4க்ஷணாய நம:**
**ஹிரண்யவர்ண நிப4காந்தியிந்த3 ஜ்வலிஸுவந்த2**
**ஶரீரவான் ‘பத்3மநிபே4க்ஷண’ நமோ நமோ எம்பெ3**
**அரவிந்த3வோலு ஈக்ஷணதிம் க்ருபெயிம் நோடெ3ன்ன**
**ப்ராக்ருத விலக்ஷண அனக4 ஞானைஶ்வர்ய பூர்ண**

தங்க மயமான அபாரமான ஒளியினால் ஒளிர்பவனே. பத்ம நிபேக்ஷணனே. உனக்கு என் நமஸ்காரங்கள். இதே நொடியில் என்னை கருணையுடன் பார்ப்பாயாக. அப்ராக்ருஷனே. அபாரமான ஞான ஐஸ்வர்ய பூர்ணனே.

**353. ஶ்ரீ பத்3மனாபாய நம:**
**ஸோமபான மாடு3வ ‘பத்3மனாப’ நமோ நினகெ3**
**கமல அரளிகெ1 மாள்ப பத்3மன: ஸூர்யனிகெ3**
**ஸ்வாமி நீ காந்தி கொடு3வந்த2வனு பத்3மனாப4**
**கமலனிப4 நாபி4வுள்ளவனு நீ பத்3மனாப4**

ஸ்வாக்ய ரஸத்தை ஏற்றுக் கொள்ளும் பத்மனாபனே உனக்கு என் நமஸ்காரங்கள். தாமரையை மலரச் செய்யும் சூரியனுக்கு ஸ்வாமி நீயே ஒளியை கொடுக்கிறாய், பத்மனாபனே. கமலம் இருப்பதான நாபி உள்ளவன்.

**354. ஶ்ரீ அரவிந்தா3க்ஷாய நம:**
**த்3ரவ்யப்ராப்தி ஒத3கி3ஸுவி ப4க3வான் புரோடா3ஶ**
**ஹவிஷ்ய ப்ரக்ஷேபக ஆஶ்ரய ‘அரவிந்தா3க்ஷனெ’**
**ஸர்வதா3 நமோ எம்பெ3 அக்ஞான திமிர களெயோ**
**ரவீந்த3ந்த4காரக்4ன அரவிந்தா3க்ஷ ஞானஜ்யோதி**

வேண்டிய திரவியங்களை பக்தர்களுக்கு அருள்பவனே. பகவானே. அரவிந்தாக்ஷனே உனக்கு என் நமஸ்காரங்கள். என் அஞ்ஞானத்தை களைவாயாக. பலமான அந்தகாரத்தினை அழிப்பவனே. ஞான ஜ்யோதி ஸ்வரூபம் கொண்டவனே.

**355. ஶ்ரீ பத்3மக3ர்பா4ய நம:**
**ப்ராணிக3ளு ஸர்வரனு க3ர்ப4தொ3ளு இட்டுகொண்ட3**
**அனக4 ‘பத்3மக3ர்ப4னே’ நமோ எம்பெ3 பாலகனு**
**தனு பி3ரம்மபுரத3ல்லி வேஶ்ம ஹ்ருத்பத்3மாந்தஸ்த2னு**
**அன்னத்தே ‘ஶ்ருதி தஹரம் புண்ட3ரீகம் வேஶ்ம’ எந்து3**

பிராணிகள் அனைவரையும் உதரத்தில் வைத்துக் கொண்ட பத்மகர்ப்பனே. உனக்கு என் நமஸ்காரங்கள். அனைவரையும் காப்பவனே. அனைவரின் இதயத்தில் வசிப்பவன். உன்னை ஸ்ருதிகள் 'புண்டரீகம் வேஶ்ம' என்று புகழ்கின்றன.

**356. ஸ்ரீ ஶரீரப்4ருதே நம:**
**ப4க்தஜீவ கீர்த்திஸுவ ஸ்தோத்ர ஸ்வீகரிஸுவியோ**
**ப4க்தவத்ஸல 'ஶரீரப்4ருத்' நமோ எம்பெ3 நினகெ3**
**ப4க்தியிந்த3 ப4ஜிஸுவவரன்ன போஷிஸுவி நீ**
**ஸதத ஸம்ரக்ஷிஸுவி ஶரீரதா4ரகனாகி3**

பக்தர்கள் சொல்லும் ஸ்தோத்திரங்களை நீ ஏற்றுக் கொள்கிறாய். பக்தவத்ஸலனே. ஶரீரப்ருத் உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தியுடன் பஜிப்பவர்களை காக்கிறாய் நீ எப்போதும் அவர்களின் சரீரத்தில் இருந்து கொண்டு காக்கிறாய்.

**357. ஸ்ரீ மஹர்த்3த4யே நம:**
**மஹாவித்3யா ப்ராப்திரூப ஸம்ருத்3தி4 மாடு3வி நீனு**
**'மஹர்த்3த4' நமோ ஹயக்ரீவ ஸ்ரீ ருஷப4 வேத3வ்யாஸ**
**மஹிதா3ஸ ஹம்ஸ ஸனத்குமார த3த்த கபில**
**மஹித த்ரயிமய த4ர்மமய தபோமயனு**

மிகச் சிறந்த கல்வி என்னும் செல்வத்தை கொடுக்கிறாய் 'மஹர்த்தயே' உனக்கு என் நமஸ்காரங்கள்.ஹயக்ரீவனே. ருஷபனே. வேதவ்யாஸனே. மஹிதாஸனே. ஹம்ஸனே. ஸனத்குமாரனே. தத்தனே. கபிலனே. மூன்று தாமங்களில் வசிப்பவனே. தர்மமயமானவனே. தபோமயமானவனே.

**358. ஸ்ரீ ருத்3தா4ய நம:**
**ஸகலாபீ4ஷ்டப்ரத3 மொத3லாத3 கு3ணஸம்ருத்3த4**
**ஸ்ரீகரனே 'ருத்3த4' நமோ ப3ஹுளௌதா3ர்ய கருணி**
**அகளங்க ப4க்தரு தே3வஶர்மகு3 ஸுதா4மகு3**
**நீ கேளித3ரெ ஸௌபா4க்3யவித்தி ப4க்தவத்ஸலனெ**

அனைத்து அபீஷ்டங்களையும் கொடுக்க வல்ல குணங்களை அபரிமிதமாகக் கொண்டவனே. ருத்தனே உனக்கு என் நமஸ்காரங்கள். மிகவும் அற்புத கருணை உள்ளம் கொண்டவனே. உன் அத்யந்த பக்தர்களான தேச ஷர்மாவிற்கும், ஸுதாமனுக்கும், நீ அபாரமாக உதவினாய். பக்தவத்ஸலனே.

**359. ஸ்ரீ வ்ருத்3தா4த்மனே நம:**
**த3யாளுத்வ மொத3லாத3 கு3ணவுள்ள பி3ரம்ம ஈஷா**
**நாத்3த3ரிந்த3 ஸேவ்யனாகி3ஹ 'வ்ருத்3தா4த்மா' நமோ எம்பெ3**
**தயௌதா3ர்யாதி3 கு3ண நின்னல்லி அக3ணிதவு நின்ன**

**ப்4ருத்யரலி ப்ரஜோதி3ஸுவி தத்தத்3த3யாதி3 கு3ண**

கருணை முதலான அனைத்து உள்ளங்களையும் கொண்டவனே, பிரம்மனுக்கும் தந்தையே, ஆகையால் அவராலும் வணங்கப்படுபவனே, 'வ்ருத்தாத்மனே' உனக்கு என் நமஸ்காரங்கள். கருணை முதலான பற்பல குணங்கள் உன்னில் எண்ணிக்கையில் எண்ண முடியாத அளவிற்கு உள்ளன. உன் பக்தர்களில் நீ இருந்து ஒளிர்கிறாய். உன்னுடைய நற்குணங்களால் அவர்களை காக்கிறாய்.

**360. ஸ்ரீ மஹாக்ஷாய நம:**
**தா3னஶீலவாகி3ருவ மன மொத3லாதி3ந்த்3ரிய**
**க4ன உதா3ரனே நினகி3வெ 'மஹாக்ஷ' நமஸ்துப்4யம்**
**ஏனெம்பெ3 நின்ன த3யாபூர்ண மஹா அக்ஷணிய**
**நின்ன கருணாத்3ருஷ்டி என்னமேலிரலி ஸதத**

கருணை நிறைந்த மனம் முதலான நற்குணங்களைக் கொண்டவனே 'மஹாக் ஷனே' உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னுடைய கருணையை நான் என்னவென்று சொல்லட்டும்?. உன்னுடைய கருணைப்பார்வை மிகவும் வலிமை வாய்ந்தது, அது என் மேல் எப்போதும் இருக்கட்டும்.

**361. ஸ்ரீ க3ருட3த்4வஜாய நம:**
**யுத்த3த3லி ஜயகோ4ஷ ஸின்ஹத்4வனி மொத3லாத3**
**ப்3ருஹத்4வனி சின்ஹவுள்ள 'க3ருட3த்4வஜ' நமஸ்துப்4யம்**
**எது3ர்யாரோ நில்லலிக்காக3ரோ வைனதேய த்4வஜ**
**ஸுதை4ர்ய ப3லஶீல ஜயஜயது ஜயஜய**

போரினில் ஜயகோஷம், ஸிம்ஹ த்வனி ஆகிய மிகச்சிறந்த சின்னங்களைக் கொண்ட கருடத்வஜனே உனக்கு என் நமஸ்காரங்கள். உனக்கு எதிராக யார்தான் நிற்க முடியும்?. கருடத்வஜனே, அபாரமான தைரியம், பலங்களைக் கொண்டவனே; உனக்கு வெற்றி உண்டாகட்டும்.

**362. ஸ்ரீ அதுலாய நம:**
**அஸத்3ருஶனாகி3ருவ 'அதுல' நமோ நினகெ3**
**ஸ்ரீஶ நினகெ3 ஸமரில்ல முக்தாமுக்தரல்லி**
**பி3ஸஜாஸன ஶி3வாதி3க3ளு ஸர்வப்ராணிக3ளு**
**கேஶவாதீ4னரெந்து3 ப்ரஸித்3த4 ஸதா3க3மத3ல்லி**

முதல்மையானவனாக இருக்கும் அதுலனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. உனக்கு சமம் என முக்த அமுக்த ஜீவர்களில்

யாரும் இல்லை. பிரம்ம சிவாதிகள், ஸர்வ பிராணிகள் என அனைத்தும் கேசவனின் அதீனம் என்று ஆகமத்தில் சொல்லப்பட்டுள்ளது.

**363. ஸ்ரீ ஶரபா4ய நம:**
**ஸோமரஸபு4க்ஞு நீனு 'ஶரப4னே' நமோ நினகெ3**
**ரமா ப்ரளயார்ணவதி3 ஜல வடபத்ரரூப**
**ஆ மஹாஜவத்து கோடியோஜன விஸ்தீர்ணத3லி**
**ரமாயுக் நீனு ப்ரஜ்வலிஸுவி ஆதி3 நாராயண**

ஸோம ரஸத்தை குடிப்பவன் நீயே ஶரபனே உனக்கு என் நமஸ்காரங்கள். பிரளய காலத்தில், ஸ்ரீரமாதேவி, ஜல மற்றும் வடபத்ர இலையில் ரூபத்தில் இருக்க, அந்த 50 கோடி யோஜனை பரப்பில் இருப்பதான கடலில் நீ ஸ்ரீரமாதேவியுடன் ஒளிர்கிறாய். ஆதி நாராயணனே.

**364. ஸ்ரீ பீ4மாய நம:**
**ஸர்வப்ராணிக3ளன்ன நியமனமாள்ப 'பீ4மனே'**
**ஸர்வதா3 நமோ ஸ்ரீஶ ஸ்ரீவேத3வ்யாஸ அவதார**
**ஸர்வதா3 ப4க்தஜன ப4யனாஶ மாள்பி ஶத்ருகெ3**
**ஸர்வதா3 ப4யக்ருத் ஶாஸ்த்ரோக்தி ப4யக்ருத் ப4ய நாஷன**

அனைத்து பிராணிகளையும் நியமனம் செய்பவனே பீமனே. உனக்கு என் நமஸ்காரங்கள். லட்சுமிதேவியின் தலைவனே. ஸ்ரீவேதவ்யாஸ அவதாரனே. எப்போதும் பக்த ஜனர்களின் பயங்களை பரிகரிப்பாயாக. எதிரிகளுக்கு எப்போதும் பயத்தினை கொடுப்பவனே. சாஸ்திரங்கள் சொல்வதைப் போல, நீயே பயக்ருத் மற்றும் பய நாஷனனாக இருக்கிறாய்.

**365. ஸ்ரீ ஸமயக்3ஞாய நம:**
**ஸாது4வஸ்து கொடு3வவ 'ஸமயக்3ஞ' நமோ எம்பெ3**
**ஸாது4 ப4க்தாபி4ஷ்ட யாவாக3 கொடு3வவவெந்த3ரிவி**
**யதா2ர்த்த2 வஸ்துஸ்தி2தி இத்தா3கெ3 மா ஸஹ அரிவி**
**ஶதவருஷ ஆயுஷ்யஞான ஸாத4ன கொடு3வி**

ஸாத்விக வஸ்துகளை கொடுப்பவனே ஸமயக்ஞனே உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்களின் அபீஷ்டங்களை எப்போது கொடுக்க வேண்டும் என்பதை நீ அறிவாய். அவர்களின் யோக்யதைகளையும் நீ அறிவாய். அதற்கேற்ப 100 ஆண்டுகளின் ஸாதன ஆயுளை நீ கொடுக்கிறாய்.

**366. ஸ்ரீ ஹவிர்ஹரியே நம:**
**ஆஹ்வான மாடு3வ ஸ்தோத்ர ஸுக2ஸாத4னவு எந்து3**
**நீ ஸ்வீகரிஸுவி 'ஹவிர்ஹரி' நமோ யக்ஞத3ல்லி**

**ஹவிஷ்ய பூஜாஸாத4ன விக்4ன தோ3ஷ களெது3 நீ**
**ஸர்வயக்ஞ பூஜாதி3க3ளு ஸ்தோத்ர ஸ்வீகரிஸுவி**

உன்னை அழைப்பதான, போற்றுவதான ஸ்தோத்திரங்களை, மோட்சத்திற்கான சாதனங்கள் என்று நீ ஏற்றுக் கொள்கிறாய். ஹரிஹரியே உனக்கு என் நமஸ்காரங்கள். யக்ஞங்களில் பூஜா சாதனங்களுக்கான தடை, தோஷங்களை களைந்து நீ அனைத்து பூஜா, யக்ஞங்கள் ஆகிய ஸ்தோத்திரங்களை ஏற்றுக் கொள்கிறாய்.

**367. ஸ்ரீ ஸர்வலட்சண லக்ஷண்யாய நம:**
**ஸர்வஜக3ஜ்ஜன்மாதி3 கர்த்ருத்வாதி3 நின்ன லக்ஷணா**
**தி3 விக்ஞானவுள்ள ஸஜ்ஜனர விஶேஷ ஆலோசன**
**க்ரிய விஷய ‘ஸர்வலக்ஷண லக்ஷண்யனே’ நமோ**
**‘அஜ ஶங்கராதி4பி4ர் வித1ர்க்யலிங்க3:’ பா4க3வத**

ஸர்வ ஜகத் ஜன்மாதி கர்த்ருத்வ முதலான உன்னுடைய குணங்களைப் பற்றிய விசேஷ ஞானம் உள்ள ஸஜ்ஜனர்களின் நலன்களை காப்பவனே. ஸர்வலக்ஷண லக்ஷண்யனே உனக்கு என் நமஸ்காரங்கள். பாகவதத்தில் கூறியபடி – பிரம்ம, ருத்ராதிகளால் கூட முழுமையாக அறியப்பட முடியாதவனே.

**368. ஸ்ரீ லட்சுமிபதே நம:**
**ஜய ஜய ஜய ஜயது இந்த2 ஜய ஶப்3தா3தி3**
**ஜயஶீல ஸம்பத்துவந்த ‘லட்சுமீவான்’ ரமாபதே**
**ஜயகோ4ஷதி3ந்த3 நமோ எம்பெ3 மஹைஶ்வர்யபூர்ண**
**தோயஜாக்ஷனெ நீ க்ருபெயிந்த3 நோள்பி ப4க்தரன்ன**

ஜயஜயஜய என்று இந்த ஜய என்னும் சொல்லினால் வெற்றிவாகை சூடியவனான, மிகச் சிறந்த செல்வந்தனான லட்சுமிவான் ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே உனக்கு ஜயகோஷம் போட்டு நமஸ்கரிக்கிறேன். மஹ ஐஸ்வர்ய பூர்ணனே. தாமரைக் கண்ணனே. நீ உன் பக்தர்களை கருணையுடன் காக்கிறாய்.

**369. ஸ்ரீ ஸமிதிஞ்சயாய நம:**
**அன்னதா4ன்யாதி3 வாஜாதி3 போ4ஜ்யவஸ்து ஸம்ருத்3த4னு**
**அனக4 ‘ஸமிதிஞ்சயனே’ நமோ பூர்ணகாமனே**
**நின்ன ப4க்தர க்லேஷ நாஶமாடு3வி ஶத்ருக3ள**
**நீனு ஜயிஸுவி ஸதா3 ஜயஜய ஜயஶீல**

அன்ன, தான்யம், செல்வம் ஆகியவற்றை அபாரமாக கொண்டிருப்பவனே. ஸமிதிஞ்சயனே. உனக்கு என் நமஸ்காரங்கள். பூர்ண காமனே. உன் பக்தர்களின்

துக்கங்களை நீ அழிக்கிறாய். எதிரிகளை நீ வெல்கிறாய். எப்போதும் உனக்கே வெற்றி கிடைக்கிறது.

**370. ஸ்ரீ விக்ஷராய நம:**
**அவினாஶி அக4தூ3ர விக3தக்ஷர 'விக்ஷர'**
**ஸர்வதா3 நமோ எம்பெ3 ப4க்தாபி4லாஷதா3தா**
**யாவ வித4 நாஶவு கொரதெயு பரிணாமாதி3யு**
**யாவ விகாரவு இல்லத3 ப3லபூர்ண லக்ஷ்மீஶ**

அழிவு இல்லாதவன், பக்தர்களின் துன்பங்களை தொலைப்பவன். விக்ஷரனே உனகு என் நமஸ்காரங்கள். பக்தர்கள் விரும்புவதை கொடுப்பவனே. எந்த விதமான அழிவும், குறைவும், வளர்ச்சியும் இல்லாத, மாற்றங்களே இல்லாத, பல பூர்ணனே, லட்சுமிதேவியின் தலைவனே.

**371. ஸ்ரீ ரோஹிதாய நம:**
**ரக்தவர்ணனெ 'ரோஹிதனெ' நமோ எம்பெ3 நினகெ3**
**அதிவிமல பத்மனாப4 லோஹித வர்ணனு**
**ப்ராக்ருதவிலக்ஷண ஸௌந்தர்யஸார ஸுரூபனு**
**வந்தே3வந்த்3ய ஸங்கர்ஷண நாராயண லக்ஷ்மீபதே**

சிவப்பு நிறம் கொண்டவனே; ரோஹிதனே உனக்கு என் நமஸ்காரங்கள். மிகவும் அழகியவனே; பத்மனாபனே, சிவப்பு நிறத்தவனே, ப்ராக்ருதத்திலிருந்து வேறுபட்டவனே. மிகவும் அற்புத அழகான ரூபம் கொண்டவனே. ஸங்கர்ஷணனே. நாராயணனே. லட்சுமிபதியே.

**372. ஸ்ரீ மார்க்3கா3ய நம:**
**தன்னய ஸ்வரூப ப்ராப்திமாடி3ஸுவ 'மார்க்க3' நமோ**
**ஆம்னாய ஸச்சாஸ்திர விசாரமாடி3ஸி அபரோக்ஷ**
**ஞானவித்து தருவாய மோக்ஷப்ராப்தி ஆகோ3மார்க்க3**
**வன்னு ஒத3கி3ஸுவி வ்யாஸ ஹயஶீர்ஷ கபில**

ஜீவனது ஸ்வரூபத்தை கிடைக்கச் செய்யும் மார்க்கனே உனக்கு என் நமஸ்காரங்கள். நற்சாஸ்திரங்களை அறிமுகம் செய்து, அபரோக்ஷத்தைப் பற்றிய ஞானம் அளித்து, பிறகு மோட்சத்தை அடையும் வழியை காட்டுகிறாய். வ்யாஸனே. ஹயவதனனே. கபிலனே

**373. ஸ்ரீ ஹேதவே நம:**
**து3ஷ்டஜன ஸம்ஹாரகாரண 'ஹேது' நமோ எம்பெ3**
**து3ஷ்டஜன ஸம்ஹார நின்ன ப3லானுக்ரஹ பி3ட்டு**
**எஷ்டே யத்னிஸித3ரு ஆக3து3 நின்ன ப3லவே ஹேது**

**கிருஷ்ணானுக்3ரஹ ப3லவே கௌரவர நாஶ ஹேது**

துஷ்டஜனர்களை கொல்பவனே. ஹேதுவே உனக்கு என் நமஸ்காரங்கள் உன்னுடைய அருள் இல்லாமல், கெட்டவர்களை அழிப்பது என்பது யாராலும் ஆகாது. கிருஷ்ணனான உன் அருள் இருந்ததாலேயே, கௌரவர்களின் நாசம் ஆனது.

**374. ஸ்ரீ தா3மோத3ராய நம:**
**ஶத்ருக3ளிகெ3 வ்யதெ2 ஈவ ஸர்வதிளித3 பி3ரம்மா**
**தி தே3வதாந்தர்யாமி 'தா3மோத3ர' நமோ நினகெ3**
**தா3மோத3ர ப்ரளயோத3 விஹாரியு தா3னஶீலர்கா3**
**னந்த ஈவ இந்தி3ரியஜித் முனிப4க்த ப்ரியஸேவ்ய**

எதிரிகளுக்கு பயத்தைக் கொடுப்பவனே. அனைத்தையும் அறிந்தவனான பிரம்மனின் அந்தர்யாமியாக இருப்பவனே. தாமோதரனே. உனக்கு என் நமஸ்காரங்கள். பிரளய காலத்தில் இருப்பவனே. தான ஷீலர்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவனே. இந்திரியங்களை அடக்கியவனே. முனிவர்களால், பக்தர்களால் வணங்கப்படுபவனே.

**375. ஸ்ரீ ஸஹாய நம:**
**யக்ஞ யஜமானன ஶத்ருக3ளவேக3 ஸஹிஸி**
**ஜயிஸி பாலிப 'ஸஹ' நமோ நீ ஸஹனஶீல**
**யக்ஞ பூஜாதி3மாள்பர ஶத்ருக3ளிஷ்டே ப3லவ**
**ப்ரயோகி3ஸித3ரு அதன்ன தடெ3க3ட்டுவி நீ வீர**

யக்ஞங்களை செய்யும் யஜமானனின் எதிரிகளை வேகமாக அழித்து, யஜமானனை காக்கும் 'ஸஹனே' உனக்கு என் நமஸ்காரங்கள். யக்ஞ, பூஜை ஆகியவற்றை செய்பவர்களின் எதிரிகள் எவ்வளவுதான் வலிமையை பயன்படுத்தினாலும், அதனை நீ தடை செய்கிறாய். வீரனே.

**376. ஸ்ரீ மஹித4ராய நம:**
**மஹிபூ4மி பூ4த4ரனு 'மஹீத4ர' நமோ எம்பெ3**
**மஹிபி3ரம்மாதி3க3ள தாரகாஶ்ரயாந்தர்க3தனு**
**மஹிபி3ரம்மாண்டா3தி3 ஸர்வாதா4ர மஹாகூர்ம விஷ்ணு**
**மஹாஞானவனு த்4யானஶீலர்க்கெ3 ஸுக2த3 ராம**

பூமியை தாங்கியிருப்பவனே. மஹீதரனே உனக்கு என் நமஸ்காரங்கள். லட்சுமி, பிரம்மாதி அனைவரின் அந்தர்கதனே. பிரம்மாண்டத்திற்கு ஸர்வ ஆதாரகன் நீயே. மஹாகூர்மனே. விஷ்ணுவே. தியானம் செய்பவர்களுக்கு மகா ஞானத்தை கொடுப்பவனே. ராமனே.

**377. ஸ்ரீ மஹாபா4கா3ய நம:**
**மாஹாத்ம்ய வர்ணிஸலஶக்ய அதிஶயவாகி3ஹ**

**‘மஹாபா⁴க³’ நமோ பூர்ண ஷட்கு³ணைஶ்வர்ய ப⁴க³வான்**
**மஹாபா⁴க³ ஸூர்யனொள் நீ மத்⁴யவர்த்தி நாராயண**
**மஹாபா⁴க³ ப்³ரம்மாதி³ தேஜஸ்வி அந்தர்க³தனு ஶ்ரீஶ**

உன்னுடைய மாஹாத்ம்ய ஞானத்தை யாராலும் வர்ணிக்க முடியாது. மஹாபாகனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஷட்குண ஐஸ்வர்ய பூர்ணனே. பகவானே. சூரியனில் நீ இருக்கிறாய். பிரம்மாதி அனைத்து தேவதைகளிலும் அந்தர்யாமியாக இருப்பவனே. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே.

**378. ஶ்ரீ வேக³வதே நம:**
**வேத மொத³லாத ஸதா³க³மோக்த கு³ணப்ரவாஹ**
**வந்த வேக³வான் நமோ க³ஜரக்ஷக வேக³வந்த**
**அதிவேக³வுள்ள ஹய வாஜி அர்வ அஶ்வ இந்த²**
**குது³ரெக³ளிகெ³ வேக³ கொடு³வவ ஹயக்³ரீவ**

வேதம் முதலான அனைத்து ஆகமங்களிலும் சொல்லப்பட்டுள்ள குண ப்ரவாகங்களை கொண்டவனே. வேகவான் உனக்கு என் நமஸ்காரங்கள். வேகமாக வந்து கஜேந்திரனை காத்தவனே. அதிகமான வேகத்தைக் கொண்ட குதிரைகளுக்கு வேகத்தை கொடுப்பவனே. ஹயக்ரீவனே.

**379. ஶ்ரீ அமிதாஶனாய நம:**
**விஶேஷக்ஞான ப்ராபக ‘அமிதாஶனனே’ நமோ**
**விஶேஷஞான பி³ம்பா³பரோக்ஷஞான கொடு³வி நீ**
**விஶேஷ விலக்ஷண ஶ்ரேஷ்ட அதிஶய ஆனந்த³**
**ஶாஶ்வததி³ அனுப⁴விஸுவவனு ஸுக²பூர்ண**

விஶேஷமான ஞானத்தை கொடுப்பவனே. அமிதாஶனனே உனக்கு என் நமஸ்காரங்கள். விஶேஷஞானத்தைக் கொடுத்து, பிம்ப அபரோக்ஷ ஞானத்தை நீ கொடுக்கிறாய். நீ அனைத்தையும் விட வேறுபட்டவன். ஸர்வோத்தமன். அதிஶய ஆனந்தத்தை அனுபவிப்பவன். ஸுகபூர்ணன் நீயே.

**380. ஶ்ரீ உத்³ப⁴வக்ஷோப⁴ணாய நம:**
**ஜன்மாதி³ க்லேஶ நாஶக ‘உத்³ப⁴வக்ஷோபண’ நமோ**
**அனிமித்தப⁴க்தி ஶ்ரவணாதி³ஜன்ய நிஶ்சித ஸத்**
**ஞானிகெ³ அபரோக்ஷவித்து ஶைவல ப்ரக்ருதிய**
**ப³ந்த⁴ நீகி³ஸி மோக்ஷவீவி க்லேஶ நாஶ ஸுக²தா³**

ஜன்ம, மரண ஆகிய துன்பங்களை போக்குபவனே. உத்பக்ஷோபணனே உனக்கு என் நமஸ்காரங்கள். எதையும் எதிர்பார்க்காமல், பக்தி, ஸ்ரவணாதிகளை செய்யும் ஸத்

ஞானிகளுக்கு அபரோக்ஷத்தை கொடுத்து, ப்ரக்ருதி பந்தனத்தை விலக்கி, மோட்சத்தை கொடுக்கிறாய். துன்பங்களை போக்கி, சுகத்தை கொடுப்பவனே.

**381. ஸ்ரீ தே3வாய நம:**
**கொடு3வி அபீ4ஷ்டக3ள 'தே3வ' நமோ நமோ எம்பெ3**
**கொடு3வ முக்2ய கர்த்ருத்வதி3ம் தே3 தா3த்ருத்வ லக்ஷண வ**
**ஶ்ரேஷ்டவரணீய அம்ருதத்வ தா3த்ருத்வ ஸ்வாமித்வ**
**இஷ்டத3க்ஞானஸுக2 க்ரீடா3வான் தே3வ ஸ்ரீபதியே**

அபீஷ்டங்களை நிறைவேற்றும் தேவனே. உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னுடைய முக்கிய கர்த்ருத்வத்தினாலேயே, அனைவருக்கும் நீ செய்ய வேண்டிய செயல்களை கொடுக்கிறாய். ஸர்வோத்தமனே. ஞானமய, சுகமயமானவனே. இவை அனைத்தையும் விளையாட்டினை போல செய்பவனே. தேவனே. ஸ்ரீபதியே.

**382. ஸ்ரீ க3ர்ப்பா4ய நம:**
**ஜக3ஸ்ருஷ்ட்யாதி3 நிர்வாண ப்ரேரண இந்தா2 ஞானத3**
**த்வத்3க3ர்ப்பா4தி3ட்டுகொண்டி3ஹ 'ஸ்ரீக3ர்ப்ப4' நமோ நினகெ3**
**பா4க3வத 'ஸது3த்3ப4வஸ்தா2ன நிரோத4 லீலயா**
**க்3ருஹீத ஶக்தித்ருதியாய' எந்தி3ஹுது3 ஸ்ரீக3ர்ப்ப4**

ஜகத் ஸ்ருஷ்ட்யாதி அனைத்து செயல்களையும் செய்பவனே. இத்தகைய ஞானத்தினை உன்னுடைய கர்ப்பத்தில் வைத்துக் கொண்டிருப்பவனே. ஸ்ரீகர்ப்பனே உனக்கு என் நமஸ்காரங்கள். பாகவதத்தினால் புகழப்படுபவனே. உன்னுடைய விளையாட்டினால் அனைத்தையும் செய்பவனே. இத்தகைய சக்தியினை கொண்டிருப்பவனே.

**383. ஸ்ரீ பரமேஶ்வராய நம:**
**பாரமார்த்தி2க ஜக3ஜ்ஜன்மாதி3 கர்தனாத3**
**'பரமேஶ்வரனே' நமோ ஸர்வேஶ்வர ஸர்வஸ்வாமி**
**ஸூரக்ஷிப ஸ்வதந்த்ர ஸ்வாமி 'ப' மத்து 'ரமேஶ்வர'**
**பரமேஶ்வர பரம எந்த3ரெ ஸர்வோத்தமனு ஈஶ்வரனு**

பாரமார்த்திக ஜகத்தினை ஜன்மாதி அனைத்து செயல்களை செய்பவனே. பரமேஶ்வரனே. ஸர்வேஶ்வரனே. ஸர்வ ஸ்வாமியே. அனைவரையும் காக்கும் ஸ்வதந்த்ரனே. ஸ்வாமியே. பரம என்றால் ஸர்வோத்தமன் என்று அர்த்தம். ஈஶ்வரனே.

**384. ஸ்ரீ கரணாய நம:**
**ஸூர்யாக்3னி தத்வேஶ மொத3லாத3 தே3வதெக3ளிகெ3**
**ஸக்ஞான கொடு3வந்த 'கரணம்' நமோ நமஸ்துப்4யம்**

**ஸ்ரீவ்யாஸ ஹம்ஸாதி3ரூப ஞானஸுக2 ப்ரகாஶவான்**
**தோயஜாஸனாதி3க3ளிகெ3 ஞானோபதே3ஶகனு**

சூரியன், அக்னி முதலான தத்வாபிமானி தேவதைகளுக்கு யதார்த்த ஞானத்தினை கொடுப்பவனான ‘கரணம்’ உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ரீவ்யாஸனே. ஹம்ஸாதி ரூபனே. ஞானஸுகங்களை பரிபூர்ணமாகக் கொண்டு ஒளிர்பவனே. பிரம்மன் முதலான அனைவருக்கும் ஞானத்தை உபதேசம் செய்பவனே.

**385. ஸ்ரீ காரணாய நம:**
**ஸவனத்ரய மந்த்ர ஶப்3த3க3ளிகெ3 ஆஶ்ரயனு**
**ஸ்ரீவரனெ ‘காரணம்’ நமோ நமோ நமஸ்துப்4யம்**
**காவகருணியெ ஶதோத்தர ஷோட3ஷ வருஷ**
**ஸவனத்ரய ஜக3தா3தி3 ஸர்வகாரண நீனே**

மூன்று வேளைகளிலும் சொல்லக்கூடிய மந்திரங்களுக்கு, அவற்றின் சப்தங்களால் வாச்யனே. ஸ்ரீவரனே. காரணனே உனக்கு என் நமஸ்காரங்கள். அனைவரையும் காக்கும் கருணியே. ஸ்தோத்திர ரூபனே. எப்போதும் இளமையுடன் கூடியவனே (பிறப்பு, இறப்பு, முதுமை ஆகியவை இல்லாதவனே). ஜகதாதி அனைத்திற்கும் நீயே காரணனாக இருக்கிறாய்.

**386. ஸ்ரீ கர்த்ரே நம:**
**ஸ்வதந்த்ர கர்த்ருத்வயத்தனாகி3ருவி ‘கர்தா’ நமோ**
**மோத3சின்மய நீனு ஆனந்தோ3த்3ரேக்த லீலெயிந்த3**
**கர்த்ரு நீ அபி4மான ப்ரயோஜன காமரஹித**
**ப்4ரமகாம அபி4மானியுக் ஜீவனகர்த நீனு**

ஸ்வதந்த்ர கர்த்ருத்வத்தை கொண்டிருக்கிறாய். கர்தனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஆனந்த ஸ்வரூபி நீ. மிகுந்த ஆனந்தமயனாகி, லீலையினாலேயே அனைத்தையும் நீ செய்கிறாய். வணங்குவதற்கு தக்கவனாக நீ இருக்கிறாய். எந்த செயல்களின் மேலும் எவ்வித ஆசையும் அற்றவன். ஜீவர்களுக்கு நீயே கர்தனாக இருக்கிறாய்.

**387. ஸ்ரீ விகர்த்ரே நம:**
**விஶேஷ ப3லதேஜஸ்கர்த ‘விகர்தா’ நமோ எம்பெ3**
**அஸ்வதந்த்ர ஜீவனந்தர்க3த நீனு தத்தத்யோக்3ய**
**மனஸ்ஸரிது விவிதா4க்ரியா மாடி3 மாடி3ஸுவி**
**லேஶவு வைஷம்ய நைர்க்4ருண்ய ஸ்வப்ரயோஜன இல்ல**

விசேஷமான வலிமை, தேஜஸ்களை கொண்ட விகர்தனே உனக்கு என் நமஸ்காரங்கள். அஸ்வதந்த்ரனான ஜீவனின் அந்தர்கதனாக இருப்பவன் நீயே.

ஜீவர்களின் யோக்யதைகளை அறிந்து, பற்பல செயல்களை செய்து, செய்விக்கிறாய். உன்னிடம் சிறிதளவும் வைஷம்ய தோஷம் இல்லை. மூன்று குணங்களுக்கும் அப்பாற்பட்டவன் நீ. நீ செய்யும் செயல்களால் உனக்கு எவ்வித பிரயோஜனமும் இல்லை.

**388. ஸ்ரீ க³ஹனாய நம:**
**'கோ³' குது³ரெ மொத³லாத³வ தேஜோவீர ப³லாதி³**
**ப்ராபகனு ஆஶ்ரயனு 'க³ஹன' நமோ நினகெ³**
**ஸுக²போ⁴க³ தேஜஸ் ஓஜஸ் ஆயதனனாகி³ருவி**
**கோ³க³ளு மொத³லாத³ ப்ராணிக³ளிகெ³ க்ஷேமதா⁴ம**

பசு, குதிரை ஆகியற்றின் வேகம், வீரம், வலிமை ஆகியவற்றை கொடுப்பவன் நீயே. கஹனனே. உனக்கு என் நமஸ்காரங்கள். சுகமயமானவனே. தேஜஸ், ஓஜஸ் ஆகியவற்றின் இருப்பிடமாக இருப்பவனே. பசுக்கள் முதலான பிராணிகளுக்கு ஆஸ்ரயன் நீயே

**389. ஸ்ரீ கு³ஹாய நம:**
**கு³ப்தவாகி³ருவந்த² 'கு³ஹ' நமோ நமோ நினகெ³**
**அந்தஸ்த²னாகி³த்³து³ காணதெ³ க்ருதி நடெ³ஸுவி**
**அதி⁴ஷ்டான ஸுர நரரு அரியத³ சர்யனு**
**'தே³ஹினாம் மந்த த்⁴ருவாய அனுபலப்⁴யனே'**

மறைந்திருப்பவனே குஹனே. உனக்கு என் நமஸ்காரங்கள். நீ யாருக்கும் ப்ரத்யட்சமாக தென்படாமல் இருந்து, செயல்களை செய்விக்கிறாய். தேவதைகள், ஜீவர்கள் அறியாத செயல்களை அருள்பவனே.

**390. ஸ்ரீ வ்யவஸாயாய நம:**
**புஷ்டப⁴வ மொத³லாத³ லோகபாலரு ஸர்வத³**
**உபஜீவ்ய விஷயக³ள நிஶ்சயாஶ்ரயனாத³**
**ஸ்ரீஶ 'வ்யவஸாய' நமோ அஸங்தி³த்த³ போஷகனே**
**காபாடு³வ நிஶ்சயாஶ்ரய ஶிம்ஶுமார நமஸ்தே**

பிரம்மன் முதலான அனைத்து தேவர்களுக்கும், எப்போதும் அனைத்து விஷயங்களுக்கும் ஆஸ்ரயன் ஆன ஸ்ரீலட்சுமி தேவியின் தலைவனே. வ்யவஸாயனே உனக்கு என் நமஸ்காரங்கள். அனைவரையும் காப்பவனே. ஶிம்ஶுமாரனே.

**391. ஸ்ரீ வ்யவஸ்தா²னாய நம:**
**இந்த்³ராதி³க³ளிகெ³ அவரவர ஸ்தா²னவிஷய**
**ஒத³கி³ஸி கொடு³வ 'வ்யவஸ்தா²ன' நமோ நினகெ³**

**பூ4ஸ்தி2தர ஜாக்3ரத் ஸ்வப்ன ஸுஷுப்த்யாதி3 அவஸ்தெ2க3ள**
**முத3லீலெயிம் நியமிஸுவி ஏகப3ஹுரூப**

இந்திரன் முதலான அனைவருக்கும் அவரவர்களின் ஸ்தானத்தை, செயல்களை ஏற்பாடு செய்து கொடுப்பவனே. வ்யவஸ்தானனே உனக்கு என் நமஸ்காரங்கள். தூக்கம், விழிப்பு, கனவு நிலைகளை நீ லீலையினால் நியமனம் செய்கிறாய். ஒரு ரூபத்தில் அனேக ரூபங்களைக் கொண்டவனே.

**392. ஶ்ரீ ஸம்ஸ்தா2னாய நம:**
**இந்தி3ரியாபி4மானி தே3வர்க3ளொளந்தர்க3தனாகி3**
**இத்3து3 ஆ ஆ தே3வதெக3ள நியமிஸி அவர்க3ளிம்**
**நியத க்ரியா மாடி3ஸுவ ‘ஸம்ஸ்தா2னனே’ நமோ**
**எந்து3 ப்3ருஹதா3ரண்யகதி3 ஶ்ருதி ப்ரஸித்3த3 ஈஶ**

இந்திரியாபிமானி தேவர்களில் அந்தர்கதனாக இருந்து, அந்தந்த தேவதைகளை நியமனம் செய்து, அவர்கள் மூலமாக நியத செயல்களை செய்து, செய்விக்கும் ஸம்ஸ்தானனே. உனக்கு என் நமஸ்காரங்கள். இவ்வாறு உன்னை ப்ருஹதாரண்யத்தில், மற்றும் ஶ்ருதிகளில் நீ புகழப்பட்டிருக்கிறாய். ஈஶனே.

**393. ஶ்ரீ ஸ்தா2னதா3ய நம:**
**வாகா3தி3 இந்தி3ரியாபி4மானி தே3வதெக3ள்கெ3 நின்ன**
**வக்த்ராதி3ஸ்தா2னக3ள கொட்டிருவி நீ ‘ஸ்தா2னத3’**
**பா3கி3 ஶிர நமோ எம்பெ3 நின்னிந்த்3ரியாது3த்பன்ன**
**ராகி3 ஆ ஆ நின்னிந்த்3ரிய ஆஶ்ரய ஹொந்து3திஹரு**

வாக் முதலான இந்திரியாபிமானி தேவதைகளுக்கு உன் தொண்டை (தாடை) முதலான இடங்களை கொடுத்திருக்கிறாய். நீயே ஸ்தானத. உன்னை நான் வணங்குகிறேன். உன் இந்திரியங்களிலிருந்து அவரவர்கள் உற்பத்தி அடைந்து, கடைசியில் அந்த இந்திரியங்களிலேயே அவர்கள் லயம் அடைகின்றனர்.

**394. ஶ்ரீ த்4ருவாய நம:**
**நிஶ்சலனாத3வ நீனு ‘த்4ருவனெந்தெ3னிபி’ நமோ**
**நீ சலிஸதெ3 ஸர்வதே3ஶகாலதி3 வ்யாபிஸிஹி**
**குஜல தேஜவாயு க2ம் மன அஹம் மஹதா3தி3**
**அசர அசரத3லி ஸ்தி2ரஸ்தா2யி ஸத்தாதி3தா3த**

சஞ்சலம் அற்றவன் நீ. த்ருவனே. நீ அனைத்து காலங்களிலும், வ்யாபித்திருக்கிறாய். தண்ணீர், நெருப்பு, வாயு, மஹதாதி அனைத்து இடங்களிலும் நீ வ்யாபித்திருக்கிறாய். அனைவருக்கும் ஸத் ஆகிய அனைத்தையும் அருள்கிறாய்.

**395. ஸ்ரீ பரார்த்3த4யே நம:**
**கோ3குது3ரெ மொத3லாது3வுக3ள ஸம்ருத்3தி4 ஈவி**
**ஸ்ரீகர 'பரார்த்3தி4' நமோ நமோ எம்பெ3 ஸதா3பூர்ண**
**பே3கா3த்3த3வக3ளனு கொட்டு வ்ருத்3தி4மாடி3ஸுவி நீ**
**அகி2ளேஷ மஹேஶ்வர்ய பூர்ண நீ ஸௌபா4க்3யதா3த**

பசு, குதிரை முதலானவற்றை உற்பத்தி செய்கிறாய். ஸ்ரீகரனே. பரர்த்திதனே உனக்கு என் நமஸ்காரங்கள். எப்போதும் பூர்ணமானவனே. அனைவருக்கும் தேவையானவற்றைக் கொடுத்து, அனைத்தையும் / அனைவரையும் நீ வளர்க்கிறாய். மஹைஶ்வர்ய பூர்ணனே. நீ அனைவருக்கும் நலன்களையே கொடுக்கிறாய்.

**396. ஸ்ரீ பரமாய நம:**
**ஜராதி3ரஹிதராகி3ஹ நின்ன ஸ்வரூப ஞான**
**இருவ நீ 'பரம' நமோ எம்பெ3 ஸதா3 தோ3ஷரஹித**
**த4ரணீதே3வி ஸம்பா4ஷிஸித கொரவஞ்சிரூப**
**ஜராயுத1வல்ல லோகவிட3ம்ப3ன சின்மாத்ரவு**

பிறப்பு, இறப்பு, முதுமை ஆகிய எதுவும் அற்றவனே. உன்னுடைய ஸ்வரூப ஞானத்தை கொண்டவனே. பரமனே. உனக்கு என் நமஸ்காரங்கள். எப்போதும் நீ தோஷ ரஹிதன். உன் திருமணத்திற்காக கொரவஞ்சி ரூபம் அணிந்து தரணிதேவியிடம் பேசியவனே.

**397. ஸ்ரீ ஸ்பஷ்டாய நம:**
**யக்3ஞதி3 அபி4வ்யக்தனாகு3வ 'ஸ்பஷ்ட' நமோ எம்பெ3**
**யக்ஞபூஜா ஸ்தோத்ர ஸவைராக்3ய ஞானயுக் ப4க்தி**
**சர்யக்கெ மெச்சி ஸ்வேச்செயலி வ்யக்தவாகு3வி மனு**
**யக்ஞ நாம ஈஶன்ன ஸ்துஸிஸெ ப3ந்து3 ரக்ஷிஸித3**

யக்ஞத்தினால் (நித்ய கர்மானுஷ்டங்களால்) மகிழ்ந்து அருள்பவனே. ஸ்பஷ்டனே உனக்கு என் நமஸ்காரங்கள். யக்ஞ, பூஜை, ஸ்தோத்திரம், சிறந்த வைராக்கியம், ஞானத்துடன் கூடிய பக்தி, ஆகிய இவற்றிற்கு மெச்சி, உன் இஷ்டப்படியே நீ பக்தனுக்கு தரிசனம் அளிப்பாய். ஸ்வாயம்புவ மனு, யக்ஞ நாமகனான உன்னை வணங்கியதால் நீ வந்து அவனை காத்தாய்.

**398. ஸ்ரீ துஷ்டாய நம:**
**ஸர்வதா3 ஆனந்த3 அனுப4வஶாலி 'துஷ்ட' நமோ**
**நிர்வ்யாஜ ப4க்தியலி ஸ்துதிஸி பூஜிதரல்லி**
**தே3வ நீ ஸந்தோஷனாகி3 அனுக்3ரஹ ஒத3கு3வி**
**ஸேவெ ப4க்திய மெச்சி ஹனுமகா3லிங்க3ன இத்தி**

எப்போதும் ஆனந்தத்தையே அனுபவிப்பவனே. துஷ்டனே உனக்கு என் நமஸ்காரங்கள். எந்த வித பலன்களையும் எதிர்பார்க்காமல் பக்தியுடன் உன்னை வணங்குபவர்களில் ஸ்வாமியே நீ மகிழ்ந்து அருள்கிறாய். ஹனுமந்தனுக்கு அவரின் இப்படிப்பட்ட பக்தியை மெச்சி, ஆலிங்கனத்தை (ஸஹபோகத்தை) அளித்தவனே.

**399. ஶ்ரீ புஷ்டாய நம:**

**ப3லாதி3க3ளிந்த3 பூர்ணஸ்வரூப நீ 'புஷ்ட' நமோ**
**ப3லானந்தா3தி3க3ள் புஷ்டி ஸர்வாவதாரதி3 ஸமா**
**ஜ்வலிஸுதி ஸூர்யமண்ட3ல மத்4யெ ஶ்ரீ நாராயண**
**ப3லமூர்த்தி வாயு ஸரஸ்வதியிந்த3 ஸம்ஸ்துத்யனு**

பலம் (வலிமை) ஆகியவற்றை பூர்ண ஸ்வரூபனாக இருப்பவனே. புஷ்டனே உனக்கு என் நமஸ்காரங்கள். பல, ஆனந்த ஆகியவற்றை முழுமையாகக் கொண்டவனே. அனைத்து அவதாரங்களிலும் சமமானவனே. சூர்ய மண்டலத்தின் நடுவில் இருந்து ஜொலிப்பவனே. ஸ்ரீ நாராயணனே. பிரம்மா, வாயு, சரஸ்வதி என அனைவராலும் வணங்கப்படுபவனே.

**400. ஶ்ரீ ஶுபே4க்ஷணாய நம:**

**தே3வாதி3க3ளல்லியு ப்ரதிஹதவாக3த3 ஆக்ஞெ**
**யாவாக3லுவுள்ள 'ஶுபே4க்ஷண' நமோ நமோ எம்பெ3**
**ஐஷ்வர்யஶீல கமலாயதேக்ஷண ஸுஶுப4தா3**
**ஸர்வஸௌபா4க்3ய ஆயுராரோக்3ய ப4க்த்யாதி3க3ளீவி**

அனைத்து தேவர்களிலும்கூட விட்டுவிடாமல் நீ இருந்து, அவர்களுக்கு ஆணையிடுகிறாய். ஶுபேக்ஷணனே உனக்கு என் நமஸ்காரங்கள். அபாரமான செல்வ சம்பத்தினை கொண்டிருப்பவனே. தாமரைக் கண்ணனே. அனைத்து நலன்களையும் அருள்பவனே. அனைத்து சௌபாக்கியங்களையும், ஆயுள், ஆரோக்யம் ஆகியவற்றை உன் பக்தர்களுக்கு நீ அருள்கிறாய்.

**கு3ருக3 மத்4வக3 ஸரஸிஜாஸனபித ஶ்ரீஶ**
**விரஜ கல்யாணதம ஸுகு3ணாப்3தி4 ஸர்வகர்த்த**
**'ஶ்ரீப்ரஸன்ன ஶ்ரீனிவாஸ' ஸஹஸ்ர நாமனே நமோ**
**நீ ரசிஸி நுடிஸித்3து3 அர்ப்பிதவு ப்ரீதனாகோ3 ||ப**

**|| ஐந்தாம் ஸந்தி முடிந்தது ||**
**||ஶ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து||**

***

**ஆறாம் ஸந்தி**

**கல்யாணதம ரூப அனக4 ஸுகு3ணார்ணவனெ**
**மாலக்ஷ்மிபதி பி3ரம்ம விஸ்வாக்2ய விஷ்ணு வஷட்கார**
**ஶீல ஜீவோத்தம வர வாயு பி3ரம்மதா4மன ஹ்ருத்**
**கீலாலஜாந்தஸ்ய பரமாத்ம கேஶவ நமஸ்தே ||ப**

**401. ஸ்ரீ ராமாய நம:**
**அமித ப3லரூபனெ 'ராம' நமோ நமோ எம்பெ3**
**ரமாதே3வி ஸீதாரமண ஸ்ரீராம ப4த்3ர பாஹி**
**அமல பூர்ணானந்த3 லோகரமண ராமசந்த்ர**
**ரமதீ ரமயதீ ஹனுமதா3தி3 ப4க்தஸேவ்ய**

எல்லையற்ற பல ரூபத்தைக் கொண்டவனே. ஸ்ரீராமனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ரமாதேவி, ஸீதாதேவியின் ரமணனே. ஸ்ரீராமபத்ரனே எங்களை அருள்வாயாக. களங்கமற்ற பூர்ணானந்தனே. உலகைக் காப்பவனே. ஸ்ரீராமசந்திரனே. ஸ்ரீலட்சுமிதேவி, பிரம்மன், வாயுதேவர் ஆகிய அனைத்து பக்தர்களாலும் வணங்கப்படுபவனே.

**402. ஸ்ரீ விராமாய நம:**
**ஶ்ரேஷ்ட அக்3ன்யாதி3 தே3வஸ்வாமியே 'விராம' நமோ**
**ஶ்ரேஷ்டதம ஸர்வக்ஞ ஸுக2பூர்ண அனக4 ரமா**
**ஆஶ்லிஷ்டனு நீ ப3லானந்த3 ஸக்ஞான பூர்ணராம**
**கட்டிஸி ஸேதுவ யுத்3த4 மாடி3 ராவணனன்ன கொந்தி3**

மிகச் சிறந்தவனே, ஸர்வோத்தமனே, ஸ்வாமியே. விராமனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஸர்வக்ஞனே. சுகபூர்ணனே. அழிவில்லாதவனே. ஸ்ரீரமாதேவியுடன் எப்போதும் இருப்பவனே. பல, ஆனந்த, சுக, ஞான பூர்ணனாக இருக்கிறாய். கடலில் ஸேதுவை கட்டி, ராவணனுடன் போர் புரிந்து, அவனை கொன்றாய்.

**403. ஸ்ரீ விரஜாய நம:**
**நிஷ்பாப நிர்தோ3ஷ 'விரஜ' நமோ நமோ நினகெ3**
**ப்ராக்ருத கு3ணத்ரயக3ளிந்3த நீனு நிஸ்ப்ருஹனு**
**ஸுபவித்ர விக்ஞான ஐஶ்வர்ய உத்தமத்வதி3 'வி'**
**ஸுபூர்ண ப3லானந்த3த்வ 'ர' அனக4த்வதி3ம் 'ஜ'**

பாவங்கள் அற்றவனே. தோஷங்கள் அற்றவனே. விரஜனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ப்ராக்ருத குணங்களான ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களுக்கு நீ அப்பாற்பட்டவன். பவித்ரமானவனே. யதார்த்த ஞானம் கொண்டவனே. அபாரமான செல்வங்களை கொண்டவனே ஸர்வோத்தமனே (ஆகையால் வி). பல, ஆனந்த ஆகியவற்றை முழுமையாகக் கொண்டவனே. (ஆகையால் ர). அழிவற்றவனே (ஆகையால் ஜ).

**404. ஸ்ரீ மார்க்கா3ய நம:**

**ப்ரதிபாத்3யனாகி3ருவி ஶோத்4யவேத3க3ளிம் 'மார்க்க3'**
**ஸதா3 நமோ ஜ்யோதிர்மய ஸுத3ர்ஶன சக்ரதா4ரி**
**மோத3ப3ல சித்3ரூப ஸிம்ஹவத் முக2ப்ரகட**
**ஸாது4ப4க்தஜன பால தே3வரிஷி ஸுரஸ்துத்ய**

அனைத்து வேதங்களால் நீ ப்ரதிபாத்யனாக இருக்கிறாய். ஜோதிர்மயனே. மார்க்கனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஸுதர்சன சக்ரத்தை தரித்தவனே. சித் ரூபனே. ஸிம்மத்தைப் போன்ற முகத்தைக் கொண்டு, உன் பக்தர்களை காப்பவனே. தேவர்கள், ரிஷிகள் என அனைவராலும் புகழப்படுபவனே.

**405. ஸ்ரீ நீயாய நம:**

**ஸாது4ப4க்த ஜனருக3ளிம் ப்ராப்தனாகு3வ 'நீனு'**
**ஸதா3 நமோ தே3வரிஷி மனுஷோத்தமாதி3 வந்த்3ய**
**முக்தி யோக்3ய ஸஜனர ஸமூஹக்கெ ஸாது4க்3ஞான**
**போ4தி4ஸி கைவல்யபத3 தோர்வ ஸ்ரீவாஸாதி3ரூப**

உன் பக்தர்களால் நீ அடையப்படுகிறாய். தேவர்கள், ரிஷிகள், மனுஷ்யோத்தமர்களால் நீ எப்போதும் வணங்கப்படுகிறாய். முக்தி யோக்யமான ஸஜ்ஜனர்களின் சமூகங்களுக்கு நீ யதார்த்தமான ஞானத்தை போதித்து, முக்திக்கான மார்க்கத்தை காட்டுகிறாய். லட்சுமிதேவி வசிக்கும் ரூபத்தைக் கொண்டவனே.

**406. ஸ்ரீ நயாய நம:**

**த்3ரவ்யத4ன ப்ராப்திமாள்ப ஔதா3ர்ய கு3ண நிதி4யே**
**'நய' நமோ வித்த ஞானப4க்தி ஆயுராரோக்3யதா3**
**த்3ரவ்யத4ன மதா3ந்த4னாக3தெ3 என்னிம் ஸத்ஸாத4ன**
**த3யதி3 மாடி3ஸி ப்ரீதனாகோ3 வாய்வந்தஸ்த2 ஸ்ரீஶ**

த்ரவிய, தனங்களை பக்தர்களுக்கு அருளும் கருணை உள்ளம் கொண்டவனே. நயனே. உனக்கு என் நமஸ்காரங்கள். நீ எனக்கு அருளும், ஞான, பக்தி, ஆயுள், ஆரோக்ய, த்ரவ்ய, தன ஆகியவற்றால் மதம் கொள்ளாமல், என் மூலமாக ஸத் ஸாதனங்களை செய்வித்து அருள்வாயாக. அதன் மூலம் நீ மகிழ்வாயாக. பாரதி ரமண முக்யபிராணாந்தர்கதனே. லட்சுமிதேவியின் தலைவனே.

**407. ஸ்ரீ அனயாய நம:**

**'அனயனெந்தெ3னிஸுவி' நீ சேஷ்டாப்ராபக நமோ**
**அன்யராரிந்த3லு சேஷ்டிதனல்ல நீனே ஸ்வதந்த்ரனு**
**அன எந்தெ3னிஸுவ வாயு நியம்யனு நின்னிந்த3**
**ஆனந்தோ3த்3ரேகதி3 மாடி3ஸுவி ஸர்வஜகச்சேஷ்டா**

அனைத்து செயல்களையும் செய்யத் தூண்டுபவனே. அனயனே. உனக்கு என் நமஸ்காரங்கள். வேறு யாராலும் நீ செலுத்தப்படுபவன் இல்லை. நீ ஸ்வதந்த்ரன். அன எனப்படும் வாயுவை நீ நியந்த்ரணம் செய்கிறாய். அனைவருக்கும் மகிழ்ச்சியை கொடுக்கிறாய். அனைத்து உலகத்தையும் நீயே நியமனம் செய்கிறாய்.

**408. ஸ்ரீ வீராய நம:**
**ஜக3த்ஸர்வவ காபாடு3வுத3ரல்லி ஸமரஹித**
**ஏகோத்தம நீ ‘வீர’ ஸ்ரீபதியே நமோ நினகெ3**
**ரக்கஸ பன்னக3 க3ருட3 தை3த்யவாரண ஸிம்ஹ**
**உக்3ரப3ல வீரராக4வ நாரஸிம்ஹ மாம் பாஹி**

உலகம் முழுவதையும் காப்பாற்றுவதில் உனக்கு சமம் என்று யாருமே இல்லை. வீரனே. ஸ்ரீபதியே. உனக்கு என் நமஸ்காரங்கள். அசுரர்களை அழிப்பவனே. ஶேஶ சயனனே. கருட வாகனனே. சிம்மத்தைப் போன்ற உக்ர பலத்தை கொண்டவனே. வீரராகவனே. நாரசிம்மனே. என்னை அருள்வாயாக.

**409. ஸ்ரீ ஶக்திமதாம் ஶ்ரேஷ்டாய நம:**
**ஸ்த2வனாதி3 ஶக்திமந்தரலி ஶ்ரேஷ்டதம நீனு**
**ஸர்வேஶ ‘ஶக்திமதாம் ஶ்ரேஷ்டனே’ நமோ நமஸ்துப்4யம்**
**ஸர்வஸச்சக்தி பூர்ண நீ ‘தத்ர தத்ர ஸ்தி2தோ விஷ்ணு:**
**ஶத்தச்சக்தி ப்ரபோ4த4யன்’ எந்து3 நிர்ணய இஹுது3**

ஸ்தோத்திரங்களில், மந்திரங்களில் போற்றப்படும் உத்தமன் நீயே. ஸர்வேஶனே. ஶக்திமதாம் ஶ்ரேஷ்டனே. உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்து நற்சக்திகளையும் கொண்டவன் நீயே. நிர்ணயத்தில் உன்னைப் பற்றி இவ்வாறு புகழப்பட்டுள்ளது.

**410. ஸ்ரீ த4ர்மாய நம:**
**த4ன ரத்னாதி3க3ளன்னு யஜமானனல்லி இட்டு**
**நீனு ஒத3கு3வி ‘த4ர்மனே’ நமோ எம்பெ3 நினகெ3**
**நீனேவெ ஸர்வதா4ரகனாகி3ருவுத3ரிம் த4ர்ம**
**நெந்தெ3னிபி மனன தா4ரண ஶீலக3ள ஒலிவி**

செல்வம், ரத்னம் ஆகியவற்றை உன் பக்தர்களுக்கு அருளி நீ அருள்கிறாய். தர்மனே. உனக்கு என் நமஸ்காரங்கள். நீயே ஸர்வ ஆதாரகனாக இருக்கிறாய். ஆகையால் தர்ம எனப்படுகிறாய். நினைவுத் திறனை, புகழினை நீ அருள்கிறாய்.

**411. ஸ்ரீ த4ர்மவிவே நம:**
**ப3ஹுப3ஹு அபீ4ஷ்டவ ஒத3கி3ஸுவி த4ர்மவித்**
**அஹர்னிஶி நமோ நினகெ3 உதா3ர ஸ்ரீநிதி4யே**
**மஹார்ஹ நீ ஸர்வவேத3 த4ர்மபூர்ண திளித3வ**

**மஹாப4க்த த4ர்மசாரிகொ3லிது3 த4ர்ஶனவீவி**

பற்பல அபீஷ்டங்களை உன் பக்தர்களுக்கு எப்போதும் அருள்பவனே, தர்மவித் - உனக்கு என் நமஸ்காரங்கள். கருணாபூர்ணமான ஸ்ரீநிதியே. சிறந்தவனே. அனைத்து வேதங்களையும், தர்மங்களையும் முழுமையாக அறிந்தவனே. உன்னுடைய சிறந்த பக்தனுக்கு, தர்மங்களை சரியாக பின்பற்றுபவனுக்கு நீ தரிசனம் அளிப்பாய்.

**412. ஸ்ரீ உத்தமாய நம:**
**உத்க்ருஷ்டதமனாத்3த4ரிந்த3 ‘உத்தமனு’ எந்தெ3னிபி**
**முகி3து3 கர நமோ எம்பெ3 ஸ்ரீகர நாராயண**
**ஶக்ராதி3கு3த்தமனு ஶிவ ஶிவகு3த்தம வாயு**
**வாயுகு3த்தம ஸ்ரீ ஸ்ரீபதிகெ3 உத்தமரு இல்ல**

அனைத்திலும் சிறந்தவன் ஆகையால், உத்தமன் என்று அழைக்கப்படுகிறாய். கைகளை வணங்கி உன்னை நமஸ்காரம் செய்கிறேன். ஸ்ரீகர நாராயணனே. இந்திரனுக்கு உத்தமன் சிவன். சிவனுக்கு உத்தமன் வாயு. வாயுவிற்கு உத்தமள் ஸ்ரீ. ஆனால், ஸ்ரீபதியைவிட உத்தமர் என்று யாரும் இல்லை.

**413. ஸ்ரீ வைகுண்டா2ய நம:**
**யாவ ப்ரகாரத3லு விக்4னப்ரதிப3ந்த4கக3ளு**
**யாவாக3லு எல்லு இல்லத3 க3தி உள்ளவ நீனு**
**ஸ்ரீவரனே ‘வைகுண்ட2னே’ நமோ நினகெ3 விகுண்ட2**
**தே3விஸுத நிர்தோ3ஷ நித்ய ஆனந்த3 நிலயனு**

எந்த வழியிலும், எவ்விதமான தடைகளும், பிரச்னைகளும் எப்போதும் வராதவன் நீ. ஸ்ரீவரனே. வைகுண்டனே. உனக்கு என் நமஸ்காரங்கள். விகுண்ட என்னும் தேவியின் மகனே. நிர்தோஷனே. நித்யானந்த நிலயனே.

**414. ஸ்ரீ புருஷாய நம:**
**ஸோமரஸ ப3ஹுவாகி3 அர்ப்பிதவ ஹொந்து3வவ**
**ஸ்ரீ மனோஹர ‘புருஷ’ நமோ ஸம்பூர்ண ஐஶ்வர்ய**
**க்ஷேமபாத்ருத்வதி3 ‘பு’ ஆனந்த பூர்ணவத்வதி3 ‘ரு’**
**ஷட்3மஹா ஐஶ்வர்யத்வதி3 ‘ஷ’ எந்து3 நீ பிரஸித்3த4**

ஸோமரஸங்களை அதிகமாக சமர்ப்பிப்பவனால் நீ அடையப்படுகிறாய். ஸ்ரீமனோகரனே. புருஷனே. உனக்கு என் நமஸ்காரங்கள். முழுமையான செல்வங்களை கொண்டவன் ஆகையால் ‘பு’ . ஆனந்த பூர்ணமாக இருப்பதால் ‘ரு’ . ஆறு வகையாக செல்வங்களை கொண்டவன் ஆகையால் ‘ஷ’ ஆகவே புருஷ என்று பெயர் பெற்றாய்.

**415. ஶ்ரீ ப்ராணாய நம:**

**ஶத்ருப்ராண அபஹர மாடு3வியோ 'ப்ராண' நமோ**
**ஸூத்ராத நீனெந்து3 ருத்3ராதி3 தே3வர்க3ளு பே3ட3லு**
**க்ஷிப்ரத3லேவெ ஶத்ருப்ராணக3ளன்ன கொள்ளுவி நீ**
**முக்தாமுக்தர ப்ரக்ருஷ்ட சேஷ்டகனு ப்ராண நாம**

எதிரிகளின் பிராணனை நீ அழிக்கிறாய். ப்ராணனே உனக்கு என் நமஸ்காரங்கள். எதிரிகளை அழிக்க முடியாத ருத்ர முதலான தேவர்கள், உன்னை வேண்டிக் கொள்ள, நொடிப் பொழுதிலேயே, எதிரிகளின் பிராணங்களை நீ அழிக்கிறாய். முக்தாமுக்தர்களின் செயல்களை நீயே உள்ளிருந்து செய்விக்கிறாய். ப்ராண நாமகனே.

**416. ஶ்ரீப்ராணதா3ய நம:**

**விவித3வாகி3ஹ ஜன்ம நிவாரக 'ப்ராணத3னே'**
**ஸர்வதா3 நமோ நினகெ3 ஶோகாதி3 கஷ்டனாஶகனே**
**ஸர்வதா3 ஸம்பூர்ண ஞான ஆனந்தா3தி3 ப்ரக்ருஷ்ட நீ**
**ஸர்வப4க்தருக3ளிகெ3 ப்ராணகொட்டு ஸந்தெயிஸுவி**

பற்பல வகையிலான பிராணங்களை நிவாரணம் செய்பவனான ப்ராணதனே. உனக்கு எப்போதும் என் நமஸ்காரங்கள். அனைத்து வித கஷ்டங்களையும் பரிகரிப்பவனே. எப்போதும் முழுமையான ஞான, ஆனந்தாதி செல்வங்களைக் கொண்டவனே. அனைத்து பக்தர்களுக்கும் ப்ராணனைக் கொடுத்து நீயே அருள்கிறாய்.

**417. ஶ்ரீ ப்ரணவாய நம:**

**ப்ரக்ருஷ்ட ப3லானந்தோ3த்பாத3கனே 'ப்ரணவ' நமோ**
**ப்ரக்ருஷ்டத்வதி3ம் 'ப்ர' ஸுக2ப3லசேஷ்டகத்வதி3ம் 'ண'**
**உத்க்ருஷ்ட நிர்தோ3ஷ ஞானபூர்ணத்வதி3ந்த3லி 'வ'**
**ஈ ரீதி அஶேஷ கு3ணதா4ர ப்ரணவனு ஶ்ரீஶ**

மிகச் சிறந்த வலிமை, ஆனந்தம் ஆகியவற்றை உருவாக்குபவனே. ப்ரணவனே உனக்கு என் நமஸ்காரங்கள். மிகச் சிறந்தவன் ஆகவே 'ப்ர'. சுக, வலிமை ஆகியவற்றை கொண்டிருப்பவன் ஆகவே 'ண'. மிகச்சிறந்த, தோஷங்கள் அற்ற, ஞானத்தை முழுமையாக கொண்டிருப்பதால் 'வ' – இவ்வாறாக அனேக குணங்களைக் கொண்டிருப்பவனே. லட்சுமிதேவியின் தலைவனே.

**418. ஶ்ரீ ப்ருத2வே நம:**

**ப4க்த அர்பித ஹவிஸ்ஸலி ப்ரஸன்ன மன**
**ஸந்த்ருப்த 'ப்ருது' நமோ ஈ ஸ்தோத்ர ஸ்வீகரிஸோ நீனு**
**ப4க்தக்ருத த்வத்ப்ரிய ஸ்துதி பூஜா யக்ஞ ஹவிஸ்**
**ஹிததி3 நீ கொண்டொ3லிவி ப்ரக்2யாத கருணாம்பு3தே4**

பக்தர்களின் சமர்ப்பிக்கும் ஹவிஸ்ஸினை மிகவும் மகிழ்ந்து ஏற்றுக் கொள்பவனே. ப்ருதுவே உனக்கு என் நமஸ்காரங்கள். இந்த ஸ்தோத்திரத்தினையும் ஏற்றுக் கொள்வாயாக. பக்தர்களால் செய்யப்படும் ஸ்துதி, பூஜை, யக்ஞ, ஹவிஸ் ஆகியவற்றை மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்கிறாய். புகழ் பெற்றவனே. கருணைக்கடலே.

**419. ஶ்ரீ ஹிரண்யக3ர்ப்பா4ய நம:**
**ஹிதரூப மொத3லாத3 விஷயக3ள க்3ரஹிப**
**நேத்ராதீ3ந்த்3ரியதா3த 'ஹிரண்யக3ர்ப்ப4னே' நமோ எம்பெ3**
**ஜாதரூபாத்மகவு பி3ரம்மாண்டக3ர்ப4னு நீனு**
**ஹிதகர ஸூரமணீய ஸௌந்தர்யஸார சார்வாங்க3**

அனைத்து நல்ல விஷயங்களையும் கிரகிக்கும் கண் முதலான இந்திரியங்களின் தந்தையே ஹிரண்யகர்ப்பனே உனக்கு என் நமஸ்காரங்கள். இந்த பிரம்மாண்டத்தை உன் கர்ப்பத்தில் (உதரத்தில்) வைத்திருப்பவன் நீ. அனைவருக்கும் நலன்களை கொடுப்பவனே. அழகான உருவம் கொண்டவனே.

**420. ஶ்ரீ ஶத்ருக்4னாய நம:**
**ஶ்ரேயஸ்ஸாத3னவாகி3 உபயோக3 மாட3லு அர்ஹ**
**த்3ரவ்யாதி3க3ளொத3கி3ஸுவ 'ஶத்ருக்4ன' நமோ எம்பெ3**
**தோயஜாக்ஷ ஶத்ருக்4ன தா3ரித்3ராதி3 நாஶகனெ**
**காயீந்த்3ரிய தோ3ஷ பரிஹரிஸி ஸாத4னகெ3யிஸோ**

பயன்படுத்த தகுதியான சிறந்ததான திரவியங்களை அருள்பவனே. ஶத்ருக்னனே உனக்கு என் நமஸ்காரங்கள். சூரிய கிரணங்களைப் போல கஷ்டங்களை பரிகரிப்பவனே. தேகத்தின் தோஷங்களை பரிகாரம் செய்து, ஸாதனைகளை செய்விப்பாயாக.

**421. ஶ்ரீ வ்யாப்தாய நம:**
**வ்யாப்தனாகி3ருவி ஜக3த்3ரக்ஷணெ மாட3லிகெ நீ**
**'வ்யாப்தனெம்ப3' நாமதி3 கரெஸிகொம்பி3 விஷ்ணோ நமோ**
**வ்யாப்தனாகி3ருவி ஜக3த்3தா4ரண மாட3லிக்காகி3**
**ஆப்தகாம நிரபேக்ஷ நிர்லிப்த அவிகாரனு**

உலகினை காப்பவனே. அனைத்து இடங்களிலும் நீ வ்யாப்தனாக இருக்கிறாய். வ்யாப்தன் என்று அழைக்கப்படுகிறாய். விஷ்ணுவே உனக்கு என் நமஸ்காரங்கள். உலகை காப்பதற்காக நீ இருக்கிறாய். எதையும் எதிர்பார்க்காதவன். விலகியிருப்பவன். எவ்வித தேக மாற்றங்களும் இல்லாதவன்.

**422. ஸ்ரீ வாயுவே நம:**
**ஜக3த்3ம்ஸ்தி2தனாகி3 ஆனந்த3 ஒத3கி3ஸுவி**
**ஜக3த்ரக்ஷண மாள்ப 'வாயு' நமோ நமோ நினகெ3**
**அக3ம்ய ஸ்ரேஷ்டப3ல ஞானாதி3 கு3ண நிதி4யே நீ**
**ஜக3த்ராண மோக்ஷப்ரத3 பிரப4ஞ்சனாந்தஸ்த2 ஸ்ரீஶ**

அனைத்து இடங்களிலும் வ்யாபித்து, மகிழ்ச்சியை கொடுக்கிறாய். உலகை காப்பவனே. வாயுவே உனக்கு என் நமஸ்காரங்கள். எல்லையற்ற சிறந்த வலிமைகளை, ஞானாதி குணங்களைக் கொண்டவனே. நீயே மோட்சத்தை அருள்பவன். பிரபஞ்சத்தில் நிறைந்திருப்பவன். லட்சுமிதேவியின் தலைவன்.

**423. ஸ்ரீ அதோ4க்ஷஜாய நம:**
**ப4க்ஷனீய ஜக3த்தன்னு அத4:ஸ்தா2பன மாள்பி நீ**
**அக்ஷரனு அன்னாதி3 ஜயஶீல ஸ்ரீ 'அதோ4க்ஷஜ'**
**ரக்ஷிஸுதி ஸர்வதா3 நமோ எம்பெ3 க்ருதக்3ஞதெயிம்**
**அக்ஷய ஸஞ்ஞாத்யகி2ள கு3ணநிதி4 அனக4**

பிரளய காலத்தில் உண்ட இந்த உலகினை, நீ மறுபடி அதே இடத்தில் ஸ்தாபனை செய்கிறாய். அக்ஷரனே. அன்னாதி அனைத்து செல்வங்களையும் அருள்பவனே. அதோக்ஷஜனே. அனைவரையும் நீ காக்கிறாய். உனக்கு என் நன்றியுடன் கூடிய நமஸ்காரங்கள். எல்லையற்ற சுக்ஞானத்தின் குணநிதியே.

**424. ஸ்ரீ ருதவே நம:**
**அன்ய ப்ரேரக புருஷ யாரு இல்லவு எம்பு3வ**
**ஞானக்கெ விஷயவாகு3வ நீ 'ருது' நமஸ்துப்4யம்**
**ஞானிக3ள மோக்ஷ ஸாத4னத்வதி3ம் ருது எம்போ3து3**
**நீனே ஸ்வதந்த்ர ஸர்வவஶியு ஞானதா3 ஸர்வக்ஞ**

உன்னை ப்ரேரணை செய்பவர்கள் யாரும் இல்லை. இத்தகைய ஞானத்திற்கு நீயே விஷயமாக இருக்கிறாய். ருதுவே உனக்கு என் நமஸ்காரங்கள். ஞானிகளின் மோட்ச சாதனத்திற்கு காரணனே. ஸ்வதந்த்ரனே. ஸர்வ ஞானத்தைக் கொண்டவனே. ஸர்வக்ஞனே.

**425. ஸ்ரீ ஸுத3ர்ஷனாய நம:**
**உத்தம ஞானத3 யோக்3யாதி4காரிகெ3 ஈவவ நீனு**
**'ஸுத3ர்ஶன' நமோ ஸுஷ்டப்ரிய த4ர்ஶனனு நீனு**
**ஸுத3ர்ஶன ஶோப4ன த3ர்ஶன சக்ர அஸிதா4ரி**
**த3த்த கபில நரஸிம்ஹ ஹயாஸ்ய வ்யாஸ ஸ்ரீஶ**

யோக்ய அதிகாரிகளுக்கு உத்தம ஞானத்தை அளிப்பவனே. ஸுதர்ஶனனே. உனக்கு என் நமஸ்காரங்கள். மிகவும் விரும்பி தரிசனம் பெற வேண்டிய விஷயம் நீ. சுதர்சன சக்கரத்தை கொண்டவனே. தத்தனே. கபிலனே. நரசிம்மனே. ஹயவதனனே. வ்யாஸனே. லட்சுமிதேவியின் தலைவனே.

**426. ஸ்ரீ காலாய நம:**
**அப4க்தருக3ள த4ன அஶ்வ மொத3லாகி3ருவ**
**ஸம்பத்து ச்சேதிஸுவவனு 'கால' நமோ நினகெ3**
**நீ ப3ந்தி4ஸுவி ச்சேதி3ஸுவி து3ஷ்டர ஞான ஸம்பத்**
**நீ ப4க்தரிகெ3 ஞான ஸுக2வன்னு ஈவி த3யதி3**

உன்னை வணங்காதவர்களை (எதிரிகளை) அவர்களின் குதிரை, ஆகிய அனைத்து செல்வங்களையும் அழிப்பவனே. காலனே. உனக்கு என் நமஸ்காரங்கள். துஷ்டர்களின் ஞான, செல்வங்களை நீ அழிக்கிறாய். பக்தர்களுக்கு ஞான, சுகங்களை அளிக்கிறாய்.

**427. ஸ்ரீ பரமேஷ்டி2னே நம:**
**நின்ன ப4க்தரு ஞானிக3ள மனெக3ளல்லிருவி**
**ஞான ப4க்தியுத த3த்4யாதி3க3ளன்னு ஸ்வீகரிஸெ**
**ஞான ப4க்தர ஹ்ருத3யத3ல்லி தத் ஆகாரத3லி**
**நீனித்3து3 ஸ்வீகரிஸுவி 'பரமேஷ்டி2' நமோ எம்பெ3**

உன்னுடைய பக்தர்களின் ஞானிகளின் வீடுகளில் நீ இருக்கிறாய். ஞான, பக்தி உடன் சமர்ப்பிக்கப்பட்ட பால் போன்ற நைவேத்தியங்களை ஏற்றுக் கொள்கிறாய். அத்தகைய ஞானத்தை கொண்டவர்களான பக்தர்களின் இதயத்தில், அந்த ஆகாரத்தில் நீ இருந்து, அதனை ஏற்றுக் கொள்கிறாய். பரமேஷ்டியே. உனக்கு என் நமஸ்காரங்கள்.

**428. ஸ்ரீ பரிக்3ரஹாய நம:**
**நின்ன ப4க்தருக3ளன்னு மாத்ர நீ ஸ்வீகரிஸுவி**
**க4ன த3யாளுவே 'பரிக்3ரஹனே' நமோ நினகெ3**
**நின்ன ஸ்வாமித்வாதி3 மஹாத்ம்ய அரிது நிரந்தர**
**மன முட்டி ப4ஜிஸுவவரிகெ3 மாத்ர காணுவி**

உன் பக்தர்களை மட்டும் நீ அருள்கிறாய். அபாரமான தயாளுவே. பரிக்ரஹனே உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னுடைய ஸர்வோத்தமத்வத்தை அறிந்து மகிமைகளை அறிந்து நிரந்தரமாக உன்னை வணங்குபவர்களை மட்டும் நீ பார்க்கிறாய்.

**429. ஸ்ரீ உக்3ராய நம:**
**ப4க்தர ஸுவாக்யக3ள ஸ்தோத்ரக3ள மேலனகெ**

**ஸுஸ்தா2ன ரூபனாகி3ஹ 'உக்3ர' நமோ நமோ எம்பெ3**
**ப4க்தரலி உச்சராகி3ஹ பி3ரம்ம ஈஷானாத்3யர்கெ3**
**முத3வீவி உக்3ர நமோ உத்தமானந்த3மயனே**

பக்தர்களின் பிரார்த்தனைகளின், ஸ்தோத்திரங்களின் ரூபமாக இருப்பவனே உக்ரனே உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்களில் சிறந்தவர்களான பிரம்ம, ருத்ரர்களுக்கு நீ மகிழ்ச்சியை கொடுக்கிறாய். உக்ரனே. மிகச் சிறந்த ஆனந்தத்தைக் கொண்டவனே.

**430. ஶ்ரீ ஸம்வத்ஸராய நம:**
**ப்ரீதியோக்3யஸுதனந்தெ ப்ரீதி பாத்ர ப4க்தரிகெ3**
**நதி3 ஸிந்து4 ஸம்யோஜனத3ந்தெ ஸுக2காரி நீனு**
**ஆது3த3ரிம் 'ஸம்வத்ஸர' எந்தெ3னிபி நமோ எம்பெ3**
**வேதா3தி3ப்ராப்ய ஸுக2தா3 கால ஸம்வத்ஸர நியந்தா**

அன்பிற்கு பாத்திரரான மகனைப் போல, உன் பக்தர்களுக்கு கங்கையைப் போல அபாரமான சுகத்தை கொடுப்பவன் நீ. ஆகையால் 'ஸம்வத்ஸர' எனப்படுகிறாய். உனக்கு என் நமஸ்காரங்கள். வேதாதிகளால் அறியப்படுபவனே. காலனே. ஸம்வத்ஸரங்களை நியமிப்பவனே.

**431. ஶ்ரீ த3க்ஷாய நம:**
**உத்தமத்3ருட4வாத3 ஶர ருஜீகாத3ந்திருவ**
**அதித்3ருட4னு நீ 'த3க்ஷனெந்தெ3னிபி' நமோ எம்பெ3**
**அதிபராக்ரமி நீனு க்ஷோணியலி த3ஸ்யுக3ள**
**வதெ4 மாள்பி ஶீக்4ரதி3 ஜனார்த்3த4ன து3ர்கே3ஶ கல்கி**

உத்தமமான, திடமான இருப்பவன் நீ. தக்ஷனே. உனக்கு என் நமஸ்காரங்கள். நீ மிகவும் பராக்ரமி. நொடிப்பொழுதில் எதிரிகளை நீ சீக்கிரமாக அழிக்கிறாய். ஜனார்த்தனனே. துர்க்கையின் தலைவனே. கல்கியே.

**432. ஶ்ரீ விஶ்ராமாய நம:**
**ப3லஶாலி ஶத்ருக3ள ஹிம்ஸக 'விஶ்ராம' நமோ**
**எல்லோனு எந்தி3கு3 லேஶவு ஶ்ரம நினகெ3 இல்ல**
**ஶீ3ல ப4க்தரிகெ3 ஶ்ரம பா3ரதெ3 மாடு3வி நீனு**
**கலுஷ ஶைவக3ள பா3தெ4 களெவி ஸுக்ஞானவீவி**

வலிமையான எதிரிகளை அழிப்பவனே. விஶ்ராமனே உனக்கு என் நமஸ்காரங்கள். உனக்கு எப்போதும் எப்படியும் சிரமம் என்பதே இல்லை. உன்னுடைய பக்தர்களுக்கு என்றும் சிரமமே வராமல் நீ செய்விக்கிறாய். அனைத்து கஷ்டங்களையும், துக்கங்களையும் நீ பரிகரிக்கிறாய். உண்மையான ஞானத்தை அருள்கிறாய்.

**433. ஸ்ரீ விஶ்வத$^3$க்ஷிணாய நம:**
**தே$^3$வாதி$^3$க$^3$ளல்லி ஸ்வேச்செயிந்த$^3$ ப்ரகடனாகு$^3$வி**
**'விஶ்வத$^3$க்ஷிண' நமோ ஜக$^3$த்ஸ்ருஷ்ட்யாதி$^3$ ஸர்வத$^3$லி**
**தே$^3$வ நீ ஸமர்த்த$^2$ நினகெ$^3$ ஸமரு அதி$^4$கரு**
**யாவ கால தே$^3$ஶத$^3$ல்லு இல்ல ஸ்ரீபதி ஸர்வேஶ**

தேவர்களில் நீ உன் இஷ்டப்படியே வெளிப்படுகிறாய். விஶ்வ தக்ஷிணனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஜகத் ஸ்ருஷ்ட்யாதி அனைத்து செயல்களிலும் நீயே ஸமர்த்தன். தேவனே. உனக்கு சமமானவர்கள், அதிகமானவர்கள் என எந்த காலத்திலும், எந்த தேசத்திலும் யாரும் இல்லை. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. சர்வேஶனே.

**434. ஸ்ரீ விஸ்தாராய நம:**
**விஸ்த்ருதவாகி$^3$ருவ ப$^3$ர்ஹிக$^3$ள் யக்ஞத$^3$லி வுள்ள**
**'விஸ்தார' நமோ எம்பெ$^3$ யக்ஞ ஸாத$^4$னஸ்வாமி யக்$^3$ஞ**
**விஸ்த்ருதவாகி$^3$ஹவு நின்னய யஶஸ் லோகத$^3$ல்லி**
**ஸாது$^4$ ப$^4$க்தபரிபால தை$^3$த்ய கலிஜன ஹந்தா**

தர்ப்பைகளில், யக்ஞங்களில் அபாரமாக இருப்பவனே. விஸ்தாரனே. உனக்கு என் நமஸ்காரங்கள். யக்ஞத்திற்கான ஸாதனனே. யக்ஞங்கள் சிறப்பாக முடிய, உன்னுடைய புகழ் உலகத்தில் அதிகமாக பரவுகின்றன. ஸாதுக்களை, பக்தர்களை காப்பவனே. தைத்ய ஜனர்களை அழிப்பவனே.

**435. ஸ்ரீ ஸ்தா$^2$வராய நம:**
**யுத்$^3$த$^4$ ப்ரஸக்த ப$^4$க்தரிகெ$^3$ ப$^3$லாதி$^3$க$^3$ள ஈவு**
**த்ராதா 'ஸ்தா$^2$வர' நமோ ப$^3$ல வீர்ய தேஜாதி$^3$பூர்ண**
**பத்மஜாண்ட$^3$வ நிர்மிஸி தத$^3$ந்தஸ்த$^2$ வஸ்துக$^3$ள**
**உத்பாதி$^3$ஸி ஆதா$^4$ரனாகி$^3$ருவி ஸத்தாதி$^3$ தா$^3$தா**

தகுதியான பக்தர்களுக்கு தக்க பலன்களை அருள்பவனே. ஸ்தாவரனே. உனக்கு என் நமஸ்காரங்கள். பல, வீர்ய, தேஜஸ் ஆகியவற்றை முழுமையாகக் கொண்டவனே. இந்த பிரம்மாண்டத்தை நிறுவி, அனைத்து வஸ்துக்களையும் படைத்து, அவை அனைத்திற்கும் ஆதாரமாக இருக்கிறாய். அவை அனைத்திற்கும் சக்தியை கொடுப்பவனே.

**436. ஸ்ரீ ஸ்தா$^2$ணவே நம:**
**ப$^4$க்தரிகெ$^3$ ப$^3$லாதி$^3$க$^3$ளன்ன கொட்டு ப$^4$க்தர்க$^3$ள**
**ப$^3$தியல்லி இருவி நீ 'ஸ்தா$^2$ணு' நமோ நமோ எம்பெ$^3$**
**ப$^4$க்தவர ருத்$^3$ராந்தர்யாமித்வதி$^3$ ஸஹ நீ ஸ்தா$^2$ணு**
**எந்து$^3$ ஹேளுவரு ஸ்தா$^2$ணு முக்$^2$யவாச்ய நீனே**

பக்தர்களுக்கு பலன்களைக் கொடுத்து, அவர்களின் அருகிலேயே இருக்கிறாய். ஸ்தாணுவே உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்களில் சிறந்தவரான ருத்ரனில் நீ அந்தர்யாமியாக இருப்பதாலும், ஸ்தாணு என்று அழைக்கப்படுகிறாய். ஸ்தாணு என்றால் உண்மையான / முதன்மையான அர்த்தம் நீயே.

**437. ஸ்ரீ ப்ரமாணாய நம:**

**ஶத்ருக3ளிகெ3 ப3ஹு ஹெச்சு து3க்க2ப்ரத3 'ப்ரமாணம்'**
**ஶிர பா3கி3 நமோ எம்பெ3 முர நரகாதி3 ஹந்தா**
**க்ரூர ஆதி3 ஹிரண்யாக்ஷ மது4 கைடபாதி3க3ள**
**தரிதி3 பூ4த4ர ஹயாஸ்யாதி3ரூப ப4க்தபால**

எதிரிகளுக்கு அதிகமான துக்கத்தை கொடுப்பவனே. ப்ரமாணனே. உனக்கு தலை வணங்கி நமஸ்காரம் செய்கிறேன். முர, நர ஆகிய தைத்யர்களை கொன்றவனே. ஆதி ஹிரண்யாக்ஷ, மது கைடப ஆகிய தைத்யர்களை கொன்றாய். ஹயவதனனே. பக்தர்களை அருள்பவனே.

**438. ஸ்ரீ பீ3ஜாய நம:**

**விஶேஷதி3 ப4க்தரிகெ3 ஸுக2வீவி 'பீ4ஜம்' நமோ**
**மத்ஸ்யாதி3 ரூபதி3ம் ஸத்யவ்ரத ஸூரவ்ருந்த3மனு**
**கிஶோர கஷ்யப ஜாயா பி3ராம்ஹணரு விபீ4ஷண**
**யஶோத3 பாண்ட3வ ஸத்3ப4க்த த4ர்ம ஸுக2காரண**

உன் பக்தர்களுக்கு விசேஷமான சுகத்தை (முக்தியை) கொடுப்பவனே. பீஜனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஸத்ய வ்ரத ராஜனுக்கு மத்ஸ்ய ரூபத்தினால் அருளியவனே. மனுவிற்கு, கஷ்யப ரிஷிகளுக்கு, விபீஷணனுக்கு, யசோதைக்கு, பாண்டவர்களுக்கு என உன் சத் பக்தர்களின் சுகத்திற்கு காரணம் ஆனவனே.

**439. ஸ்ரீ அவ்யயாய நம:**

**நம்ம ரத2க3ளன்ன கஷ்டவில்லதெ3 ஶத்ருக3ள**
**ஸமூஹ முந்தெ3 நடெ3ஸுவ 'அவ்யயம்' நமோ எம்பெ3**
**நம்ம தே3ஹரதா2ந்தஸ்த2னு விஷய ரூப ஶத்ரு**
**நம்மன்ன பா3தி4ஸதெ3 காய்வ பார்த்த2ஸாரதி2 கிருஷ்ண**

நம் தேகம் என்னும் ரதத்தினை எதிரிகளின் முன்னே எவ்வித கஷ்டமும் இல்லாமல் நடத்துபவனே. அவ்யயனே. உனக்கு என் நமஸ்காரங்கள். நம் தேகம் என்னும் ரதத்தில் இருப்பவனே. விஷய ரூபனே. எதிரிகள் நம்மை தாக்காமல், காப்பவனே. ஸ்ரீபார்த்தசாரதியே ஸ்ரீகிருஷ்ணனே.

**440. ஸ்ரீ அர்த்தா2ய நம:**

**ஹரித்3வேஷிக3ள ஸங்க3ப4ய நிவாரிப 'அர்த்த2'**
**ஶரணு நமோ ஶரணு ப4க்தரன்ன போஷிஸுவி**
**பொரெதி3 விபீ4ஷணனன்ன ராவண ஸங்க3தி3ந்த3**
**ஸுரரன்ன பிரஹ்லாத3ன்ன ஹரித்3வேஷி தை3த்யனிந்த3**

ஹரி த்வேஷிகளின் சங்கம் என்னும் பயத்தினை போக்குபவனே. அர்த்தனே. உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னை சரணடைந்த பக்தர்களை நீ காக்கிறாய். விபீஷணனை, ராவணனின் சங்கத்திலிருந்து காத்தாய். பிரகலாதனை ஹரித்வேஷியான ஹிரண்யகசிபுவிடமிருந்து காத்தாய்.

**441. ஸ்ரீ அனர்த்தா2ய நம:**
**ப்ராணக3ளல்லி ஆத3ரதி3 விஹாரமாள்ப முக்2ய**
**ப்ராணனன்ன ஞான அன்னாதி3யல்லி ப்ரவர்த்திஸுவ**
**'அனர்த்த2' நமோ வாயுதே3வர அஷ்ட அர்த்த2 நீனே**
**நீ அப4க்தரிகெ3 அர்த்த2ப்ரத3னல்ல ப4க்தேஷ்டதா3**

அனைத்து பிராணர்களிலும் இருந்து செயல்களை செய்விக்கிறாய். முக்யபிராணரை, ஞான, அன்னம் ஆகியவற்றில் இருக்குமாறு செய்கிறாய். அனர்த்தனே உனக்கு என் நமஸ்காரங்கள். அஷ்ட கர்த்ருத்வங்களை செய்பவன் நீயே. உன்னை வணங்காதவர்களுக்கு (அபக்தர்களுக்கு) நீ அவர்களின் இஷ்டங்களை வழங்குவதில்லை. பக்தர்களுக்கு அவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுகிறாய்.

**442. ஸ்ரீ மஹாகோஷாய நம:**
**மஹாத4ன ஸமூஹபூர்ண 'மஹாகோஷனே' நமோ**
**மஹா ஜ்யோதிர்மய ஆனந்த3 ப3லாதி3 பூர்ண**
**மஹாலக்ஷ்மி மாயா ஜயாக்ருதி ஶாந்திதே3வி ஸேவ்ய**
**மஹான் அன்னமயாதி3 ரூப 'ஸத்யம் ஞானம் அனந்தம்'**

மஹா தனங்களின் சமூகங்களை முழுமையாக கொண்டவனே மஹாகோஷனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஜ்யோதிர்மயனே. ஆனந்த பலாதிபூர்ணனே. மஹாலட்சுமி, மாயா, ஜயா, க்ருதி, ஶாந்திதேவி ஆகியோரால் வணங்கப்படுபவனே. அன்னமயாதி அனைத்து கோஷங்களிலும் இருப்பவனே. ஸத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம என்று அழைகப்படுபவனே.

**443. ஸ்ரீ மஹாபோ4கா3ய நம:**
**விபுல ஆனந்த3மய ஸ்வரூப நீ ஸோமபான**
**தி3ம் புட்டுவ மஹாஸுக2போ4க3 லீலானுப4விப**
**ஸ்ரீபதே 'மஹாஸுக2போ3க3' நாம்னனே நமோ எம்பெ3**
**ஸுபூர்ணானந்த3த்வதி3ந்த3 மஹாபோ4க3னு நீனேவெ**

எப்போதும் ஆனந்தமய ஸ்வரூபனாக இருப்பவனே. ஸோமபானத்தினால் பிறக்கும் மஹா சுகபோகத்தினை அருள்பவனே. அனைத்தையும் உன் லீலைகளால் அனுபவிப்பவனே. ஶ்ரீபதியே. மஹாஸுகபோக என்னும் பெயர் கொண்டவனே உனக்கு என் நமஸ்காரங்கள். பூர்ணானந்தத்தைக் கொண்டிருப்பதால் – மஹாபோகன் நீயே ஆகிறாய்.

**444. ஶ்ரீ மஹாத$^4$னாய நம:**
**உரு உதா$^3$ர த$^4$னதா$^3$தா 'மஹாத$^4$ன' நமஸ்தே**
**வர ப$^4$க்தரிகெ$^3$ தெ$^3$ய்வி ஸம்பத்ப்ரதா$^3$தனு புண்ய**
**ஜாரிகெ$^3$ பஶு புத்ர தா$^3$ரா தா$^4$ன்ய த்$^3$ரவ்யாதி$^3$க$^3$ள**
**ஹரி ப்ரீதி ஸாத$^4$னோபியோக$^3$ த$^4$னவன்ன ஈவி**

மிகச் சிறந்த கருணாமயி, செல்வங்களை அளிப்பவனே. மஹாதனனே உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னுடைய பக்தர்களுக்கு அற்புத செல்வங்களை வழங்குபவனே. புண்யவந்தர்களுக்கு, பசு, புத்திரர்களை வழங்குபவனே. தானிய, திரவ்யாதிகளை ஹரி ப்ரீதிக்கான ஸாதனங்கள் என்று நினைத்து பயன்படுத்துபவர்களுக்கு செல்வங்களை அளிப்பவனே.

**445. ஶ்ரீ அனிர்விண்ணாய நம:**
**தோ$^3$ஷோஜ்யுத ஸதா$^3$ நீ தோ$^3$ஷக$^3$ந்த$^4$லேஶவு இல்ல**
**ஈஷத்$^3$பி ந்யூனதெ இல்லத$^3$ ஸர்வாங்க$^3$ ஸுந்த$^3$ர**
**புஷ்கல சின்மய ஸாக்ஷாத் மன்மத$^2$ மன்மத$^2$: நீனு**
**அஷோக ஷுக்ர 'அனிர்விண்ண' பூர்ணானந்த$^3$ நமஸ்தே**

தோஷங்கள் அற்றவனே. உனக்கு தோஷங்கள் சிறிதும் இல்லை. சிறிதும் குறைவு அற்றவனே. ஸர்வாங்கனே. ஸுந்தரனே. அபாரமானவனே. சின்மயனே. மன்மதனைவிட மன்மதன் நீயே. சோகங்கள் அற்றவனே. அனிர்விண்ணனே. பூர்ணானந்தமயனே. உனக்கு என் நமஸ்காரங்கள்.

**446. ஶ்ரீ ஸ்த$^2$விஷ்டாய நம:**
**உத்தமோத்தமகு$^3$த்தமனிகெ$^3$ உத்தமனு ஸர்வேஶ**
**அதிஸ்தூ$^2$ல அப்ராக்ருத 'ஸ்த$^2$விஷ்டனே' நமோ எம்பெ$^3$**
**சதுர்த$^3$ஶ பு$^4$வன அந்தர்ப$^3$ஹிர்வ்யாப்த ஈஶனே**
**வந்தே$^3$ ஶ்ரீகூர்ம ஶ்ரீவிஷ்ணு ஶ்ரீஶிம்ஶுமார புருஷ**

ஸர்வோத்தமனே. ஸர்வேஶனே. திடமானவனே. அப்ராக்ருதமானே. ஸ்தவிஷ்டனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஈரேழு பதினான்கு உலகங்களிலும், உள்ளும் வெளியுமாக அனைத்து இடங்களிலும் வ்யாப்தனே. ஈஶனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஶ்ரீகூர்மனே, ஶ்ரீவிஷ்ணுவே. ஶ்ரீஶிம்ஶுமாரனே புருஷனே.

**447. ஸ்ரீ பு4வே நம:**
**ஸ்ரீ மனோஹர பரம ஏக ஈஶ ஸ்வதந்த்ரனு நீ**
**அமல உரு ஸச்சக்தி ஸத்தாவந்த 'பூ4:' நமஸ்தே**
**ஸ்ரீ மத்து பி3ரம்மஶிவாதி3 ஸர்வரு நின்னாதீ4னரு**
**கூர்ம விஷ்ணு ஶிம்ஶுமார ஸர்வாதா4ர ஶாஶ்வத்பூர்ண**

ஸ்ரீமனோஹரனே. ஸர்வோத்தமனே. ஸ்வதந்த்ரனே. அபாரமான சிறந்த சக்தியை கொண்டவனே. புவே உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ரீலட்சுமிதேவி, பிரம்ம, சிவன் ஆகிய அனைவரும் உன்னுடைய அதீனர்களே ஆவர். கூர்மனே. விஷ்ணுவே. ஶிம்ஶுமாரனே. அனைவருக்கும் / அனைத்திற்கும் ஆதாரகனே. நிரந்தரமான. பூர்ணனே.

**448. ஸ்ரீ த4ர்மயூபாய நம:**
**ஸோம ஸம்ஸர்க்க3தி3ம் ஸ்வீகரிஸி பானமாள்பி யோக3**
**க்ஷேமாதி3 ஸம்ரக்ஷணெ மாள்ப 'த4ர்மயூப' நமஸ்தே**
**த4ர்மஸ்தா2பக தா4ரக ப4க்தமனத3ல்லி நிந்து**
**த4ர்மஸாத4ன கெ3யிஸி யக்ஞபூஜெ கொம்பெ3 ப2லதா3**

ஸோம ரஸத்தினை ஏற்றுக் கொள்பவனே. பக்தர்களின் நலன்களை காப்பவனே. தர்மயூபனே. உனக்கு என் நமஸ்காரங்கள். தர்மத்தை நிறுவுபவனே. அனைவருக்கும் ஆதாரகனே. பக்தர்களின் மனதில் நின்று, தர்ம ஸாதனைகளை செய்வித்து, யக்ஞங்கள், பூஜைகள் ஆகியவற்றை செய்து கொண்டு, தக்க பலன்களை கொடுப்பவனே.

**கு3ருக3 மத்4வக3 ஸரஸிஜாஸனபித ஸ்ரீஶ**
**விரஜ கல்யாணதம ஸுகு3ணாப்3தி4 ஸர்வகர்த்த**
**'ஸ்ரீப்ரஸன்ன ஸ்ரீனிவாஸ' ஸஹஸ்ர நாமனே நமோ**
**நீ ரசிஸி நுடிஸித்3து3 அர்ப்பிதவு ப்ரீதனாகோ3 ||ப**

**|| ஆறாம் ஸந்தி முடிந்தது ||**
**|| ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து||**

***

**ஏழாம் ஸந்தி**

**கல்யாணதம ரூப அனக4 ஸுகு3ணார்ணவனெ**
**மாலக்ஷ்மிபதி பி3ரம்ம விஶ்வாக்2ய விஷ்ணு வஷட்கார**
**ஶீல ஜீவோத்தம வர வாயு பி3ரம்மதா4மன ஹ்ருத்**
**கீலாலஜாந்தஸ்ய பரமாத்ம கேஶவ நமஸ்தே ||ப**

**449. ஸ்ரீ மஹாமகா2ய நம:**
**மஹாஹிம்ஸெ மாடு3வவர்க3ளன்னு ஸீளுவவனு**
**'மஹாமக2' நமோ எம்பெ3 த4ர்மக்கு யக்ஞக்கு ஸ்வாமி**
**மஹாமுனி யக்ஞஹிம்ஸக தாடக ஸுபா3ஹுவ**
**மஹா அஸுர கேஶி பகாதி3க3ளன்ன முரிதி3**

பிறரை துன்புறுத்துபவர்களை கொல்பவனே. மஹமகனே. உனக்கு என் நமஸ்காரங்கள். தர்மங்களுக்கும், யக்ஞங்களுக்கும் நீயே ஸ்வாமியாக இருக்கிறாய். மஹாமுனிவனே. யக்ஞத்தை தடை செய்தவர்களான தாடக, ஸுபாஹு, கேஶி, பக ஆகிய மஹா அஸுரர்களை கொன்றவனே.

**450. ஸ்ரீ நக்ஷத்ரனேமினே நம:**
**நக்ஷத்ர எந்த3ரெ அனஷ்வர அனஷ்வரகர்மா**
**'நக்ஷத்ரனேமி' நீ மாடு3வி நமோ எம்பெ3 நினகெ3**
**நக்ஷத்ர ஜ்யோதிஸ்சக்ர ஆதா4ர ஈஷ ஶிம்ஶுமார**
**நக்ஷத்ர நாஶரஹித ப4க்தர்க்கெ3 ஸ்வாமி ஆதா4ர**

நக்ஷத்ர என்றால் நிரந்தரமானவன். நிரந்தரமான செயல்களை செய்பவன். நக்ஷத்ரநேமி. நீயே இத்தகைய செயல்களை செய்கிறாய். உனக்கு என் நமஸ்காரங்கள். ஜ்யோதிஷ் சக்ரத்திற்கு ஆதாரகனே. ஈஶனே. ஶிம்ஶுமாரனே. அழிவில்லாதவனே. பக்தர்களுக்கு ஸ்வாமியே நீயே ஆதாரமானவன்.

**451. ஸ்ரீ நக்ஷத்ரிணே நம:**
**ஆபா3தி4த கர்மவுள்ள 'நக்ஷத்ரீ' நமோ நினகெ3**
**பாபபுண்ய கர்மகாரி பூ4ஜனர வோலு அல்ல**
**ஸ்ரீப நீ ஸத்யஸங்கல்ப ஆபா3தி4த ஸர்வகர்தா**
**தீ3ப்த ரவி ஸோம தாராதி3க3ளிகெ3 ஆஶ்ரயனு**

தனக்கு எவ்வித பாதிப்புகளும் இல்லாத கர்மங்களை செய்பவனே. நக்ஷத்ரிணே உனக்கு என் நமஸ்காரங்கள். பாப, புண்ய கர்மங்களை மக்கள் மூலமாக செய்விப்பவனே. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. நீ ஸத்யஸங்கல்பன். அனைத்து வித கர்மங்களை செய்பவன். ஒளி பொருந்தியவனே. சூரியன், சந்திரன், நட்சத்திரங்களுக்கு ஒளி கொடுப்பவனே, ஆதரவு அளிப்பவனே.

**452. ஸ்ரீ க்ஷமாய நம:**
**ஸமர்த்த2னாகி3ருவி நீ 'க்ஷம' நமோ நமோ எம்பெ3**
**ஸமரு அதி4கரு எல்லு எந்தி3கு3 இல்லவந்தா2**
**ஸமர்த்த2 நீனேவெ ஸர்வகார்ய த3க்ஷனாகி3ருவி**
**ஸம்யக் பூர்ண ஐஸ்வர்ய ஸ்ரீயஶஸ் வைராக்3ய ஞான வீர்ய**

அனைத்து வித கர்மங்களையும் செய்யும் சமர்த்தனாக இருக்கிறாய். நீ க்ஷம எனப்படுகிறாய். உனக்கு என் நமஸ்காரங்கள். உனக்கு சமமானவர்களோ, அதிகமானவர்களோ என்றும் இல்லை. நீயே ஸாமர்த்தியம் கொண்டவன். அனைத்து காரியங்களையும் செய்வித்து, அதனை பார்ப்பவன் நீயே. பூர்ணமானவனே. செல்வம், புகழ், வைராக்கியம், ஞானம், வீரியம் ஆகியவற்றை அளிப்பவனே.

**453. ஸ்ரீ க்ஷாமாய நம:**

**கோ3 நிரோத4ன சே2தி3ஸுவவனு நீ ‘க்ஷாம’ நமோ**
**ஸ்வர்ணாக்ஷ ஆதி3தை3த்யன்ன கொந்தி3 பூ4மி உத்3த4ரனே**
**க்ஷோணிதா3னி நீ ப3லிய நூகி நாக ஸக்ர கி3த்தி**
**கிருஷ்ண வராஹ வடு வேதோ3த்3த4ர மத்ஸ்ய ஹயாஸ்ய**

பசுக்களை காப்பவனே. நீ க்ஷாம எனப்படுகிறாய். உனக்கு என் நமஸ்காரங்கள். ஹிரண்யாக்ஷ என்னும் ஆதி தைத்யனை நீ கொன்றாய். பூமியை காத்தவனே. அசுரனான பலியை நீ மிதித்து, பாதாள லோகத்திற்கு அனுப்பினாய். கிருஷ்ணனே. வராகனே. வாமனனே. வேதங்களை காத்தவனான மத்ஸ்யனே. ஹயக்ரீவனே.

**454. ஸ்ரீ ஸமீஹனாய நம:**

**செந்தா3கி3 ப4க்தர அபீ4ஷ்ட பூர்ண மாடு3வ சேஷ்டா**
**வந்தனு ‘ஸமீஹன’ நமோ நமோ எம்பெ3 நினகெ3**
**சேதனாசேதன ஸர்வத்ர இத்து க்ருதிமாடி3ஸி**
**ப4க்தக்ருத் பூஜெகொ3லிது3 மோக்ஷஸ்தா2னக்கெ வொய்யுவி**

பக்தர்களின் விருப்பங்களை நன்றாக நிறைவேற்றுபவனே. அனைத்து செயல்களையும் செய்பவனே. ஸமீஹனனே. உனக்கு என் நமஸ்காரங்கள். சேதன, அசேதன ஆகிய அனைத்திலும் இருந்து, செயல்களை செய்விப்பவனே. பக்தர்கள் செய்யும் பூஜைக்கு மகிழ்ந்து தரிசனம் அளிப்பவனே. அவர்களை மோட்சத்திற்கு அனுப்புபவனே.

**455. ஸ்ரீ யக்ஞ இஜ்யாய நம:**

**யக்3ஞத3லி பூஜ்ய நீனு ‘யக்3ஞ இஜ்ய’ நமோ எம்பெ3**
**யக்3ஞபோ4க்தா ஆது3த3ரிம் யக்3ஞ நீனு யக்3ஞத3லி**
**பூஜ்யனாது3த3ரிம் இஜ்ய நீனு யஜனீய**
**யக்3ஞகர்தா யக்3ஞகாரக நின்ன ப்ரீதிகெ3 யக்3ஞ**

யக்ஞத்தில் நீயே பூஜ்யனாக இருக்கிறாய். யக்ஞ இஜ்யனே உனக்கு என் நமஸ்காரங்கள். யக்ஞத்தை ஏற்றுக் கொள்பவனே. ஆகையாலேயே, யக்ஞ இஜ்ய என்று அழைக்கப்படுகிறாய். யக்ஞத்தை செய்விப்பவன். யக்ஞத்தை செய்பவன். உன் ப்ரீதிக்காகவே யக்ஞங்கள் செய்யப்படுகின்றன.

**456. ஶ்ரீ மஹேஜ்யாய நம:**
**ப4க்தரனு மஹாபராதி4யாத3ரு காபாடு3வ**
**மத்து அபராதி4 அப4க்தரன்னு நீ த்யஜிஸுவி**
**ப4க்தேஷ்ட 'மஹேஜ்ய' நமோ ஶ்ரீ மத்து பி3ரம்மாதி3 பூஜ்ய**
**பூ4தே3வி ஶ்ரீதே3வி ஸமேத நாராயண வராஹ**

பக்தர்கள், அவர்கள் தவறுகளை செய்தாலும் காப்பாற்றுபவனே / அருள்பவனே. பக்தர்கள் அல்லாதவர்களின் தவறுகளை தண்டிப்பவனே. மஹேஜ்யனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஶ்ரீலட்சுமிதேவி, பிரம்மா முதலானவர்களால் வணங்கப்படுபவனே. ஶ்ரீதேவி, பூதேவி சமேத நாராயணனே. வராகனே.

**457. ஶ்ரீ க்ரதவே நம:**
**ப4க்தரிகெ3 ஸுக2 ஒத3கி3ஸுவ 'க்ரதவே' நமோ**
**ஜக3த்ஸ்ருஷ்டி பாலனாதி3க3ள கர்தா சேஷ்டகனு**
**ஶ்ரீகரனெ நீ பூர்ணக்ஞானாத்மா ஆது3த3ரிம் க்ரது**
**அகளங்க ஸுக2சித் ப்ரகாஶமய ப4க்தத்ராதா**

பக்தர்களுக்கு சுகத்தை கொடுப்பவனே. க்ரதவே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஜகத் ஸ்ருஷ்டி, காத்தல் ஆகிய செயல்களை செய்பவனே. ஶ்ரீகரனே. நீ பூர்ணஞானத்தைக் கொண்டிருப்பதால், எவ்வித களங்கங்களும் இல்லாதவன். சுக சித் மற்றும் ஒளிமயமானனே. பக்தர்களை காப்பவனே.

**458. ஶ்ரீ ஸத்ராய நம:**
**பூர்ணாயுஷ்யவ ஒத3கி3ஸி ஈவ 'ஸத்ராம்' நமோ**
**ஹனும மார்க்கண்டே3ய ப3லி விபீ4ஷணாஷ்வத்தா2ம**
**இன்னு ப3ஹு மஹாத்மரிகெ3 சிரமாயுஷ்யவித்தி**
**நின்ன ப4க்தர்கெ3 ஆயுஷ்யவ்ருத்3தி4 மாள்பி கருணாளோ**

முழுமையான ஆயுளை அருள்பவனே. ஸத்ராயா. உனக்கு என் நமஸ்காரங்கள். ஹனும, மார்க்கண்டேய, பலி, விபீஷண, அஷ்வத்தாம என இன்னும் பல மஹாத்மர்களை சிரஞ்சீவி ஆக்கியவனே. உன் பக்தர்களுக்கும் அவர்களின் ஆயுளை அதிகரிப்பாயாக. கருணாமூர்த்தியே.

**459. ஶ்ரீ ஸதாங்க3தயே நம:**
**ஸாது4 ஸஜ்ஜனரிகெ3 தா3ன கொடுவுத3ரல்லி நீ**
**பு3த்3தி4வுள்ளவ 'ஸதாங்க3தி' நமோ நமோ நினகெ3**
**ஹே த3யாநிதே4 மாத4வனே நீ ஞானிப4க்த ப்ராப்ய**
**ஸதா3க3ம ஹொக3ளுத்தெ ஸூரிப்ராப்ய ஸூர்யனெந்து3**

ஸாது ஸஜ்ஜனர்களுக்கு தானம் கொடுப்பதில் (அருள்வதில்) நீ அறிவாளி. ஸதாங்கனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஹே கருணைக்கடலே. மாதவனே. நீ ஞானிகளால், பக்தர்களால் அறியப்படுபவன். ஞானிகளால் அறியப்படும் சூரியன் நீ என்று வேதங்கள் உன்னை போற்றுகின்றன.

**460. ஸ்ரீ ஸர்வத$^3$ர்ஶினே நம:**
**ப$^4$க்தருக$^3$ளிகெ$^3$ தா$^3$னகொடு$^3$வத$^3$க்கோஸ்கர நீ**
**ஸர்வத்$^3$ரவ்ய இட்டுகொண்டி$^3$ருவி ‘ஸர்வத$^3$ர்ஶி’ நமோ**
**இந்து$^3$ ரவி ஶங்க$^2$நிதி$^4$ பத்$^3$மநிதி$^4$ த்$^3$ரவ்யத$^4$ன**
**ப்ரத$^3$ கைக$^3$ளுள்ளவ ஸ்ரீ ஹ்ரீ யுக் ஸ்ரீகர விபஸ்த$^2$**

பக்தர்களுக்கு அருள்வதற்காகவே, நீ அனைத்து த்ரவ்யங்களையும் உன்னிடம் வைத்துக் கொண்டிருக்கிறாய். ஸர்வதர்ஶியே. உனக்கு என் நமஸ்காரங்கள். சூரிய சந்திரனே. சங்கு, பத்ம, த்ரவ்ய, செல்வம் ஆகியவற்றை அருளும் கைகளைக் கொண்டவனே. ஸ்ரீகரனே.

**461. ஸ்ரீ விமுக்தாத்மனே நம:**
**விஶேஷ லாப$^4$யுக் த்$^3$ரவ்யப்ரத$^3$ ‘விமுக்தாத்மா’ நமோ**
**ஸ்ரீஶன பூஜாதி$^3$ ஸேவெகு$^3$ ஹரிப$^4$க்த ஸேவெகு$^3$**
**விஶேஷதி$^3$ உபயோக$^3$ லாப$^4$ மோக்ஷ ஸாத$^4$னவு**
**விஶேஷஸுக$^2$ முக்தரிகெ$^3$ ஸ்வாமியு விமுக்தாத்மா**

விசேஷமான லாபங்களை கொடுக்கும் த்ரவ்யங்களை கொடுப்பவனே. விமுக்தாத்மனே. உனக்கு என் நமஸ்காரங்கள். பூஜை, ஹரிபக்த சேவை ஆகியவற்றிற்கு மோட்சத்தையே அளிப்பவனே. முக்தர்களுக்கு ஸ்வாமியே. விமுக்தாத்மனே.

**462. ஸ்ரீ ஸர்வக்$^3$ஞாய நம:**
**ஸர்வக்$^3$ஞானவுள்ளந்தா$^2$ ‘ஸர்வக்$^3$ஞ’ நமோ நமோ எம்பெ$^3$**
**ஸர்வகால ஸர்வதே$^3$ஶ ஸர்வ விஷய ஞானவு**
**ஸர்வஸம்பூர்ணதி$^3$ அனாலோசனெயு நினகு$^3$ண்டு**
**ஸ்வதந்த்ரதி$^3$ ஞானியு க்ஞ ஸர்வவஸ்துக்ஞ ஸர்வக்ஞ**

அனைத்திலும் ஞானம் உள்ளவனே. ஸர்வக்ஞனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஸர்வ காலத்தைப் பற்றியும், ஸர்வ தேசத்தைப் பற்றியும், ஸர்வ விஷயங்களைப் பற்றியும் ஞானத்தைக் கொண்டவனே. அனைத்திலும், முழுமையான ஞானம் உனக்கு உண்டு. ஸ்வதந்த்ரனே. ஞானியே. அனைத்து வஸ்துகளைப் பற்றியும் ஞானம் உள்ளவனே. ஸர்வக்ஞனே.

**463. ஸ்ரீ ஞானாய நம:**

**ஸர்வக்$^3$ஞராத$^3$ பி$^3$ரம்மாதி$^3$க$^3$ள சேஷ்டகனு ‘ஞானம்’**
**ஸர்வதா$^3$ நமோ நினகெ$^3$ ஸக்ஞானாதி$^3$க$^3$ள் தே$^3$ஹிமே**
**ஸ்ரவணாதி$^3$ஜ ஞானவொத$^3$கி$^3$ அபரோக்ஷவித்து**
**ஸர்வத$^3$லி நீ இஷ்டஞான ஜ்வலிஸி பாலிஸுவி**

ஸர்வக்ஞர்களான பிரம்மாதிகளை செயல்களை செய்விப்பவனே. ஞானனே. உனக்கு என் நமஸ்காரங்கள். எனக்கு யதார்த்த ஞானத்தை அருள்வாயாக. ஸ்ரவணங்களால் ஞானத்தை அருளி, அபரோக்ஷத்தை அளிப்பவனே. அனைத்திலும் நீ உன் இஷ்டப்படியே இருந்து அனைவரையும் காக்கிறாய்.

**464. ஸ்ரீ உத்தமாய நம:**
**உத்க்ருஷ்டஸ்ரேயஸ்ஸு ஒத$^3$கி$^3$ஸி கொடு$^3$வந்தவனு**
**‘உத்தமம்’ நமோ நமோ நமோ எம்பெ$^3$ ஸ்ரீ ஸ்ரீனிவாஸ**
**ப$^4$க்தரிகெ$^3$ இஹபரத$^3$ல்லி ஸுக$^2$வொத$^3$கி$^3$ஸி**
**முக்தரிகெ$^3$ நீ அதிஶயானந்த$^3$ ஒத$^3$கி$^3$ஸுவி**

மிகச்சிறந்த புகழினை அருள்பவனே. உத்தமனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ரீனிவாஸனே, உன் பக்தர்களுக்கு இஹ பரங்களில் சுகத்தை அருள்பவனே. முக்தர்களுக்கு நீ மிகச்சிறந்த ஆனந்தத்தை அருள்கிறாய்.

**465. ஸ்ரீ ஸுவ்ரதாய நம:**
**யாவதோ$^3$ஷவு இல்லத$^3$ ஸுந்த$^3$ர ஶுப$^4$கர்மக$^3$ள்**
**‘ஸுவ்ரத’ நீ மாடு$^3$வி நமோ எம்பெ$^3$ ஸதா$^3$ நினகெ$^3$**
**தி$^3$வ்யஶோப$^4$னவு ஜக$^3$த் ஸம்ரக்ஷணாதி$^3$ கர்மவு**
**வ்ரதவு தத் கர்தா ஸுவ்ரத ஶோப$^4$னகர்த நீனு**

நீ செய்யும் செயல்களில் எவ்வித தோஷங்களும் இருப்பதில்லை. ஸுவ்ரதனே. உனக்கு என் நமஸ்காரங்கள். உலகத்தை காப்பதான செயல்களை நீ செய்கிறாய். அதுவே உன் விரதம். அனைத்து மங்களங்களையும் அருள்பவனே.

**466. ஸ்ரீ ஸுமுகா$^2$ய நம:**
**ஒள்ளே குது$^3$ரெயு மொத$^3$லாத$^3$ யோக்$^3$ய போக்$^3$யவஸ்து**
**க$^3$ளன்னு தாராளவகி$^3$ கொடு$^3$வ ‘ஸுமுக$^2$’ நமோ**
**கலங்கவில்லத$^3$ ஸுந்த$^3$ரதம முக$^2$லாவண்ய**
**மாலோல நீ ப$^4$க்தரலி க்ருபாத்$^3$ருஷ்டி பீ$^3$ருவெயோ**

குதிரை முதலான யோக்ய வஸ்துகளை தாராளமாக அருள்பவனே. ஸுமுகனே. உனக்கு என் நமஸ்காரங்கள். களங்கம் இல்லாத அழகான முகத்தை கொண்டவனே.

ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. பக்தர்களில் உன்னுடைய கருணைப் பார்வையை வீசுவாயாக.

**467. ஸ்ரீ ஸூக்ஷ்மாய நம:**
**உத்க்ருஷ்ட வேகா3தி3 மங்க3ள லக்ஷணவுள்ள ஒள்ளே**
**ஜாதி குது3ரெ ஒடெ3யனெ 'ஸூக்ஷ்மனே' நமோ எம்பெ3**
**குது3ரெக3ளல்லி நால்கு ஜாதி ஹய வாஜி ஆர்வ**
**சதுர்த்த2 அஶ்வவு அஶ்வக்கெ அதிஶயவேக3**

மிகவும் வேகம் கொண்ட, நல்ல லட்சணங்களைக் கொண்ட, குதிரைகளை கொண்டவனே. ஸூக்ஷ்மனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஹய, வாஜி, ஆர்வ மற்றும் அஶ்வ. இதில் அஶ்வ என்பது அதிசமான வேகத்தை கொண்டதாகும்.

**468. ஸ்ரீ ஸுகோ4ஷாய நம:**
**காம்யயக்ஞ ஸோமரஸவுள்ளவ 'ஸுகோ4ஷ' நமோ**
**காமரஹித பூஜெயக்ஞ ஸ்தோத்ராதி3 அர்ப்பிதவ**
**ப்ரேமதி3ந்த3 ஸ்வீகரிஸுவி ஸகாமதி3 அர்ப்பித**
**ஸோமரஸவ ப்ரீதி இல்லதெ3 நீனு இட்டுகொம்பி**

ஸோமரஸத்தை கொண்டவனே. ஸுகோஷனே உனக்கு என் நமஸ்காரங்கள். எவ்வித விருப்பமும் இல்லாமல் செய்யப்படும் பூஜை, யக்ஞ, ஸ்தோத்திரங்களை அன்புடன் ஏற்றுக் கொள்பவனே. பிரதிபலனை எதிர்ப்பார்த்து செய்யப்படும் செயல்களை நீ அன்பு இல்லாமல் ஏற்றுக் கொள்கிறாய்.

**469. ஸ்ரீ ஸுஹ்ருதா3ய நம:**
**ஸுக2பூர்ண ஹ்ருத3யவுள்ள 'ஸுஹ்ருத3' நமோ எம்பெ3**
**ஸுக2ஸாத4ன வேதா3தி3க3ள கோ4ஷ மாள்ப ப4க்த**
**ஸுக2ப்ரத3 உதா3ரமனஸ்ஸுள்ள ஸுஹ்ருத3 நீனு**
**ஸுபூர்ண ஸுக2ரூப நிர்தோ3ஷனு ஸு2கப்ரதா3த**

சுகமயமான இதயத்தைக் கொண்டவனே. ஸுஹ்ருதயனே உனக்கு என் நமஸ்காரங்கள். மோட்சத்திற்கான சாதனான வேதங்களை சொல்லும் பக்தர்களுக்கு, மோட்சத்தை அருளும் கருணை உள்ளம் கொண்டவன் நீ. பூர்ணனே. ஸுக ரூபனே. நிர்தோஷனே. சுகத்தை கொடுப்பவனே.

**470. ஸ்ரீ ஸுஹ்ருதே3 நம:**
**ஸம்பூர்ண க்3ரஹிஸுவனு ப4க்தக்ருத ஸ்துதியன்ன**
**ஸ்ரீப 'ஸுஹ்ருத்' நமோ நினகெ3 ஈ ஸ்தோத்ர ஸ்வீகரிஸோ**
**ஶோப4னஸுபூர்ண மனஸ்ஸுள்ளவனு ஸுஹ்ருத் நீனு**
**ஸ்வப4க்த க்ருதஸேவெ ஸ்வீகரிஸி ஶோப4னவீவி**

பக்தர்கள் செய்யும் ஸ்துதிகளை முழுமையாக ஏற்றுக் கொள்பவனே. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே. ஸுஹ்ருதனே உனக்கு என் நமஸ்காரங்கள். இந்த ஸ்தோத்திரத்தையும் ஏற்றுக் கொள். மங்களகரமானவனே. பூர்ணமான மனஸ் உள்ளவனே. பக்தர்கள் செய்யும் சேவைகளை ஏற்றுக் கொண்டு, அவர்களை அருள்பவனே.

**471. ஸ்ரீ மனோஹராய நம:**

**ஸோமப்ராஶன மாடு³வ 'மனோஹர' நமோ நமோ**
**ப்ரேமதி³ந்த³ ப⁴க்தரு அர்ப்பிஸுவ பூஜாத்³ரவ்ய**
**ஸுபவித்ர நைவேத்³ய வஸ்துக³ள ஸ்வீகரிஸுவி**
**கோ³பிகாதி³ ப⁴க்தமன நின்னல்லி நெலஸிகொண்டி³**

ஸோமரஸத்தினை ஏற்றுக் கொள்ளும் மனோஹரனே உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்கள் அர்ப்பிக்கும் பூஜா த்ரவியங்களை, பவித்ரமான நைவேத்ய பொருட்களை அன்புடன் ஏற்றுக் கொள்கிறாய். கோபிகையர்கள் முதலான பக்தர்களின் மனம் உன்னில் நிலைத்திருக்கிறது.

**472. ஸ்ரீ ஜிதக்ரோதா⁴ய நம:**

**ஸோமகா⁴தக பக்ஷியனு ஜயிஸுவ ஶ்யேன**
**எம்ப³ பக்ஷியுள்ள 'ஜிதக்ரோத⁴னே' நமோ நினகெ³**
**ப்ரேமதி³ ப⁴க்தரு அர்ப்பிப பூஜா கா⁴தக தை³த்ய**
**ஸமூஹவ பராஜய மாள்ப ப்⁴ருத்யருள்ளவனு**

ஸோம காதக என்னும் பறவையை வெல்வதான கருடனைக் கொண்டிருப்பவனே. ஜிதக்ரோதனே. உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தியுடன், அன்புடன் பக்தர்கள் அர்ப்பணம் செய்யும் த்ரவ்யங்களை ஏற்றுக் கொள்பவனே. தைத்ய சமூகத்தினை வெல்பவனே. பக்தவத்ஸலனே.

**473. ஸ்ரீ வீரபா³ஹவே நம:**

**அதி உத்தம வேத³ அபி⁴மந்த்ரித ஸோமரஸ**
**ஹிததி³ ஸ்வீகரிஸுவ 'வீரபா³ஹு' நமோ எம்பெ³**
**க்ஷத்ரியோத்தம ராஜருக³ளந்தஸ்த²னாகி³ நீனு**
**க்ஷிதிய பாலிஸுவி ராஜராஜேஷ்வரனே ஸ்வராட்**

மிகச் சிறந்ததான, வேதங்களால் அபிமந்த்ரணம் செய்யப்பட்ட, ஸோமரஸத்தினை அன்புடன் ஏற்றுக் கொள்பவனே. வீரபாஹுவே. உனக்கு என் நமஸ்காரங்கள். க் ஷத்ரியர்களில் உத்தமரான அரசர்களில் அந்தர்யாமியாக இருந்து நீ உலகத்தை காக்கிறாய். ராஜராஜேஷ்வரனே. விஸ்வரூபனே.

**474. ஸ்ரீ விதா³ரணாய நம:**

**அஹிம்ஸ்யனு 'விதா$^{3}$ரண' நமோ எம்பெ$^{3}$ ப$^{3}$லபூர்ண**
**மஹானந்த$^{3}$ப்ரசுர நீ மஹிஷீயரிகு$^{3}$ கோ$^{3}$பீ**
**மஹாப$^{4}$க்த ஞானிஸமூஹக்கெ 'ணம்' ஸுக$^{2}$ப்ரதா$^{3}$தா**
**மஹாதை$^{3}$த்ய ஹிரண்யகஶிபுன ஸீள்தி$^{3}$ ந்ருஹரே**

அஹிம்ஸ்யனே. விதாரணனே உனக்கு என் நமஸ்காரங்கள். பலபூர்ணனே. ஆனந்தமயனே. உன் மனைவிகளுக்கும், மஹா பக்தர்களான கோபிகை முதலான பக்தர்களுக்கும் சுகத்தை கொடுப்பவனே. மஹா தைத்யனான ஹிரண்யகசிபுவை கொன்றவனான ஸ்ரீநரசிம்மனே.

**475. ஸ்ரீ ஸ்தா$^{2}$பனாய நம:**
**ப$^{4}$க்தரிகெ$^{3}$ ஸுக$^{2}$வொத$^{3}$கி$^{3}$ஸுவ 'ஸ்தா$^{2}$பன' நமோ**
**ப$^{4}$க்தரிகெ$^{3}$ ஆனந்த$^{3}$ நித்$^{3}$ரா ப்ரவர்த்தகனு நீனு**
**அதி உத்தமானந்த$^{3}$மய ஸ்வப$^{4}$க்தரிகெ$^{3}$ ஸுக$^{2}$**
**தா$^{3}$தா ஸுபாலக ஆப ஸர்வவந்த்$^{3}$ய ஸ்வாமி நீனு**

பக்தர்களுக்கு சுகத்தை கொடுக்கும் ஸ்தாபனனே உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்களுக்கு ஆனந்த நித்ரையை அருள்பவனே. தன் பக்தர்களுக்கு உத்தமமான ஆனந்தமய சுகத்தை (மோட்சத்தை) அருள்பவனே. அனைவரையும் காப்பவனே. அனைவராலும் வணங்கப்படுபவனே. ஸ்வாமியே.

**476. ஸ்ரீ ஸ்வவஶாய நம:**
**ஸ்வதந்த்ரனு 'ஸ்வவஶ' நமோ அனன்யாதீ$^{3}$ன நீனு**
**ஸதா$^{3}$ ஸ்வேச்சா ப்ரவ்ருத்தனு ஸர்வவன்னு நின்ன வஶ**
**அதீ$^{3}$னவாகி$^{3}$ட்டு கொண்டி$^{3}$ருவ ஸ்வாமித்வதி$^{3}$ந்த$^{3}$ ஸ்வ**
**உத்தமத்வ வ ஸுக$^{2}$ரூபத்வ ஶ ஹீகெ$^{3}$ ஸ்வவஶ**

ஸ்வதந்த்ரனே. ஸ்வவஶனே. உனக்கு என் நமஸ்காரங்கள். யாருக்கும் நீ அதீனம் இல்லை. எவ்வித பலனும் இன்றி அனைத்து செயல்களையும் செய்பவன். அனைத்தையும் உன் வசமே / அதீனமே வைத்துக் கொண்டிருப்பவனே. ஸர்வோத்தமனே. ஸுகரூபனே.

**477. ஸ்ரீ வ்யாபினே நம:**
**நானா ரூபவந்த பூர்ணைஶ்வர்ய 'வ்யாபீ' நமோ எம்பெ$^{3}$**
**ஆனந்த$^{3}$ரூபனு நீனு நின்ன ஈ ஶக்தியிந்த$^{3}$**
**அனந்த ஜீவரொளு ஸர்வவஸ்துக$^{3}$ளொளித்$^{3}$து$^{3}$**
**நீனு தத்ஸத்தா ஶக்தி ப்ரவ்ருத்யாதி$^{3}$க$^{3}$ளன்னீவி**

பற்பல ரூபங்களை கொண்டவனே. முழுமையான செல்வங்களை கொண்டவனே. வ்யாபினே உனக்கு என் நமஸ்காரங்கள். ஆனந்தரூபனே. உன்னுடைய இந்த

சக்தியினால் நீ அனைத்து ஜீவர்களிலும், அனைத்து பொருட்களிலும் இருந்து, அந்தந்த ஜீவர்களுக்கும் / பொருட்களுக்கும், சக்தியினை கொடுக்கிறாய்.

**478. ஸ்ரீ நைகாத்மனே நம:**
**ப்ரத்யுபகார மாடு$^{3}$வரு இல்லவந்த$^{2}$வ 'நைகாத்ம'**
**ஸதா$^{3}$ நமோ ஸம்பூர்ணைஶ்வர்ய ஆனந்தா$^{3}$தி$^{3}$ ஸ்வரூப**
**ஆப்தகாமா ஸ்வப்ரயோஜன விவர்ஜித அனந்த**
**அத்பு$^{4}$தமஹிமனு ஸ்வரத ஸ்வதந்த்ர ஸ்ரீரமண**

எதையும் பிரதிபலன் பார்க்காமல் உதவி செய்பவனே. நைகாத்மனே. உனக்கு என் நமஸ்காரங்கள். முழுமையான ஐஸ்வர்யங்களை ஆனந்தாதி ஸ்வரூபத்தினை கொண்டவனே. ஆப்தகாமனே. உன் செயல்களால் உனக்கு எவ்வித பிரயோஜனங்களும் இல்லை. அனந்தமான, அற்புதமான மகிமைகளை கொண்டவன். ஸ்வதந்த்ரனே. ஸ்ரீரமணனே.

**479. ஸ்ரீ அனேக கர்மக்ருதே நம:**
**நின்ன ப$^{4}$க்தர பித்ராதி$^{3}$க$^{3}$ள்கெ$^{3}$ ஸுக$^{2}$வாஸதா$^{3}$தா**
**'அனேக கர்மக்ருத்' நமோ ஸ்ருஷ்ட்யாதி$^{3}$கர்த நீனு**
**நின்ன ப$^{4}$க்த ப்ரஹ்லாத$^{3}$ன பித்ராதி$^{3}$க$^{3}$ள்கெ$^{3}$ ஸத்க$^{3}$தி**
**ஸுக$^{2}$ஸ்தா$^{2}$ன வித்தி வர தா$^{3}$னாதி$^{3}$ கர்மக்ருத் நீனு**

உன் பக்தர்களின் பித்ரு வரிசைகளுக்கு சுகமான இருப்பிடத்தை தருபவனே. அனேக கர்மக்ருதே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ருஷ்ட்யாதி அனைத்து செயல்களையும் செய்பவனே. உன் பக்த பிரகலாதனின் பித்ருகளுக்கு ஸத்கதியை அளித்தவனே. அனைத்து செயல்களையும் செய்பவனே.

**480. ஸ்ரீ வத்ஸராய நம:**
**நீனு எல்லு ஸமவாகி$^{3}$ இருவி 'வத்ஸர' நமோ**
**ஸ்தா$^{2}$னபே$^{4}$த$^{3}$தி$^{3}$ நின்னய பூர்ணத்வக்கெ பே$^{4}$த$^{4}$வில்ல**
**கிருஷ்ண நின்ன காருண்ய ஏனெம்பெ$^{3}$ வத்ஸக$^{3}$ள காய்தி$^{3}$**
**விஷ்ணுராதன்ன பொரெதி$^{3}$ அஸுர வத்ஸன்ன ஸீள்தி$^{3}$**

அனைத்து இடங்களிலும், அனைவரிலும் நீ பாரபட்சம் இன்றி இருக்கிறாய். வத்ஸரனே உனக்கு என் நமஸ்காரங்கள். உன் அவதார, ரூபங்களிடையே பூர்ணத்வத்திற்கு பேதம் இல்லை. கிருஷ்ணனே உன் காருண்யத்தை நான் என்னவென்று புகழ்வேன்?. பசுக்களை காத்தவனே. அபிமன்யுவின் மகனான பரிக்ஷித்தை (விஷ்ணுராத) காத்தாய். அசுரர்களை அழித்தாய்.

**481. ஸ்ரீ வத்ஸலாய நம:**
**கா$^{3}$யத்ரி ஸோமாதி$^{3}$க$^{3}$ள ஸ்வீகரிஸுவ 'வத்ஸலா'**

**தோயஜாக்ஷனே நமோ கா3னத்ராணகர்த கோ3பால**
**காயவாங்மனதி3ந்த3 ப4க்தி பெ3ளஸுவவரிகெ3**
**த3யவ பாலிஸி இஹபரதி3 ஸுக2கொடு3வி**

காயத்ரி மந்திரங்களை, ஸோமரஸங்களை ஏற்றுக் கொள்பவனே. வத்ஸலனே. உனக்கு என் நமஸ்காரங்கள். தாமரைக் கண்ணனே. உலகத்தை காப்பவனே. கோபாலனே. உடல், வாக்கு, மனஸ் ஆகியவற்றால் பக்தியை வளர்ப்பவர்களுக்கு அருள் புரிந்து, இஹ பரங்களில் சுகத்தை கொடுப்பவனே.

**482. ஸ்ரீ வத்ஸினே நம:**
**ஸுதா1தி3 பரிவாரவந்தனு ‘வத்ஸீ’ நமோ எம்பெ3**
**பத்மப4வ வாயு ஶிவ ப்ரத்3யும்னாதி3 ஸுத2 ஸேவ்ய**
**வத்ஸி எந்தெ3னிஸுவி ஸ்ரீவத்ஸத4ரனாது3த3ரிம்**
**வத்ஸக3ளன்ன ஸதா3 ஸம்ரக்ஷிஸுதி கோ3பால**

மகன் ஆகியோர்களைக் கொண்ட பரிவாரத்தை கொண்டவனே. வத்ஸினே உனக்கு என் நமஸ்காரங்கள். பிரம்மா, வாயு, ருத்ரர், பிரத்யும்னன் முதலான மகன்களால் வணங்கப்படுபவனே. வத்ஸி எனப்படுபவனே. ஸ்ரீவத்ஸதரன் ஆகையால், பசுக்களை எப்போதும் காப்பவனே. கோபாலனே.

**483. ஸ்ரீ ரத்னக3ர்ப்பா4ய நம:**
**ப4க்தரிகெ3 இச்சிதவ ஈவ மனஸ்ஸுள்ளவனு**
**‘ரத்னக3ர்ப்ப4னே’ நமோ ஸ்ரீகர நாராயண ஹ்ரீ ஸ்ரீ**
**யுக்த நீ க3ருடோ3பரி குளிது கைக3ளிம் சாசி**
**ரத்ன த4னத்3ரவ்ய கொடு3வி ப4க்தரிகெ3 க்ருபெயிம்**

பக்தர்கள் விரும்புவதை அளிக்கும் மனம் கொண்டவனே. ரத்னகர்ப்பனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ரீகர நாராயணனே. நீ கருடனில் அமர்ந்து, உன் திருக்கரங்களால் ரத்ன, செல்வங்களை உன் பக்தர்களுக்கு கருணையுடன் அருள்கிறாய்.

**484. ஸ்ரீ த4னேஷ்வராய நம:**
**த4னாதி3பதியாகி3 க்ருத்ஸாதி3 ரிஷிக3ள மாள்பி**
**த4னேஶ்வர நமோ த4னநியாமக த4ன ஸ்வாமி**
**த4னாதி3க3ள நீ நிர்வ்யாஜ ப4க்தரிகெ3 தே3வஶர்ம**
**ஞானிரைக்வ ஸுதா4மாதி3க3ளிகி3த்தி நீனாகி3யே**

க்ருத்ஸ முதலான ரிஷிகளை தனாதிபதியாக ஆக்கினாய். தனேஶ்வரனே உனக்கு என் நமஸ்காரங்கள். செல்வங்களை நியமனம் செய்பவனே. நிர்வ்யாஜ பக்தர்களுக்கு செல்வங்களை அளிப்பவனே. தேவஶர்மா, சுதாமா ஆகிய பக்தர்களுக்கு நீ அருளினாய்.

**485. ஸ்ரீ த4ர்மக்ருதே நம:**
**ஸந்தி4 ஸம்ப3ந்த4 மாடு3வவ த4ர்மக்ருத் நமோ எம்பெ3**
**ஸாது4 ஸஜ்ஜனர ஸம்ப3ந்த4 மாடி3ஸி ஹரிப4க்தி**
**வ்ருத்3தி4யாகி3 த்வத்ப்ரஸாத3 இத்து ஸலஹுவியோ நீ**
**ஸாது4 ப4க்த வாஞ்சிதவ பூரெயிஸுவியோ ஸ்ரீஶ**

நல்ல ஸம்பந்தங்களை செய்பவனே. தர்மக்ருதே உனக்கு என் நமஸ்காரங்கள். ஸாது ஸஜ்ஜனர்களின் சம்பந்தத்தினை செய்து, ஹரிபக்தியை வளர்த்து, உன்னுடைய பிரசாதங்களை கொடுத்து, அருள்கிறாய். அனைத்து பக்தர்களின் விருப்பங்களை நீ நிறைவேற்றுவாய். ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே.

**486. ஸ்ரீ த4ர்மகு3பே நம:**
**ப4க்த ரக்ஷக நீனு 'த4ர்மகு3ப்' நமோ நமோ எம்பெ3**
**வேத3 த4ர்ம ஆசரிஸுவ ஸுஜனபோஷக நீனு**
**யுதி3ஷ்டிராதி3 பாண்ட3வர ஸம்ரக்ஷிஸிதி3 மத்து**
**விது3ரோத்3த4வாதி3 ப3ஹுப3ஹு ப4க்தஸம்ரக்ஷக**

பக்தர்களை காப்பவனே. தர்மகுபே உனக்கு என் நமஸ்காரங்கள். வேத, தர்மங்களை பின்பற்றும் ஸஜ்ஜனர்களை காப்பவன் நீ. யுதிஷ்டிரன் முதலான பாண்டவர்களை காத்தாய். மற்றும், விதுர, உத்தவ ஆகிய பற்பல பக்தர்களை காத்தாய்.

**487. ஸ்ரீ த4ர்மிணே நம:**
**மஹாத்ம்யவந்த நீனு த4ர்மீ நமோ எம்பெ3 நினகெ3**
**மஹா நின்னய நிர்தோ3ஷகு3ண க்ரியாதி3க3ளெல்ல**
**மஹாத்மவு ஸ்வரூப த4ர்ம அனந்தவாகி3ஹவு**
**மஹாத4ர்மக3ளு நின்ன அதீ4னவு ஸர்வத3லு**

பெரும் மகிமைகளை கொண்டவன் நீ. தர்மிணே உனக்கு என் நமஸ்காரங்கள். உன்னுடைய நிர்தோஷ குணங்கள், செயல்கள் அற்புதமானவை. உன்னுடைய ஸ்வரூப தர்மம் அனந்தமானது. அனைத்து மஹா தர்மங்களும் உன் அதீனமானவையே.

**488. ஸ்ரீ ஸத3ஸக்ஷராய நம:**
**யக்ஞஷாலாத3ல்லித்த3 ஸோமா முத3தி3ந்த ஸ்வீகாரா**
**யக்ஞபு4க் நீ மாள்பி ஸத3ஸக்ஷர நமோ நமோ நினகெ3**
**ஸர்வக்3ஞ நீ மூர்தா1மூர்த்தக3ள ஸ்ருஷ்டிஸ்தி2திலய**
**முக்2யகாரணனு ஸத3ஸக்ஷர எந்தெ3னிஸுவி**

யக்ஞசாலையிலிருந்து உன்னுடைய பங்கினை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்பவனே. யக்ஞங்களை நீயே செய்விக்கிறாய். ஸதஸக்ஷரனே உனக்கு என் நமஸ்காரங்கள். ஸர்வக்ஞனே. உருவம் / அருவம் என அனைத்தையும் நீயே படைத்தாய். நீயே அனைத்திற்கும் முக்கிய காரணன். ஆகையால் ஸதஸக்ஷர எனப்படுகிறாய்.

**489. ஞீ அக்ஷராய நம:**
**ப4க்தக்ருதஸ்தோத்ர அங்கீ3கரிஸுவவ 'அக்ஷரம்'**
**ஸதா3 நமோ என்ன ஹொரஒளகித்3து3 மாடி3ஸுவ**
**ஸ்தோத்ரக்3ரந்தக3ள நீ த3யதி3ந்த3 அங்கீ3கரிஸோ**
**ஸதா3க3ம ப்ரதிபாத்3ய நித்ய நிர்தோ3ஷ ஸுகு3ண**

பக்தர்கள் செய்யும் ஸ்தோத்திரத்தை அங்கீகரிக்கும் அக்ஷரனே உனக்கு என் நமஸ்காரங்கள். எனக்கு உள்ளே / வெளியே என இருந்து நீ செய்விக்கும் இந்த ஸ்தோத்திர கிரந்தங்களை அங்கீகரிப்பாயாக. வேதங்களால் போற்றப்படுபவனே. நிர்தோஷனே. ஸுகுணனே.

**490. ஞீ அவிக்ஞாதே நம:**
**அக்3னிகோ3க்ஷீராதி3யிம் ஸுஶோபி4த ஸோமரஸவ**
**நிக்3ரஹிஸுவி 'அவிக்ஞாதா' நமோ நமோ நினகெ3**
**நீ க3ணனெ மாட3லாரி ப்ரஸன்ன ப4க்தரபரா**
**த4க3ள க்ருபதி3 கொம்பி3 ஸுபவித்ர பூஜா த்3ரவ்ய**

அக்னி, கோக்ஷீர ஆகியற்றால் ஒளிர்வதான ஸோம-ரஸத்தை நீ புறக்கணிக்கிறாய். அவிக்ஞாதனே உனக்கு என் நமஸ்காரங்கள். உன் பிரியமான பக்தர்களின் தவறுகளை நீ மன்னிக்கிறாய். அவர்கள் அளிக்கும் பவித்ரமான பூஜா திரவியங்களை நீ ஏற்றுக் கொள்கிறாய்.

**491. ஞீ ஸஹஸ்ராம்ஶவே நம:**
**ப்ரக்2யாத த்3யாவப்ருது2வி வ்யாபகனெ 'ஸஹஸ்ராம்ஶு'**
**ப4க3வான் நமோ ஞான தேஜஸ்புஞ்ச அமிதாம்ஶு**
**ஜகி3ஜகி3ப ஜ்யோதிர்மய ஸுத3ர்ஶனதா4ரியே**
**அகளங்க ஸுக்ஞானி ப4க்தரலி ப்ரஜ்வலிஸுதி**

அனைத்து உலகங்களிலும் வ்யாபித்திருப்பவனே. ஸஹஸ்ராம்ஶனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஞான, தேஜஸ்ஸினை அபாரமான கொண்டிருப்பவனே. ஒளிர்பவனே. ஸுதர்சன சக்கரத்தை தாங்கியவனே. களங்கமற்றவனே. ஸுக்ஞானியே. பக்தர்களில் நீ ஒளிர்கிறாய்.

**492. ஞீ விதா4த்ரே நம:**
**விஶேஷேண ஸோமபான மாடு3வ 'விதா4தா' நமோ**

**விஶேஷேண தா4ரகனு நீ ஆது3த3ரிம் விதா4தா**
**ஹ்ரீ ஸ்ரீ ஸமேத க3ருடோ3பரி குளிதிருவி நீ**
**வஸுத்3ரவ்ய ரத்னாதி3க3ள ப4க்தரிகெ3 கொடு3வி**

ஸோமபானத்தை செய்பவனே. விதாத்ரே உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்தையும் தரித்திருப்பவனே. ஆகையால் நீ விதாதா எனப்படுகிறாய். லட்சுமிதேவியுடன் நீ கருடனில் அமர்ந்திருக்கிறாய். உன் பக்தர்களுக்கு நீ த்ரவ்ய, ரத்ன ஆகியவற்றை அருள்கிறாய்.

**493. ஸ்ரீ க்ருதலக்ஷ்மணாய நம:**
**யதா2யோக்3ய நியமேன ஸர்வரிந்த3 ப்ரார்த்த2னீய**
**'க்ருதலக்ஷண' நமோ ஸர்வ தே3வ நராதி3 ஸ்வாமி**
**ஜக3த்ஸ்ருஷ்டி ஸ்தி2திலய நியதி ஞான அஞ்ஞான**
**ப3ந்தமோக்ஷ கர்த்ருத்வ லக்ஷணவான் ஸர்வேஶ ஸ்ரீஶ**

அனைவராலும் அவரவர் யோக்யதைக்கேற்ப பிரார்த்தனை செய்யப்படுபவனே. க்ருதலக்ஷ்மணனே உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்து தேவ, நரர்களுக்கும் ஸ்வாமியே. ஜகத் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோக்ஷ ஆகிய அஷ்ட கர்த்ருத்வங்களையும் செய்பவனே. ஸர்வேசனே. ஸ்ரீலட்சுமிதேவியின் தலைவனே.

**494. ஸ்ரீ க3ப3ஸ்தி2நேமியே நம:**
**ஸுக2ப்ராப்தி மாடு3வவ 'க3ப3ஸ்தி2நேமியே' நமோ**
**ஸுக2ஞான ஹிதகர தேஜ:ப்ரவர்த்தக நீனு**
**ப்ரகாஶிஸுவ தேஜ:புஞ்ச சக்ர ஹிடிதி3ருவி**
**ஆர்கேந்து பா4ஸகனு ஆஶ்ரயனு ஜ்யோதிர்மயனு**

ஸுக ப்ராப்தியை கொடுப்பவனே. கபஸ்திநேமியே உனக்கு என் நமஸ்காரங்கள். சுகத்தை, ஞானத்தை, தேஜஸ்ஸினை கொடுப்பவன் நீ. ஒளிர்வதான தேஜஸ் கொண்ட சக்கரத்தை பிடித்திருப்பவன் நீ. சந்திர, சூரிய, நட்சத்திரங்களுக்கு நீயே ஒளியை கொடுக்கிறாய். ஜோதிர்மயனே.

**495. ஸ்ரீ ஸத்வஸ்தாய நம:**
**ப4க்தர மனஸலி இருவவனு 'ஸத்வஸ்த2னே'**
**ஸதா3 நமோ ப4க்திவர்த்திஸி ராஜிஸுவி ஹ்ருஜ்யோதி**
**நிர்தோ3ஷ கல்யாண கு3ண நிதி4யே நிகூட4னாகி3**
**ஸதா3 அந்தர்யாமியாகி3ருதியோ நீ ஸ்ரீஸமேத**

பக்தர்களின் மனதில் இருப்பவனே. ஸத்வஸ்தனே. உனக்கு என் நமஸ்காரங்கள். பக்தர்களில் பக்தியை வளர்த்து அங்கு நீ இருப்பாய். நிர்தோஷனே. கல்யாண

குணநிதியே. ஸ்ரீலட்சுமிதேவி சமேதனாக நீ எப்போதும் அனைவரிலும் அந்தர்யாமியாக இருக்கிறாய்.

**496. ஸ்ரீ ஸிம்ஹாய நம:**
**ரத2ஸங்க3தவாத3 அனேக அஶ்வவந்த 'ஸிம்ஹ'**
**ஸதா3 நமோ நமோ நினகெ3 ஹ்ருஷிகேஶ ஸர்வேஶ**
**மாத4வனே நீ ஸ்ரேஷ்ட நினகெ3 ஸம ஸ்ரேஷ்டரில்ல**
**மோத3மய ஸாராத்மா நிர்தோ3ஷ கு3ணபூர்ண ஸிம்ஹ**

பற்பல குதிரைகள் பூட்டப்பட்ட ரதத்தை கொண்டவனே. ஸிம்ஹனே. உனக்கு என் நமஸ்காரங்கள். ஹ்ருஷிகேஶனே. ஸர்வேஶனே. மாதவனே. நீயே சிறந்தவன். உனக்கு சமமோ, சிறந்தவரோ வேறு யாரும் இல்லை. ஆனந்தமயனே. ஸாராத்மனே. நிர்தோஷனே. குண பூர்ணனே. ஸிம்ஹனே.

**497. ஸ்ரீ பூ4தமஹேஶ்வராய நம:**
**அஶ்வோத்தம ரத2கெ ஈஶ்வர 'பூ4தமஹேஶ்வர'**
**நா ஸதா3 நமோ எம்பெ3 தே3ஹாக்ய ரதே2ஶ்வர ப்ராண**
**ஈ ஸுநாமதி3 நீ ஸ்ரீ ஹ்ரீ ஸமேத குளிதிருவி**
**ஹே ஸர்வபூ4த மஹேஶ்வரனே நமோ வாயுஸேவ்ய**

மிகச் சிறந்த குதிரைகள் கொண்ட ரதத்தை கொண்டவனே. பூதமஹேஶ்வரனே உனக்கு என் நமஸ்காரங்கள். தேகம் என்னும் இந்த ரதத்தில், லட்சுமிதேவி சகிதமான ப்ராண என்னும் பெயரில் நீ அமர்ந்திருக்கிறாய். ஸர்வபூத மஹேஶ்வரனே. வாயுதேவரால் வணங்கப்படுபவனே.

**498. ஸ்ரீ ஆதி3தே3வாய நம:**
**ப்ராத2மிகவாகி3 ஸோமபான மாள்ப 'ஆதி3தே3வ'**
**ஸதா3 நமோ யக்ஞபூஜா ஸேவா நைவேத்3யக3ளன்ன**
**மொத3லு அர்ப்பிஸல்பட்டு ஸ்வீகரிஸுவி ராஜஸூ**
**யாதி3 மொத3ல பூஜெய கொண்ட3த்3து3 லோகப்ரஸித்3த3**

முதன்முதலில் அமிர்தத்தை படைத்தவனே. ஆதிதேவனே. உனக்கு என் நமஸ்காரங்கள். யக்ஞங்கள், பூஜைகள், ஸேவைகள், நைவேத்ய அன்ன, ஆகியவை அர்ப்பிக்கப்பட்டு அதனை நீ ஏற்றுக் கொள்கிறாய். ராஜஸூயாதி யாகங்களை நீ ஏற்றுக் கொண்டது, உலகப் புகழ்பெற்ற செய்தியாக இருக்கிறது.

**499. ஸ்ரீ மஹாதே3வாய நம:**
**ப3ஹுகர்மகர்த 'மஹாதே3வ' நமோ நமோ எம்பெ3**
**மஹதா3தி3 ஸர்வபூ4த ஸ்ருஷ்டி மொத3லாத3 கர்ம**
**மஹானந்த3 லீலெயா ஸ்வதந்த்ரதி3 மாடு3வி நீனு**

**மஹி ஸ்ரீஶ ஸர்வமுக்தாமுக்த நியந்த்ரு ஸர்வேஶ**

பற்பல செயல்களை செய்பவனே. மஹாதேவனே. உனக்கு என் நமஸ்காரங்கள். மஹதாதி அனைத்து தத்வங்களை படைத்தவனே. இந்த செயல்களை உன் லீலையினால், ஸ்வதந்த்ரமாக செய்பவனே. லட்சுமிதேவியின் தலைவனே. அனைத்து முக்தர்கள், அமுக்தர்களுக்கும் நியமனம் செய்பவனே. ஸர்வேஶனே.

**500. ஸ்ரீ தே$^3$வேஶாய நம:**
**ஶத்ருக$^3$ள ஸோலிஸுவ இச்செயுள்ளவனு நீனு**
**ஸ்தோத்ர ஸ்வாமியு 'தே$^3$வேஶ' நமோ எம்பெ$^3$ சதுராத்ம**
**ஒந்தொ$^3$ந்து$^3$ அக்ஷரதொ$^3$ளிஹவு கு$^3$ணக்ரியாரூப**
**ஹே தே$^3$வதெக$^3$ள ஈஶனே ஶரனு ஶரணெம்பெ$^3$**

எதிரிகளை வெல்லும் விருப்பம் கொண்டவன் நீ. ஸ்தோத்திரம் செய்யப்படுபவனே. தேவேஶனே. உனக்கு என் நமஸ்காரங்கள். அனைத்து அக்ஷரங்களிலும் நீ இருக்கிறாய். குண, க்ரியா ரூபனாக இருப்பவனே. தேவதைகளின் ஈஶனே. உன்னை நான் வணங்குகிறேன்.

**501. ஸ்ரீ தே$^3$வப்$^4$ருதே நம:**
**த்$^3$யுதி ப$^3$லாதி$^3$க$^3$ள ஸம்பூர்ண நிதி$^4$ தா$^4$ரகனு**
**மாத$^4$வனே 'தே$^3$வப்$^4$ருத்' நமோ நமோ எம்பெ$^3$**
**நீனு தே$^3$வதெக$^3$ள தா$^4$ரகனு அவருக$^3$ள**
**த்$^3$யுதிப$^3$லாதி$^3$க$^3$ள ப்ரவர்த்தகனு ஆஶ்ரயனு**

தேஜஸ், வலிமைகளின் முழுமையான நிதியே; அவற்றை அளிப்பவனே. மாதவனே. தேவப்ருதே உனக்கு என் நமஸ்காரங்கள். நீ தேவதைகளின் தலைவனே. அவர்களின் தேஜஸ், வலிமைகளை வழங்குபவன் நீயே.

**502. ஸ்ரீ கு$^3$ரவே நம:**
**ஶிஷ்யோபதே$^3$ஶகனே 'கு$^3$ரவே' நமோ நினகெ$^3$**
**தோயஜாஸன ஆதி$^3$கவிகெ மொத$^3$லுபதே$^3$ஶ**
**ஸவ்யஸாசிகெ$^3$ கீ$^3$தெ உபதே$^3$ஶ மாடி$^3$தி$^3$ ஹாகு$^3$**
**ஶிஷ்ய ஸர்வர்கு$^3$ அனிமித்த முக்$^2$ய கு$^3$ரு நீனேவெ**

சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்பவனே. குருவே உனக்கு என் நமஸ்காரங்கள். ஆதிகவியான பிரம்மதேவருக்கு முதலில் உபதேசம் செய்தவனே. அர்ஜுனனுக்கு கீதை உபதேசம் செய்தாய். மற்றும் சிஷ்யர்கள் அனைவருக்கும் எதையும் எதிர்பார்க்காத முக்கிய குரு நீயே.

**503. ஸ்ரீ உத்தராய நம:**

**ஸம்ஸாரோத்தாரகனு ‘உத்தர’ நமோ நமோ எம்பெ3**
**ஸம்ஸாரனீகி3ஸி ஸுமோக்ஷவன்னீவி நீ முகுந்த3**
**அஸம ஸம்பூர்ண கு3ணக3ணார்ணவ அனக4னு**
**ஸ்ரீஶ ஸர்வோத்தம ஞான ப4க்தி விஷய உபாஸ்ய**

சம்சார சுழற்சியை நீக்குபவன் நீயே. உத்தரனே உனக்கு என் நமஸ்காரங்கள். சம்சாரத்தை நீக்கி மோட்சத்தை அருள்பவன் நீயே. முகுந்தனே. சமமற்ற, முழுமையான, குணங்களின் கடலே. லட்சுமிதேவியின் தலைவனே. ஸர்வோத்தமனே. ஞான பக்திகளால் வணங்கப்படுபவனே.

**504. ஸ்ரீ கோ3பதயே நம:**
**வே3தவாக்யக3ளிகெ3 ஸ்வாமி ‘கோ3பதி’ நமோ எம்பெ3**
**ஸ்ரீத4ரா து3ர்கா3தி3 நாமளு ரமாபதியு நீனு**
**ஸீதாயுக் ஸ்ரீராம கிருஷ்ண ப்ருது2 ராஜராஜேஶ்வர**
**க்ஷிதி நாக1 தே4னுக3ள பதியு கோ3பதி நீனு**

வேத வாக்கியங்களால் போற்றப்படுபவனே. கோபதயே உனக்கு என் நமஸ்காரங்கள். ஸ்ரீதரனே. துர்கா முதலான பெயர்களைக் கொண்ட ரமாதேவியின் தலைவன் நீயே. சீதையுடனான ஸ்ரீராமனே. கிருஷ்ணனே. ராஜராஜேஶ்வரனே. பூமியில் உள்ள அனைத்து பசுக்களின் தலைவன் நீயே.

**505. ஸ்ரீ கோ3ப்த்ரே நம:**
**ரிஷிக3ள ஸம்ரக்ஷிஸுவ ‘கோ3ப்தா’ நமோ நினகெ3**
**ரக்ஷண கர்த்ருத்வமுக்2யவாகி3 நின்னதே3வே ஸ்வாமி**
**ரக்ஷிஸுவி ப்ராணிக3ள ஸர்வ அவஸ்தெ2க3ளல்லி**
**ரக்ஷகனு ஸர்வ முக்தாமுக்த ஆஸ்ரயனு ஸ்ரீஶ**

ரிஷி முனிவர்களை காப்பவனே கோப்த்ரனே உனக்கு என் நமஸ்காரங்கள். அனைவரையும் காப்பவன் நீயே ஸ்வாமி. அனைத்து ப்ராணிகளையும் அனைத்து நிலைகளிலும் நீ காப்பாயாக. முக்தர்கள், அமுக்தர்கள் என அனைவருக்கும் நீயே ஆதரவாக இருக்கிறாய்.

**506. ஸ்ரீ ஞானக3ம்யாய நம:**
**ஞானாதி3 மஹாத்ம்ய பூர்ண நிதி4யாகி3ருவவனு**
**‘ஞானக3ம்யனு’ நீனு நமோ எம்பெ3 ஸதா3 நினகெ3**
**ஞானிப4க்தருக3ள்கெ3 நீ ப்ராப்யனாகி3ருவி ‘மித்2யா**
**ஞானேனச தமோஞானேனைவ பரம்பத3ம்க3ம்ய’**

